# தொல்காப்பியம் உரைவளம்

## பொருளதிகாரம்

## செய்யுளியல் பகுதி - 3




தொகுப்பும் குறிப்பும்

ஆ. சிவலிங்கனார்

# தொல்காப்பியம் உரைவளம்
## பொருளதிகாரம்
## செய்யுளியல் பகுதி - 3


தொகுப்பும் குறிப்பும்
**ஆ. சிவலிங்கனார்**






**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
**INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES**
டி.டி.டி.ஐ. (அஞ்சல்), தரமணி, சென்னை 600 113

தொல்காப்பியம்-உரைவளம்
வெளியீட்டுத் திட்டம்

வெளியீடு

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | Tolkappiyam Uraivalam<br>Ceiyuliyal Part - III |
| Subject | : | Compilation of the Commentaries of Tolkappiyam Uraivalam Ceiyuliyal PartIII |
| Editor | : | A. Sivalinganar |
| Publisher & © | : | International Institute of Tamil Studies, C.I.T. Campus, Adyar, Chennai - 600 113. |
| Publication No | : | 281 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 1998 |
| Edition | : | First |
| Paper used | : | 16kg T.N.P.L. Superfine Printing |
| Size of the Book | : | 21x 14 cms |
| No. of Copies | : | 1000 |
| No. of Pages | : | xii+272 |
| Price | : | Rs. 60/- |
| Printer | : | Annam Offset Printers,<br>25 C.N.K. Salai, Chepauk,<br>Chennai - 600 005.<br>☎ 858 8466 |

டாக்டர் ச. சு. இராமர் இளங்கோ
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை-600 113

# அணிந்துரை

**"திங்களொடும் செழும்பரிதி தன்னோடும் விண்ணோடும்
உடுக்க ளோடும்
மங்குல்கடல் இவற்றோடும் பிறந்ததமி ழுடன்பிறந்தோம்
நாங்கள்!"**

என்று பாவேந்தர் பாரதிதாசன் தமிழினத்தின் பெருமையைப் பாடுவார்.

தமிழினத் தொன்மைக்குக் கட்டியங்கூறும் தொல்காப்பியம், எழுத்துக்கும் சொல்லுக்கும் மட்டுமன்றிப் பொருளுக்கும் இலக்கணம் வகுத்த பெருமை உடையது. இதற்கு வெளிவந்த உரைகளே இதன் ஆழத்தையும், அகலத்தையும் வெளிக் கொணரும். எனவே, தொல் காப்பியத்தின் பெருமையை எடுத்தியம்பும் வகையில் உரைவளம் எழுதும் திட்டப்பணிக்காகப் பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் அவர்கள் இந் நிறுவனத்தில் 1980ஆம் ஆண்டு நியமிக்கப்பட்டார். அவருடைய முதல் திட்டப்பணி நூலான 'தொல்காப்பியச் சிறப்புப் பாயிர உரைவளம்' 27-9-80-ல் அப்போதைய மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் துணைவேந்தர் முனைவர் வ. சுப. மாணிக்கம் அவர்களால் வெளியிடப் பெற்றது.

தொடர்ந்து எழுத்ததிகாரத்திற்கும், சொல்லதிகாரத்திற்கும் அவர் தொகுத்த உரைவளம் வெளிவந்தது. பொருளதிகாரத்தில் மரபியல் 1981-லும், அகத்திணையியல் 1991-லும், கற்பியல் 1993-லும், பொருளியல், களவியல் 1994-லும், புறத்திணையியல் பகுதி-1, பகுதி-2 1996-லும், செய்யுளியல் பகுதி-1 1997-லும் வெளிவந்தன.

தொல்காப்பிய உரைவளத் திட்டத்தின் 29ஆவது **வெளியீடாகச்** செய்யுளியல் மூன்றாம் பகுதி எனும் இந் நூல் அமைகிறது.

பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் அவர்கள் நுண்மாண் நுழைபுலம் பெற்ற பெரும் புலவர்; பழம்பெரும் தொல்காப்பிய உரையாசிரியர்களான இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பேராசிரியர் ஆகியோரது உரைகளைத் தொகுத்து அவற்றுடன் தம்முடைய உரையினையும் இணைத்து இந் நூலினை அமைத்துள்ளார். தொல்காப்பியத்தில் ஆய்வினை

மேற்கொண்டு முனைவர் பட்டம் பெற்ற முனைவர் சி. இலக்குவனார் அவர்களின் ஆங்கில மொழிபெயர்ப்பையும் மேற்கோள் காட்டியுள்ளார்.

இவரது தொல்காப்பியப் புலமையைப் பாராட்டும்முகத்தான் 4, 5, 6-8-97களில் நடைபெற்ற ‘தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள்’ தேசியக் கருத்தரங்கின்போது நிறுவனம் அவருக்குத் **‘தொல்காப்பியச் செம்மல்’** என்ற விருது வழங்கிப் பாராட்டிச் சிறப்பித்தது.

இந் நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகின்ற நிறுவனத் தலைவர் மற்றும் தமிழ் ஆட்சிமொழி - பண்பாடு மற்றும் இந்துசமய அறநிலையத் துறை அமைச்சர் மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறைச் செயலாளர் திருமிகு த. இரா. சீனிவாசன், இ.ஆ.ப. அவர்களுக்கும் நிறுவனத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந் நூலின் படிகளை மெய்ப்புத் திருத்திய பெரும்புலவர் அ. நக்கீரர் அவர்களுக்கும் நூலின் முதலில் அமைந்துள்ள சூத்திர நுவல்பொருள், இறுதியில் அமைந்துள்ள சூத்திர முதற்குறிப்பு அகராதி, சொல்லகராதி ஆகியவற்றைச் செய்து தந்த திருமிகு கோ. உத்திராடம் அவர்களுக்கும், இந் நூலினைக் கவினுற அச்சடித்துத் தந்த அன்னம் மறுதோன்றி அச்சகத்திற்கும் எங்கள் நன்றி.

**இயக்குநர்**

# SYSTEM OF TRANSLITERATION

## உயிரெழுத்துகள் Vowels

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அ | - | a | எ | - | e |
| ஆ | - | ā | ஏ | - | ē |
| இ | - | i | ஐ | - | ai |
| ஈ | - | ī | ஒ | - | o |
| உ | - | u | ஓ | - | ō |
| ஊ | - | ū | ஔ | - | au |

## மெய்யெழுத்துகள் - Consonants

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| க் | - | k | ங் | - | ṅ | ய் | - | y |
| ச் | - | s | ஞ் | - | ñ | ர் | - | r |
| ட் | - | t | ண் | - | ṇ | ல் | - | l |
| த் | - | th | ந் | - | n | வ் | - | v |
| ப் | - | p | ம் | - | m | ழ் | - | l̲ |
| ற் | - | r̲ | ன் | - | n̲ | ள் | - | ḷ |

## சுருக்க விளக்கம்

அகம் - அகநானூறு
ஆசாரக் - ஆசாரக்கோவை
ஆய்ச்சி - ஆய்ச்சியர் குரவை
இ-ள் - இதன் பொருள்
இ.வி - இலக்கண விளக்கம்
இளம் - இளம்பூரணர்
இன்னா - இன்னா நாற்பது
உ-ம் - உதாரணம்
எ-டு - எடுத்துக்காட்டு
எழுத்து - எழுத்ததிகாரம்
எ-று - என்றவாறு
என்-னின் - என்னுதலிற்றோவெனின்
ஐங்குறு - ஐங்குறுநூறு
கலி - கலித்தொகை
களவழி - களவழி நாற்பது
குறள் - திருக்குறள்
குறுந் - குறுந்தொகை
சிந்தா - சீவகசிந்தாமணி
சிலப் - சிலப்பதிகாரம்
சிவ. சிவலிங்கனார்
சூ - சூத்திரம்
சூளா - சூளாமணி
செய் - செய்யுளியல்
சொல் - சொல்லதிகாரம்
குறள். திருக்குறள்
திருச்சிற் - திருச்சிற்றம்பலக் கோவை
திருவா - திருவாசகம்
தொல் - தொல்காப்பியம்
தொன் - தொன்னூல் விளக்கம்
நச் - நச்சினார்க்கினியர்
நற் - நற்றிணை
நான்மணி - நான்மணிக்கடிகை
நாலடி - நாலடியார்
நெடுநல் - நெடுநல்வாடை
ப. - பக்கம்
பட்டினப் - பட்டினப்பாலை

பதிற் - பதிற்றுப்பத்து
பரிபா - பரிபாடல்
பி.இ.நூ. - பிற்கால இலக்கண நூல்கள்
பு. வெ. மா. - புறப்பொருள் வெண்பாமாலை
புறம் - புறநானூறு
பெரும்பாண் - பெரும்பாணாற்றுப்படை
பேரா - பேராசிரியர்
பொருந - பொருநராற்றுப்படை
முத்தொள் - முத்தொள்ளாயிரம்
மு.வீ. முத்துவீரியம்
முருகு - திருமுருகாற்றுப்படை
யா.வி - யாப்பருங்கல விருத்தி
வீர - வீரசோழியம்

## சூத்திர நுவல்பொருள்

409. மாத்திரை முதலாக அடிநிலையளவும் நோக்குதலாகிய கருவி நோக்கென்று சொல்லப்படுகிறது.
410. பாவின் வகையைப்பற்றிக் கூறுகிறது.
411. பாவின் பொருள்பற்றிக் கூறுகிறது.
412. நால்வகைப் பாவும் இருவகையில் அடங்கும் என்று கூறுகிறது.
413. ஆசிரிய நடை வஞ்சி எனவும், வெண்பா நடை கலி எனவும் கூறுகிறது.
414. வாழ்த்துக்கு நால்வகைப் பாக்களும் உரியன என்று கூறுகிறது.
415. புறநிலை வாழ்த்து, கலிப்பா, வஞ்சிப்பா வாராது என்றும் ஆசிரியப்பாவும் மருட்பாவும் வரும் என்றும் கூறுகிறது.
416. வாயுறை வாழ்த்து, அவையடக்கியலும், செவியறிவுறூஉவும், புறநிலை வாழ்த்துப் போல் வரும் என்கின்றது.
417. வாயுறை வாழ்த்து வெஞ்சொல்லைச் சேர்க்காது இனிய நற்சொற்களைக் கொண்டு அமையும் எனக் கூறுகிறது.
418. அவையடக்கமாவது எல்லா மக்களுக்கும் தாழ்மையான சொற்களைக் கூறுதல்பற்றிக் கூறுகிறது.
419. செவியுறையாவது பெரியோர்களுடைய நடுவில் தாழ்ந்து ஒழுகுதல் பற்றி உணர்த்துகிறது.
420. நேரடிக்குரிய ஒரு தாழிசை, மண்டிலம், யாப்பு, குட்டம்பற்றிக் கூறுகிறது.
421. குட்டம், எருத்தடியின்கண்ணும் வரும் என்று கூறுகிறது.
422. மண்டிலமும் குட்டமும் ஆசிரியப்பாவில் பயின்று நடக்கும் என்று உணர்த்துகிறது.
423. வெண்பாவால் வருவனபற்றிக் கூறுகிறது.
424. கைக்கிளைப் பாட்டு இருபாக்களினாலும் முடியும் என்று கூறுகிறது.
425. பரிபாடல் தொகைநிலை வகையால் பா என்று சொல் பெறாமல் பொதுவாக உணர்த்துகிறது.
426. பரிபாடலின் நான்குவகை உறுப்புகளை உணர்த்துகிறது.
427. சொற்சீரடியும், முடுகியலடியும் பரிபாடலுக்கு உரியன என்று கூறுகிறது.
428. சொற்சீரடியின் இயல்புபற்றிக் கூறுகிறது.
429. அங்கதச் செய்யுள் வகையைப்பற்றிக் கூறுகிறது.
430. செம்பொருள் அங்கதம் வசையெனப் பெயர்பெறும் என்று கூறுகிறது.
431. தான் மொழியும் மொழியை மறைத்து மொழியின், அது பழிகரப்பெனக் கூறுகிறது.
432. செய்யுளின் இருவகைபற்றிக் கூறுகிறது.
433. செவியுறைச் செய்யுளின் இயல்பைக் கூறுகிறது.
434. அங்கதச் செய்யுளின் இயல்பைக் கூறுகிறது.
435. கலிப்பாவின் நான்கு வகையைக் கூறுகிறது.
436. ஒத்தாழிசைக் கலி இரண்டு வகைப்படும் என்று கூறுகிறது.
437. ஒத்தாழிசைக்கலியின் நான்கு உறுப்பினைக் கூறுகிறது.
438. தரவின் அடிவரையறையை உணர்த்துகிறது.

# பொருளடக்கம்

# தொல்காப்பியம் உரைவளம்
## பொருளதிகாரம்

### செய்யுளியல் பகுதி-3

#### 10. நோக்கு

**409.* மாத்திரை முதலா அடிநிலை காறும்**
**நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே. (100)***

**இலக்குவனார்**

416. The *nōkku* is said to be the way of viewing the composition from the unit of time to the perfection of line.

**இளம்பூரணர்**

**409. மாத்திரை முதலா............படுமே.**

*என்-னின், இது நோக்கென்னும் உறுப்பு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) மாத்திரை முதலாக அடிநிலையளவும் நோக்குதலாகிய கருவி நோக்கென்று சொல்லப்படும் என்றவாறு.

காரணமெனினுங் கருவியெனினும் ஒக்கும். நோக்குதற்காரண மென்பதனை உண்டற்றொழில் என்றாற்போலக் கொள்க.[1]

அஃதாவது யாதானும் ஒன்றைத் தொடுக்குங் காலத்துக் கருதிய பொருளை முடிக்குங்காறும் பிறிதுநோக்காது அதுதன்னையே நோக்கி நிற்கு நிலை. 'அடிநிலைகாறும்' என்றதனால் ஓரடிக்கண்ணும் பலவடிக் கண்ணும் நோக்குதல் கொள்க. அஃது ஒரு நோக்காக ஓடுதலும், பல நோக்காக ஓடுதலும், இடையிட்டு நோக்குதலும் என மூன்று வகைப்படும்.

"அறுசுவை உண்டி அமர்ந்தில்லாள் ஊட்ட
மறுசிகை நீக்கியுண் டாரும் - வறிஞராய்ச்

---

* சூத்திரத்தின் முதலில் உள்ள எண் பொருளதிகாரத் தொடர் எண்; இறுதியில் உள்ள எண் உவமவியல் தொடர் எண்.

1. நோக்குதலாகிய காரணம், உண்டலாகிய தொழில்.

சென்றிரப்பர் ஓரிடத்துக் கூழெனிற் செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று." (நாலடி.1)

இஃது ஒருநோக்காக ஓடிற்று.

"அறிமின் அறநெறி அஞ்சுமின் கூற்றம்
பொறுமின் பிறர்கடுஞ்சொற் போற்றுமின் வஞ்சம்
வெறுமின் வினைதீயார் கேண்மை எஞ்ஞான்றும்
பெறுமின் பெரியார்வாய்ச் சொல்." (நாலடி.172)

இது பலநோக்காகி வந்தது.

"உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற இமைக்குஞ் சேண்விளங் கவிரொளி
உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்தாட்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்" (முருகு.1-6)

என்றவழி 'ஒளி' என்பது அதனயற் கிடந்த தாளை நோக்காது கணவனை நோக்குதலின் இடையிட்டு நோக்கிற்று. பிறவுமன்ன. (100)

## பேராசிரியர்

**416. மாத்திரை முதலா..................படுமே.**

*இது, நிறுத்த முறையானே நோக்குணர்த்துகின்றது. நாற்சொல் வழக்கினையும் பாவிற்படுப்பது மரபென்றான். எனவே, ஆண்டு நோக்கி யுணரப்படுவதொன்றின்றிச் செய்யுளுள்ளும் வழக்கியல்பினவாகி வெள்ளைமையாய்க் காட்டுவனவாயின; அவ்வாறன்றி நோக்கென்பதோர் உறுப்புப் பெற்ற வழியே அது செய்யுளாவதாகலான் அது கூறுகின்றா னென்பது.*

(இ-ள்) மாத்திரையும், எழுத்தும், அசைநிலையும், சீரும் முதலாக அடி நிரம்புந் துணையும், நோக்குடையவாகச் செய்தல் வன்மையாற் பெறப்படுவது நோக்கென்னும் உறுப்பாவது என்றவாறு.

கேட்டார் மறித்துநோக்கிப் பயன்கொள்ளுங் கருவியை நோக்குதற் காரணமென்றானென்பது. 'அடிநிலை காறும்' என்பது, ஓரடிக்கண்ணே யன்றியுஞ் செய்யுள் வந்த அடி எத்துணையாயினும் அவை முடிகாறு மென்றவாறு; வரலாறு:

"முல்லை வைந்நுனை தோன்ற வில்லமொடு
பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ
இரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பிற்
பரலவ லடைய விரலை தெறிப்ப
மலர்ந்த ஞாலம் புலம்புறக் கொடுப்பக்

கருவி வானங் கதழுறை சிதறிக்
கார்செய் தன்றே கவின்பெறு கானங்
குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நரம்பார்ப் பன்ன வாங்குவள் பரியப்
பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுற லஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேர
னுதுக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன்
கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது
நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தட்
போதவி ழலரி னாறு
மாய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே" (அகம்.4)

என வரும். இப் பாட்டின் ஓசை முதலியனவெல்லாங் கேட்டோரை மீட்டுந் தன்னைநோக்கி நோக்கப் பயன்கொள நிற்கும் நிலைமை தெரிந்து கொள்க.

இனி, 'அடிநிலை காறும்' என்றதனாற் செய்யுண் முழுவதும் எவ்வகை யுறுப்புங் கூட்டிநோக்கி யுணருமாறுங் கூறுதும். முல்லை யென்பது முதலாகக் கானம் என்ப தீறாக நாற்சொல்லியலான் யாப்பு வழிப் பட்டதாயினும் பருவங்காட்டி வற்புறுக்குந் தோழி பருவந் தொடங்கிய துணையே காணென்று வற்புறுத்தினாளென்பது நோக்கி யுணரவைத்தா னென்பது; "உதுக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன்" என்னுந்துணையுந் தலைமகனது காதல் மிகுதிகூறி வற்புறுத்தினா ளென்பது நோக்கி யுணரவைத்தான். ஒழிந்த அடிநிலைகாறும் பிரிந்த காலம் அணித்தெனக் கூறி வற்புறுத்தினாளென்பது நோக்கி யுணரவைத்தா னெனப்படும்; என்னை? முல்லை யென்னாது 'வைந்நுனை' என்றதனான், அவை அரும்பியது அணித்தென்பது பெறப்பட்டது, சின்னாள் கழியின் வைந்நுனை யாகாது மெல் லென்னுமாகலின். இல்லமும் கொன்றையும் மெல்லென்ற பிணி யவிழ்ந்தன வென்றான், முல்லைக்கொடி கரிந்ததுணை அவை முதல் கெடாது முல்லையரும்பிய காலத்து மலர்ந்தமையின். இரலை மருப்பினை, 'இரும்பு திரித்தன்ன மருப்பு' என்றதூஉம், நீர்தோய்ந்தும் வெயிலுழந்த வெப்பந்தணிந்தில, இரும்பு முறுக்கிவிட்டவழியும் வெப்பம் மாறாதுவிட்டவாறுபோல வெம்பா நின்றன வின்னு மென்றவாறு. 'பரலவ லடைய விரலை தெறிப்ப' எனவே, பரல்படு குழிதோறுந் தெளிந்து நின்ற நீர்க்கு விருந்தினவாகலாற் பலகாலும் நீர்பருகியும் அப் பரல் அவலினது அடைகரை விடாது துள்ளுகின்றனவென அதுவும் பருவந் தொடங்கினமை கூறியவாறாயிற்று. 'கருவி வானங் கதழுறை சிதறி' என்பதூஉம் பலவுறுப்புங் குறைபடாது தொக்குநின்ற மேகந் தனது வீக்கத்திடைக் காற்றெறியப்படுதலின் விரைந்து துளிசிதறினவென்றவற் றையும் புதுமை கூறினாள். எனவே, இவையெல்லாம் பருவந் தொடங்கி யணித்தென்றமையின் வற்புறுத்துதற்கு இலேசாயிற்று. 'குரங்குளைப்

பொலிந்த கொய்சுவற் புரவி' என்பது, கொய்யாத உளை பல்கியும் கொய்த உளை பலகாலுங் கொய்ய வேண்டுதலுமுடைய குதிரை யென்றவாறு; எனவே, தனது மனப்புகழ்ச்சி கூறியவாறு. அத்துணை மிகுதியுடைய குதிரை பூட்டின வாரொலி விலக்காது மணியொலி விலக்கி வாராநின்றான். அங்ஙனம் மாட்சிமைப்பட்ட மான்றேர னாதலா னென்றவாறு. அதற்கென்னை காரணமெனின் 'துணையோடு வதியுந் தாதுண் பறவை' எனவே, பிரிதலஞ்சி யென்றவாறு. மணிநாவொலி கேட்பின் வண்டு வெருவுமாகலின் அது கேளாமை மணிநாவினை இயங்காமை யாப்பித்த மாண்வினைத் தேரனாகி வாரா நின்றானென இவையெல்லாந் தலைமகள் வன்புறைக் கேதுவாயின. 'கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது, நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தள், தெய்வமலை ஆகலான் அதனுள மன்ற காந்தளைத் தெய்வப் பூவெனக் கூறி அவை போதவிழ்ந்தாற்போல அவர் புணர்ந்த காலத்துப் புதுமணங் கமழ்ந்த நின் கைத்தொடிகள் அவை அரியவாகிப் பிரிந்தகாலத்துப் போன்று வடிவொத்து மனங் குறைபட்ட துணையேயால் அவர் பிரிந்து செய்த தன்மையினென இதுவும் வன்புறைக்கே உறுப்பாயிற்று.

இவ்வாறே பலவும் நோக்கி யுணர்தற்குக் கருவியாகிய சொல்லும் பொருளும் எல்லாம் 'மாத்திரை முதலா வடிநிலை காறும்' என அடங்கக்கூறி நோக்குதற்காரணம் நோக்கென்றானென்பது. மாத்திரை முதலாயினவுந் தத்தம் இலக்கணத்தில் திரியாது வந்தமையின் அவையும் அவ் விலக்கணம் அறிவார்க்கு நோக்கிப் பயன்கொள்ளுதற்கு உரிய வாயினவாறு கண்டுகொள்க. 'எனப்படும்' என்றதனான் இவ்வாறு முழுவதும் நோக்குதற்குச் சிறப்புடைய வெனவும் இவை யிடையிட்டு வந்தன சிறப்பிலவெனவுங் கொள்ளப்படும். பிறவும் அன்ன. (104)

## நச்சினார்க்கினியர்

**104. மாத்திரை முதலா................படுமே.**

*இது நிறுத்தமுறையானே நோக்குணர்த்துகின்றது. இது மேல் நாற்சொல்லாற் செய்யுஞ் செய்யுள் வழக்கியல்பினவாய் வெள்ளைமை கலந்து நிற்றலாகா தென்பதோ ரிலக்கணம்.*

**(இ-ள்)** மாத்திரை முதலா அடிநிறை காறும் - மாத்திரை முதலிய உறுப்புக்கொண்ட அடிநிரம்புந் துணையும், நோக்குதற் காரணம் - கேட்டோர் மீண்டு நோக்கிப் பயன் கோடலையுடையவாகச் செய்யும் கருவியை, நோக்கு எனப்படுமே - நோக்கு என்று பெயர் கூறப்படும் எ-று.

அடிநிறை காறுமென்றது ஓரடிக்கணன்றிச் செய்யுள் வந்தவடி எத்துணையானும் நின்று முடிகாறும் எ-று.

(எ-டு)"முல்லை வைந்நுனை தோன்ற வில்லமொடு
பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ
இரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பிற்
பரலவ லடைய இரலை தெறிப்ப
மலர்ந்த ஞாலம் புலம்புறக் கொடுப்பக்
கருவி வானங் கதழுறை சிதறிக்
கார்செய் தன்றே கவின்பெறு கானங்
குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நரம்பார்த் தன்ன வாங்குவள் பரியப்
பூத்த பொங்கர்த் துணையோடு வதிந்த
தாதுண் பறவை பேதுற லஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேரன்
உவக்காண் டோன்றுந் குறும்பொறை நாடன்
கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது
நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தட்
போதவி ழலரி னாறும்
ஆய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே." (அகம்.4)

'வைந்துனை' யென்றதனால் அலருந்துணையும் மெல்லென்னாது வன்மையவாய்க் கூரிதாய் நிற்றலி னரும்பி யணித்தென்பது கூறிற்று. இல்லமுங் கொன்றையும் பிணி யவிழ்ந்தனவென்றது, அவைவு மரமாதலிற் கடிதிற் கரியாவாகலிற் கடிதிற் கரிந்த முல்லைக்கு முன்னே மெல்லிய பிணியவிழ்ந்தமை கூறிற்று. காய்ந்த இரும்பு முறுக்கிவிட்டவழியும் வெப்பமாறாதவாறு போல நீர் தோய்ந்தும் வெயிலுழந்த வெப்பம் இன்னுந் தணிந்தில வென்பது தோன்ற இரும்புதிரித் தன்ன மருப் பென்றார்.

இரலை குழிதோறுந் தெளிந்துநின்ற நீர்க்கு விருந்தினவாதலிற் பலகால் நீர்பருகுதற்கும் பரலையுடைய பள்ளத்தைச் சேர நின்றது என்றதாம். இத்துணையும் பருவந் தொடங்கிய துணையே வற்புறுத்திக் கூறிற்று. புலம்பு முழுவதும் நீங்கிற்றென்னாது ஒருபுடை தோன்றப் புறக்கொடுத்த தென்றமையின் அதுவும் பருவந் தொடங்கியதுணையே கூறிற்று. தொகுதியையுடைய மேகங் காற்றின் விசையான் விரைந்த கொடுந்துளியைச் சிதறிற்றெனவே புதுமை கூறிற்று. இத்துணையும் பருவந் தொடங்கி யணித்தென்றலின் வற்புறுத்தற் கிலேசானமை நோக்கிற்று. கொய்யாத வுளை பெருகுதலும் கொய்த வுளை பல்காற் கொய்யப் பெருக வேண்டுதலுங் கூறவே குதிரை மனச்செருக்குக் கூறிற்றாம். அதன் கழுத்து வளையும்படி விசித்த வாரொலி நரம்பிற்கு ஓதிய நால்வகைக் குற்றத்தினு மார்பென்னுங் குற்றமெய்திய நரம்போசை போல விசைப்பவென்க.

பூத்த பொங்கர் என்பதனாற் பசிப்பிணி தீர நுகரும் பொருளையது குறைவறக் கொடுப்ப வுண்டு மகிழ்ந்து பின்பு தாம் நுகராநின்று

வதியுமெனவே, யாமும் இல்லற நிகழ்த்துதற்கு நுகர்தற்குமேற்ற பொருள்களைக் குறைவறப் பெற்றுப் பின் இன்பநுகர்தல் வேண்டு மென்பது கூறினாளாம். பொங்கரிற் பசிதீர்ந்து துணையொடு வதியும் பறவையுந் தாதையுண்கிற பறவையுங் கலக்கமுறுதற் கஞ்சி மணியொலியை வீக்கிய தேரனென்றதனாற் காதலும் அருளுமுடைமை யின் அவற்றின் பிரிவிற்கும் பசிக்கும் இரங்கினானெனக் கூறவே அவையவற்கும் நின்கண்ணும் பெருகுமென்றாளாம்.

வதியும் பறவை வண்டுந் தேனுமென்பதுந் தாதுண் பறவை சுரும்பென்பதும்,

"எங்கு மோடி யிடறுஞ் சுரும்புகாள்
வண்டு காள்மகிழ் தேனினங்காள்" (சிந்தா.குண.42)

எனப் பின்னுள்ளோர் கூறியவாற்றானு முணர்க.

இதனாற் சேணிடை வரவையுணர்த்தும் மணியொலியை வாரொலி கேட்கும் அணிமைக்கண்ணுங் கேளாயாயினை யெனவும் அவ் வாரொலி தாதுண்பறவை யொலிக்க ணடங்குதலின் கேட்கின்றிலை யெனவுங் கூறினாளாயிற்று. வாரொலி நரம்போசை போறலின் பெருவரவாயிற்று.

மாண்வினைத் தேரனென்றாள், அவன்றன் கருத்திற்கேற்ப வினை முடித்தமை தோன்ற; எனவே வன்புறைக்கேதுவாயின. தெய்வந் தங்கு மலையாதலின் தெய்வமணநாறுங் காந்தளினுடைய போதவிழாநின்ற மலர்போல அவர் புணர்ந்தகாலத்துப் புதுமணநாறு மரிவை யெனவே அவர் பிரிந்து சேய்த்தன்றென வன்புறைக்கேதுவாயிற்று.

ஆய்தொடி யென்றது, தோண் மெலிந்துழி அயலார்க்குப் புறமறைத்தல் வேண்டிச் செருகுந் தன்மையின்றி யணிந்த நிலையே கிடக்குந் தொடி யென்றவாறாம். இதுவும் பிரிந்து சேய்த்தன்று என்ற வாறதாம்.

ஈண்டு மாணலமென்றது அவன் பிரிவுணர்த்திய காலத்துப் பிரிவிற் குடம்பட்டாள்போன் றுடம்படாது நின்ற நலத்தை; அது மெய்ப்பாடாம்.

இங்ஙனம் கோடல் நோக்கென்று உணர்க. (104)

## சிவலிங்கனார்

**மாத்திரை..............படுமே.**

**(இ-ள்)** மாத்திரை முதல் அடிவரை கூறப்பட்டனவற்றைச் செய்யுளில் பொருட்பொருத்தமுற நோக்குதலாகிய காரணம் நோக்கு எனப்படும், எ-று.

நோக்குதலாகிய காரணம் என்றது, கூறுவான் செய்யுளைக் கேட்பவன் பயன்கொள்ளுமாறு அமையும் நோக்கத்தினை. பயன்

கொள்ளுதலாவது செய்யுட் பொருளையறிதலாகிய பயன்கொள்ளுத லோடு சொற்றொடர்ச் சிறப்பு(நயம்) முதலியன காணலும் ஆம். இதனைப் பரிமேலழகர் உரை, நச்சினார்க்கினியர் உரை முதலியவற்றிலும், திருவாய்மொழி வியாக்கியானத்தும் காண்க.

### 11. பா

**410. ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென**
**நாலியற் றென்ப பாவகை விரியே. (101)**

### இலக்குவனார்

417. The divisions of verses are said to be four which are named *āsiriyam*, *vañji*, *veṇbā* and *kali*.

### பி.இ.நூ

**யா.வி. 55**

வெண்பா ஆசிரியம் கலியே வஞ்சியெனப்
பண்பாய்ந் துரைத்த பாநான் காகும்.

**இ.வி. 726**

யா.வி. 55 சூத்திரமே

**தொன். 219**

வெண்பா அகவல் விரிகலி வஞ்சி
மருட்பா எனஐ வகைப்பா.

### இளம்பூரணர்

**410. ஆசிரியம் வஞ்சி..........................விரியே.**

*என்-னின், நிறுத்தமுறையானே பாவாமாறு உணர்த்துவான் எடுத்துக்கொண்டார். அவை யினைத்தென வரையறுத்துணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஆசிரியமெனவும், வஞ்சியெனவும், வெண்பாவெனவும், கலியெனவும் நான்கியல்பினையுடைத்து என்று சொல்வர் பாவினது வகையை விரிக்குங் காலத்து என்றவாறு.

அஃதேல் ஒருசாராசிரியர் வெண்பா ஆசிரியங் கலி வஞ்சி என ஓதினார் யாதெனின், அவரும் ஒரு பயனோக்கி யோதினார் இவரும் ஒருபயன் நோக்கி ஓதினார் என்க.

என்னை? வெண்பாவாவது பிற தளையோடு மயங்காமையானும் மிக்குங் குறைந்தும் வாராத அடியான் வருதலானும் அந்தணர் நீர்மைத்தென முற்கூறினார். அதன்பின் அந் நிகர்த்தாகிப் பிற தளையும் வந்து இனிய ஓசையையுடைத்தாய்ப் பரந்துவருதலின் அரசத் தன்மையது என்பதனான் ஆசிரியப்பாக் கூறினார். அதன்பின் அந் நிகர்த்தாகிச் சிறுபான்மை வேற்றுத்தளை விரவலின் வணிகர் நீர்மைத்தெனக் கலிப்பாக் கூறினார். அதன் பின் வஞ்சிப்பா அளவடியான் வருதலின்றிக் குறளடியுஞ் சிந்தடியுமாய் வந்து பல தளையும் விரவுதலின் வேளாண் மாந்த ரியல்பிற்றென வஞ்சிப்பாக் கூறினார். இவ் வாசிரியரும் பதினேழ் நிலத்தினும் வருதலானும் இனிய ஓசைத்தாகலானும் அடிப்பரப்பினானும் ஆசிரியப்பா முற்கூறினார். அதன்பின் ஆசிரிய நடைத்தாகி இறுதி யாசிரியத்தான் இறுதலின் வஞ்சிப்பாக் கூறினார்; இந் நிகர்த்தன்றி வேறுபட்ட ஓசைத்தாகலான் வெண்பா அதன்பின் கூறினார்; அதன்பின் வெண்சீர் பயின்று வருதலானும் வெண்பா வுறுப்பாகி வருதலானும் கலிப்பாக் கூறினா ரென வறிக. (101)

## பேராசிரியர்

**417. ஆசிரியம் வஞ்சி...............விரியே.**

"நோக்கே பாவே" (313)

*என நிறுத்தமுறையானே நோக்குணர்த்திப் பாவுணர்த்திய வெழுந்தான் அதனை இத்துணைப் பெயர் வேறுபாட்டதெனவும் பொருட்குரிமையவும் அடிக்குரிமையவு மாமாறுஞ் செய்யுட்கு வரையறைவகையான் உரியவாறும் ஒரோசெய்யுட்கண் ஒரோவுறுப்புப்பற்றி வருங்கால் அவ் வுறுப்புகள் இத்துணை யடியவாகுமெனவும் எல்லாங் கூறுவான் தொடங்கினமையின் அவற்றுள் இது, பெயர் வேறுபாடும் அஃது இனைத்தென விரியும் உணர்த்துகின்றது. இவ் வுறுப்பு வேறுபாட்டானே, உறுப்பியலாகிய செய் யுளும் இவ்வாறு பெயர் கொள்ள வைத்தானென்பது.*

(இ-ள்) ஆசிரியப்பாவும், வஞ்சிப்பாவும், வெண்பாவும், கலிப்பாவு மென நாற்கூற்றது பாக்களவற்று விரி என்றவாறு.

'வகை' என்றதனான் உறுப்பாகிய செய்யுளின் வேறுபட நோக்கி உணரப்படும் இவ் வுறுப்பெனவும், இவற்றுள் வழக்கிற்குரியன செய்யுட்கு வந்தனவும் வழக்கிற்கேயுரியவாகிக் கூறுபடுவனவும், ஒன்றொன்றனோடு விராய்ப் பிறக்கும் பகுதியுமெல்லாங் கொள்ளப்படும். பாக்கூற்று விரி நான்கெனவே, பாவினை உறுப்பாகவுடைய செய்யுட்கு வரையறை கூறிற்றிலனென்பது பெற்றாம்; என்னை? அவற்றுப் போதுங்கால் அவற்றது பெயர் வேறுபாடும் அச் சூத்திரங்களான் அறிதுமென்பது; என்றார்க்கு இவை நான்கேயன்றிப் பாவாமாறு கூறானோவெனின், இவையின்றித் தூக்குப் பிறவாமையின் இப் பாவிலக்கணமும் நோக்கோத்தினுட்

கூறினானாகலான் ஆண்டோதியவாறே அமையுமென்பது. இக் கருத்தே பற்றி,

"பாவென மொழியினுந் தூக்கினது பெயரே" (ப.1072)

என்றார் இந் நூலின் வழிநூல் செய்த ஆசிரியருமென்பது.

(உ-ம்) "உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
யலங்குகுலை யீந்தின் சிலம்பிபொதி செங்காய்
துகில்பொதி பவள மேய்க்கு
மகில்படு கள்ளியங் காடிறந் தோரே" (ஐங்குறு.)

என்பது, ஆசிரியப்பா உறுப்பாகி வந்த செய்யுள்.

"வசையில்புகழ் வயங்குவெண்மீன்
றிசைதிரிந்து தெற்கேகினும்" (பட்டினப்.1-2)

என்பது, வஞ்சிப்பா உறுப்பாகி வந்த செய்யுள்.

"வாரிய பெண்ணை வருகுரும்பை வாய்த்தனபோ
லேரிய வாயினு மென்செய்வ - கூரிய
கோட்டியானைத் தென்னன் குளிர்சாந் தணியகலங்
கோட்டுமண் கொள்ளா முலை" (முத்தொள்.71)

என்பது, வெண்பாவுறுப்பு வந்த செய்யுள்.

"அரிதாய வறனெய்தி" (கலி.11)

என்பது கலிப்பாவுறுப்பு வந்தது. பிறவும் அன்ன.

இவை இன்ன அடியான் வந்தனவென்பது என்னையறியு மாறெனின், அதுவன்றே தூக்குப் பயம்படுகின்ற இடமென்பது மூன்று பாவினை நாற்சீரானும், வஞ்சிப்பாவினை இருசீரானும் முச்சீரானுந் தூக்குக்கொண்டு இத் தூக்காமாறு உணர்ந்துகொள்க.

ஆசிரியம் வெண்பாக் கலி வஞ்சியெனச் சிறப்புமுறையாற் கூறாததென்னையெனின், அது,

"முந்து மொழிந்ததன் றலைதடு மாற்றே" (665)

என்பாரு முளர். வஞ்சிப்பா முதற்கூறாமையின் அற்றன் றென்பது.[1] மற்றென் கருதியதெனின், ஆசிரியம் வெண்பா வென்று ஓதினவை வழக்கிற்குஞ் செய்யுட்கும் உரிமையின் அவையேபோலுஞ் சிறப் புடையவென்று கொள்வானாயினும், அற்றன்று; இவை

1. தலைதடுமாற்றம் என்றால் இறுதிப் பாவாகிய வஞ்சி முற் கூறப்படவேண்டும். கூறப்படாததால் அந்த உத்தி பொருந்தாது.

செய்யுளிலக்கணமாகலான் அவை நான்கும் ஒத்த இலக்கணத்த செய்யுளென்றற்கு இம் முறையான் ஓதினானென்பது. இனி ஒருசாரார், இந் நான்கனையும் ஒன்று மூன்றாக விகற்பித்துக் கூறுப; என்னை? ஏந்திசை தூங்கிசை ஒழுகிசை என்றாற்போல; அற்றன்று; ஓரெழுத்து முதல் ஐயெழுத்துச் சீரளவும் உயர்ந்த சீரான்வருஞ் செய்யுட்கு ஒன்று ஒன்றனின் வேறுபட்டொலிக்கும்; அவ் வேறுபாடுதோறும் பாவேறுபடா; என்னை?

"எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே
குன்றலு மிகுதலு மில்லென மொழிப" (355)

என்றமையினென மறுக்க; அல்லதூஉம் அங்ஙனம் வேறுபாடு கொள்ளின் ஒரோவொன்று ஐந்தாகலுந் தூங்கலோசை ஆறும் ஏழுமாகலு முடையவென்பது. (105)

## நச்சினார்க்கினியர்

**105. ஆசிரியம் வஞ்சி...................விரியே.**

*இது, நிறுத்த முறையானே பாவென்னும் உறுப்புணர்த்துகின்றது.*

(இ-ள்) ஆசிரியப்பாவும், வஞ்சிப்பாவும், வெண்பாவும், கலிப்பாவு மென நான்கு கூற்றது பாக்கூற்று விரி எ-று.

'வகை' யென்றதனால் தூக்கின் தொடர்ச்சியாகிய இப் பாவென்னும் உறுப்பு நிகழுமோசையையும் அது நிகழுஞ் செய்யுளின் வேறுபட நோக்கிச் செய்யுட்கோ ருறுப்பென்றுணர்க வென்பதூஉம் வழக்கிற்குரியன செய்யுட்கும் உரியவாமென்பதூஉம் ஓரோர் செய்யுட்கண் ஓரோவுறுப்பு வருமாறும் ஒன்றொன்றனோடு விராஅய்ப் பிறக்கும் பகுதியும் பொருள் வரையறையும் அடிவரையறையும் எல்லாங் கொள்க.

பா நான்கெனவே, பாவினை யுறுப்பாகவுடைய செய்யுளும் நான்கென்னும் வரையறையும் அவற்றாற் பெயர்கோடலும் அச் சூத்திரங்களாற் பெறுதும்.

"தூக்கே பாவே" யென்பதற்குப் "பாவென மொழியினுந் தூக்கினது பெயரே" யென்றா ரிதன் வழிநூலோரும்.

(எ-டு) "உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
யலங்குகுலை யீந்தின் சிலம்பிபொதி செங்காய்
துகில்பொதி பவள மேய்க்கு
மகில்படு கள்ளியங் காடிறந் தோரே."

இஃதாசிரியப்பா வுறுப்பாகிய செய்யுள்.

"வசையில்புகழ் வயங்குவெண்மீன்" **(பட்டினப்.)**

இது வஞ்சியுறுப்பாகிய செய்யுள்.

"வாரிய பெண்ணை வளர்குரும்பை வாய்த்தனபோ
லேரிய வாயினு மென்செய்வ - கூரிய
கோட்டியானைத் தென்னன் குளிர்சாந் தணியகலங்
கோட்டுமண் கொள்ளா முலை."

இது வெண்பா வுறுப்பாக வந்த செய்யுள்.

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" **(கலி.)**

இது கலியுறுப்பாக வந்த செய்யுள்.

இவற்றின் பாவைத் தூக்கி யடி வரையறுத்தவாறு காண்க.

ஆசிரியப்பா வெண்பாவென முன் தூக்கிற் கூறியவாறன்றி ஆசிரியம் வஞ்சியென்று கூறினார், வழக்கிற்குஞ் செய்யுட்குமுரிய வாசிரியமும் வெண்பாவும் போலச் செய்யுட்குரிய கலியும் வஞ்சியுஞ் சிறப்பிலவோ வென் றையுறாமைக்கும் அவற்றிற்கு அவ் வையுறவுடைய வென்றற்கு மென்க. (105)

## சிவலிங்கனார்

**ஆசிரியம்....................விரியே.**

**(இ-ள்)** பாவினது வகையை விரிக்கும் காலத்து ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி என நான்கு வகையுடைத்து என்று சொல்லுவர், எ-று.

ஆசிரியம் கட்டளையடிவகையில் பதினேழ் நிலத்தும் வருதலாலும், பெரும்பான்மையாகப் பலராலும் செய்யப்படுதலாலும், அடிப்பரப்பு மிகையாலும் அகவும் இனிய ஓசை காரணத்தாலும் முன்னர்க் கூறப்பட்டது.

வஞ்சிப்பா ஆசிரிய நடைபோல் வருவதாலும், இறுதி ஆசிரிய வடிகளால் முடிதலாலும் ஆசிரியப்பாவை அடுத்து வைக்கப்பட்டது.

வெண்பா, அடிவரையறைக் குட்பட்டதாலும் அவற்றின் வேறுபட்ட ஓசையது ஆதலாலும் பின் கூறப்பட்டது.

கலிப்பா, வெண்பாச்சீர் பயின்று வருதலாலும் வெண்பா வுறுப்பாகவும் (கலிவெண்பா) வருதலாலும் வெண்பாவின் பின் வைக்கப் பட்டது.

### பாக்கள் பொருட்கு உரியவாமாறு

**411. அந்நிலை மருங்கின் அறமுத லாகிய**
**மும்முதற் பொருட்கும் உரிய வென்ப. (102)**

## இலக்குவனார்

418. By means of those under reference the three primary subjects from virtue(aram) are discussed.

## இளம்பூரணர்

**411. அந்நிலை மருங்கின்.............வென்ப.**

*என்-னின், மேற்கூறப்பட்ட பாக்கள் பொருட்குரிய வாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) அப் பாக்கள் நான்கும் பொதுப்பட நின்றவழி அறம் பொருளின்ப மென்னும் மூன்று முதற்பொருட்கும் உரிய என்றவாறு.

முதற்பொருள் என்றது பாகுபாடல்லாத பொதுமை குறித்த பொருள். சில பொருள்களை எடுத்து விலக்குகின்றாராதலின், இவ்வாறு கூறப்பட்டது. அப் பொருட்கண் உரியவாகியவாறு சான்றோர் செய்யுளகத்துக் கண்டு கொள்க. (102)

## பேராசிரியர்

**418. அந்நிலை மருங்கி..............வென்ப.**

*இது, பாவினைப் பொருட்குரியவாற்றான் வரையறை கூறுவான் தொடங்கிப் பொருட்குரிமை பொதுவகையான் உணர்த்துகின்றது; இது பொருளதிகாரமாகலின் இங்ஙனங் கூறுகின்றான்.*

(இ-ள்) அந்நிலை மருங்கின் - அம் மேலைச் சூத்திரத்துத் தோற்றுவாய் செய்யப்பட்ட செய்யுளிடத்து, அறமுதலாகிய மும்முதல் - அறம் பொருளின்ப மென்பன; அறமுதற் பொருளெனவே, அவையும் அவற்றது நிலையின்மையும் அடங்கும். பொருட்கும் உரிய வென்ப - அப் பொருட்கெல்லாம் உரிய நான்கு பாவும் என்றவாறு.

'அந்நிலை மருங்கின்' எனவே, அவை மும்முதற் பொருட்கு உரியவாங்காற் செய்யுளிடத்தன்றித் தாமாக உரிமை பூணாவென்பது. வீடென்பது செய்யுளுள் வாராதோவெனின் அறமுதலென்பது புறப்பாட்டெல்லையாகக் கூறினானென்பார் நான்கு பொருளுந் தழீஇ யுரைப்ப; இனி யொருசாரார், மும்முதற் பொருட்கும் உரிய வென்பதனை எச்சப்படுத்திக்[1] கொள்ப; அற்றன்று; உலகியற் பொருண்

1. எச்சப்படுத்தல் - முற்றும்மையை எச்சவும்மையாக்குதல்

மூன்றனையுங் கூறுவான் அவற்றை மும்முதற் பொருளென்றான், அவையின்றி வீடுபெறுமாறு வேறின்மையின் வீடும் ஆண்டுக் கூறினா னென்பது.[1] அல்லாதார் வீடென்னும் பொருண்மை செய்யுட்கண் வாராமையின் அது கூறானென்ப. அங்ஙனம் கருதின் அறமுதற் பொருளுஞ் செய்யுட்கண் வாராவென மறுக்க. (105)

## நச்சினார்க்கினியர்

**106. அந்நிலை மருங்கின்................வென்ப.**

*இது, பாப்பொருட் குரிமை கூறுகின்றது.*

(இ-ள்) மேலைச் சூத்திரத்தில் தோற்றுவாய் செய்யப்பட்ட செய்யுளிடத்து வரும் அறம்பொரு ளின்பமென்னும் மூன்று முதற் பொருட்கும் அந் நான்கு பாவும் உரியன எ-று.

மும்முதற் பொருளெனவே, அவற்றது துணைப்பொருளாகிய அறநிலையின்மையும் பொருணிலையின்மையும் இன்பநிலையின்மையும் அடங்குமென்ப. உலகியற் பொருண் மூன்றனையும் இவையெனக் கூறி அவற்றை விடுமாறுங் கூறவே வீடுங் கூறிற்றாம். அது கூறுதற்குரிய செய்யுளும் மேற்கொச்சகமென்று கூறுமாறுணர்க. (106)

## சிவலிங்கனார்

**அந்நிலை..................வெண்ப.**

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட பாக்கள் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று முதற்பொருட்கும் உரியன என்பர், எ-று.

இது, பாக்களுக்குப் பொதுப்பொருள் கூறப்பட்டது. பின்னர் இன்ன பா இன்ன பொருட்குரியது என்பது கூறப்படும்.

**நான்கு பாவும் இருவகையாமாறு**

**412. பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்**
**ஆசிரி யப்பா வெண்பா என்றாங்**
**காயிரு பாவினுள் அடங்கும் என்ப. (103)**

## இலக்குவனார்

419 When the divisions of verses are classified they fall into two major divisions, *āsiriyam* (verse) and *veṇbā* (verse).

---

1. வீடுபேறு அறம் பொருள் இன்பம் எனும் மூன்றாலும் பெறப்படுவது ஆதலின் அம் மூன்றும் கூற வீடுபேறும் கூறினான் என்பது; ஆதலின் எச்சவும்மையாக்கல் வேண்டு வதில்லை.

**413. ஆசிரிய நடைத்தே வஞ்சி ஏனை**
**வெண்பா நடைத்தே கலியென மொழிப. (104)**

## இலக்குவனார்

420. *Vañji* is allied to the style of *āsiriyam* and *kali* to that of venba

## இளம்பூரணர்

**412. பாவிரி மருங்கினை........என்ப.**

*என்-னின், மேற்சொல்லப்பட்ட பாக்களைத் தொகைவகையான் உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட நான்கு பாவும் ஆசிரியப்பா, வெண்பா என இரண்டாய் அடங்கும் என்றவாறு.

அவை யடங்குமாறு மேலே வருகின்ற சூத்திரத்தான் உரைப்ப. (103)

**413. ஆசிரிய நடைத்தே............மொழிப.**

*என்-னின், மேல் அடங்குமெனக் கூறப்பட்ட பாக்கள் அடங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஆசிரியம் போன்ற நடையை உடைத்து வஞ்சி, வெண்பா போன்ற நடையை உடைத்துக் கலி என்றுரைப்ப என்றவாறு.

நடையென்றது அப் பாக்கள் இயலுந் திறம். (104)

## பேராசிரியர்

**419. பாவிரி மருங்கினைப்..........மென்ப.**

**420. ஆசிரிய நடைத்தே.............மொழிப.**

*இவை இரண்டு சூத்திரமும் உரையியைபு நோக்கி உடனெழுதப்பட்டன. மேற்பாவினது விரி நான்கென்றமையின் தொகையு முண்டென்பது பெற்றாம். அவை தொகுக்குங்கால் இரண்டாகித் தொகுமென்பதூஉம், அங்ஙனம் இரண்டா மிடத்தும், யாதானும் ஒன்றடக்கி இரண்டாகா; முதற்பாவென நாட்டப்படுவன இவை யெனவும், அவை முதலாகத் தோன்றி ஆண்டடங்குவன இவையெனவும் உணர்த்துகின்றது.*

(இ-ள்) மேற்பாக்கண் விரிந்த பகுதியை உண்மைத் தன்மை நோக்கித் தொகுப்பின் ஆசிரியமும் வெண்பாவுமே யாம். அவற்றுள்,

ஆசிரியத்து விகற்பமாகித் தூங்கலோசை விரிந்தடங்கும்; வெண்பாவின் விகற்பமாகித் கலிப்பா விரிந்தடங்கும்; அங்ஙனம் அடங்கி இரண்டாகும் பாவின் றொகை என்றவாறு.

"வீடுபேறு மிகவிழைந்து,
நீடுநினைந்து நெடிதிருந்து"

என அகவற்சீரான்[1] வஞ்சித் தூக்குப் பிறந்தது.

மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய்

என வெண்பாவினுட் கலிப்பாப் பிறந்தது.[2] பிறவும் அன்ன.

இனி, ஒருசாரார் வஞ்சிப்பாவினுங் கலிப்பாப் பிறக்குமாதலின் அது கூறி நிரம்பாதென்ப[3] (யா.வி.209) என்னை?

"விளங்குமணிப் பசும்பொன்னின்
விசித்தமைத்துக் கதிர்கான்று" **(யா.வி.ப.298)**

என்னும் இரண்டு வஞ்சியடியும் ஒரு கலியடியாகச் [4]சொல்லப்படு மென்பது அவர் கருத்து; அற்றன்று. அவை யிரண்டு மாதற்கொரு கட்டளை இலவாம்;[5] அன்னது கட்டளை யழிந்த கலியடி யெனினும், சொல்லினுந் தன்சீரின்மையினென மறுக்க.[6] வஞ்சியடியாதற்கு ஒரு காரணம் இல்லை, தலைகுலுக்கி வலியச் சொல்லினும் தன் சீரின்மையென மறுக்க. அல்லதூஉம் ஒன்று ஒன்றனொடு ஒக்குங்காற் பிறப்பித்ததனோடு பிறந்ததொப்ப வேண்டு மென மறுக்க.

"வயலாமைப் புழுக்குண்டும்
வறளடும்பின் மலர்மலைந்தும்" **(பட்டினப்.64.5)**

என்றக்காற் கலிப்பாவாகச் சொல்லியவழியும் அத் தூங்கலோசையொடு ஒத்தல்வேண்டும், அதனின் அது பிறந்ததாயினென மறுக்க. அல்லதூஉம், அவ் விரண்டடியுங் கூட்டிச் சொல்லியவழி அகவலோசை யாதலே வலிது; என்னை; தன்றளை[7] விராய் வந்தமையின்.

'பண்புற' என்றதனான் ஆசிரியப்பாவும் வெண்பாவும் இயல்பெனவும், ஒழிந்தன விகாரமெனவுங் கொள்க; எனவே, வெண்பா

---

1. வீடு பேறு மிகவி ழைந்து
நீடு நினைந்து நெடிதி ருந்து - ஆசிரியச் சீர் காண்க.
2. மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் என நாற்சீராக்கி வெண்பாவாக்கின் கலியோசையும் காணப்படுதலின் வெண்பாவினுட் கலிப்பாப் பிறந்தது.
3. வெண்பாவில் கலிபிறக்கும் எனின் நிரம்பாது வஞ்சியிலும் கலி பிறந்தலின்.
4. விளங்குமணிப் பசும்பொன்னின் விசித்தமைத்துக் கதிர்கான்று
- இப்படி வரும் கலியடி.
5. அவ்வடியிரண்டும் ஓரடியாதற்குக் கட்டளை (வரையறை) யின்று.
6. தலைதூக்கி ஓசைபெறச் சொன்னாலும் வஞ்சிச்சீர் இன்மையின் மறுக்க.
7. தன்தளை - கலித்தளை. ஆசிரியப் பாடலில் கலித்தளை விரவிவந்தது.

வென்றதனான் மூன்று பாவினுந் துள்ளிய கலியோசையும் ஒருவகையான் வெண்பாநெறித்தேயாம், இலக்கணங் கலியோசையன்றாயினுமென்பது கொள்க. (107,108)

## நச்சினார்க்கினியர்

**107. பாவிரி மருங்கினைப்...................என்ப.**

**108. ஆசிரிய..............மொழிப.**

*இவை யிரண்டும் உரையியைபு நோக்கி உடன்கூறினார். இவை விரிந்தது தொகுத்தல்.*

(இ-ள்) பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின் - பாக்கள் விரிந்த பகுதியை உண்மைத் தன்மை நோக்கித் தொகுப்பின்; ஆசிரியப்பா வெண்பா என்றாங்கு ஆயிரு பாவினுள் அடங்கும் என்ப - ஆசிரியப்பாவும் வெண்பாவும் என்று அவ் விரண்டு பாவினுள் அடங்குமென்று கூறுவர். அதற்குக் காரணம் என்னை எனின், ஆசிரிய நடைத்தே வஞ்சி-ஆசிரிய விகற்பமாகித் தூங்கலோசை விரிந்தடங்கும், ஏனை வெண்பா நடைத்தே கலியென மொழிப - ஒழிந்த வெண்பாவின் விகற்பமாகித் துள்ளலோசை விரிந்தடங்கும் என்று முதனூலாசிரியர் கூறுதலின் எ-று.

(எ-டு)"வீடுபேறு மிகவிழைந்து நீடுநினைந்து நெடிதிருந்து"
என அகவற்சீரான் வஞ்சித்தூக்குப் பிறந்தது.

மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய்

என வெண்பாவினுட் கலிப்பாப் பிறந்தது.

'பண்புற' வென்றதனான் ஆசிரியமும் வெண்பாவு மியல்டெனவும் ஒழிந்தன விகாரமெனவுங் கொள்க. 'ஏனை'யென்றதனான் மூன்று பாவினுந் துள்ளிய கலியோசையு மொருவகையான் வெண்பா நடைத்தேயாம், இலக்கணக் கலியோசையன்றாயினு மென்பது. (107,108)

## சிவலிங்கனார்

**பாவிரி..............என்ப.**

(இ-ள்) நான்கு விரியாக அமைந்த பாக்களை ஒன்றனுள் ஒன்றை அடக்கித் தொகுப்பின் ஆசிரியப்பா, வெண்பா எனும் இரண்டனுள் அடங்கும் என்பர் எ-று.

**ஆசிரிய நடை..................மொழிப.**

(இ-ள்) ஆசிரிய நடையுடையது வஞ்சி; ஆதலின் வஞ்சி ஆசிரியத்துள் அடங்கும். வெண்பா நடையுடையது கலி; ஆதலின் கலி வெண்பாவில் அடங்கும், எ-று. நடை என்றது பாக்களின் ஓசைநடை...

**வாழ்த்தியல் பாக்கள்**

**414. வாழ்த்தியல் வகையே நாற்பாக்கும் உரித்தே. (105)**

## இலக்குவனார்

421. The mode of benediction belongs to all.

## இளம்பூரணர்

**414. வாழ்த்தியல்....................உரித்தே.**

*என்-னின், வாழ்த்தியற் குரிய பாவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) வாழ்த்தியலின்வகை நான்கு பாவிற்குமுரித்து என்றவாறு.

வகையென்றது தேவரை வாழ்த்தலும் முனிவரை வாழ்த்தலும் ஏனையோரை வாழ்த்தலும். செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க. (105)

## பேராசிரியர்

**421. வாழ்த்தியல்...........முரித்தே.**

*இது, முற்கூறிய 'மும்முதற் பொருட்கண்' (418) ஒருசாரனவற்றை வாழ்த்துதல் என்பதோராறும் உண்மையின் அப் பகுதி நான்கு பாவிற்கும் உரித்தென்கின்றது.*

நால்வகைப்பட்டது பாவாகலின் அப் பாவினை நான்கென்றான்; வாழ்த்தியலென்னாது 'வகை' என்றதனான் மேற்கூறிய மும்முதற் பொருளின் அறுவகையும்[1] பெரும்பான்மை யெனப்படுமென்பதூஉம், அங்ஙனம் வாழ்த்துங்கால் தனக்குப் பயன்படுதலும் படர்க்கைப் பொருட்குப் பயன்படுதலுமென இருவகையான் வாழ்த்துமென்பதூஉம், இனி முன்னிலையாக வாழ்த்துதலும் படர்க்கையாக வாழ்த்துதலும் என இருவகைப்படுமென்பதூஉம் எல்லாங் கொள்க. அங்ஙனம் வாழ்த்தப்படும் பொருளாவன: கடவுளும் முனிவரும் பசுவும் பார்ப்பாரும் அரசரும் மழையும் நாடுமென்பன. அவற்றுட் கடவுளை வாழ்த்துஞ் செய்யுள் கடவுள் வாழ்த்தெனப்படும். ஒழிந்த பொருள்களை வாழ்த்திய செய்யுள் அறுவகை[2] வாழ்த்தெனப்படுமென்பது.

> "மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்
> வளைஞரல் பௌவ முடுக்கை யாக
> விசும்புமெய் யாகத் திசைகை யாகப்
> பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக

1. அறுவகை - அறம் பொருள் இன்பமும் அவற்றின் நிலையாமையும்
2. அறுவகை வாழ்த்து - கடவுளை நீக்கி முனிவர், பசு, பார்ப்பார், அரசர், மழை, நாடு என்னும் ஆறுவகை.

வியன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வ னென்ப
தீதற விளங்கிய திகிரி யோனே" (நற்.கடவுள்)

என்பது, தெய்வவாழ்த்து.

"கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்
மார்பி னஃதே மையி னுண்ஞா
ணுதல திமையா நாட்ட மிகலட்டும்
கையது கணிச்சியொடு மழுவே மூவாய்
வேலு முண்டத் தோலா தோற்கே
யூர்ந்த தேறே சேர்ந்தோ ளுமையே
செவ்வா னன்ன மேனி யவ்வா
னிலங்குபிறை யன்ன விளங்குவால் வையெயிற்
றெரியகைந் தன்ன வவிர்ந்துவிளங்கு புரிசடை
முதிராத் திங்களொடு சுடருஞ் சென்னி
மூவா வமரரு முனிவரும் பிறரும்
யாவரு மறியாத் தொன்முறை மரபின்
வரிகிளர் வயமா னுரிவை தைஇய
யாழ்கெழு மணிமிடற் றந்தணன்
றாவி றாணிழற் றவிர்ந்தன்றா லுலகே" (அகம்.கடவுள்)

என்பதும் அது. முன்னையது தனக்குப் பயன்பட வாழ்த்தியது; பின்னையது உலகிற்குப் பயன்பட வாழ்த்தியது. பிறபாவினும் மருட்பா வினும் பிற பொருட்கண் வந்த வாழ்த்து வந்துழிக் கண்டுகொள்க.

வாழ்த்தென்பது அறமாகலின் அறமுதலாகிய மும்முதற் பொருள்கள்(418) என்புழி அடங்கும் பிற, இச் சூத்திரம் மிகையாலெனின், அற்றன்று; புறநிலை வாழ்த்து முதலியன உள; அவை நீக்குதற்கு இது விதந்தோதினானென்பது. 'வாழ்த்தியல்' என்றதனான், இயற்கை வாழ்த்தெனப்படுவன இவை யெனவும், இனி வரும் புறநிலை வாழ்த்து முதலியன இயற்கை வாழ்த்தெனப்படா, ஒருவகையான் வாழ்த்தின்பாற் சார்த்தி யுணரப்படுவதல்ல தெனவுங் கொள்க. (109)

## நச்சினார்க்கினியர்

**109. வாழ்த்தியல்................உரித்தே.**

*இது, முற்கூறிய மும்முதற் பொருட்கண் அறமானது வாழ்த்துதற் பொருட்டுமாய் நாற்பாவிற்கும் உரித்தாமென்கின்றது.*

**(இ-ள்)** வாழ்த்தியலின் கூறுபாடு நான்கு பாவிற்கும் உரித்து எ-று.

வகையென்றதனாற் கடவுளரும், முனிவரும், பசுவும், பார்ப்பாரும், அரசரும், மழையும், நாடுமென்னும் அறுமுறை வாழ்த்து வருதலே பெரும்பான்மைய என்பதூஉம், அங்ஙனம் வாழ்த்துங்கால் தனக்குப் பயன்படுதலும் படர்க்கைப் பொருட்குப் பயன்படுதலுமென இருவகை யான் வரும் வாழ்த்தும் என்பதூஉம், முன்னிலையாகவும் படர்க்கை யாகவும் வரும் வாழ்த்தும் என்பதூஉம் கொள்க.

(எ-டு)"மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்
வளைநரல் பௌவ முடுக்கை யாக
விசும்புமெய் யாகத் திசைகை யாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
இயன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வ னென்ப
தீதற விளங்கிய திகிரி யோனே." **(நற்.வாழ்த்து)**

இது தனக்குப் பயன்பட வாழ்த்தியது.

"நீலமேனி வாலிழை பாகத்
தொருவ னிருதா ணிழற்கீழ்
மூவகை யுலகு முகிழ்த்தன முறையே." **(ஐங்குறு..வாழ்த்து)**

இஃது உலகிற்குப் பயன்பட வாழ்த்தியது.

"முக்கட் பகவ னடிதொழா தார்க்கின்னா
பொற்பனை வெள்ளையை யுள்ளா ரெழிலின்னா
சக்கரத் தானை மறப்பின்னா வாங்கின்னா
சத்தியான் தாள்தொழா தார்க்கு." **(இன்னா.வாழ்த்து)**

"வானிடு வில்லின்..........முடிக வென்று" **(நாலடி.வாழ்த்து)**

"ஆறறி யந்தணர்க்கு" **(கலி.வாழ்த்து)**

இவற்றின் வேறுபாடுமுணர்க. இவற்றைக் கடவுள் வாழ்த்தென்று பெயர் கூறப்படும்.

"உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து." **(குறள்.24)**

இது முனிவரை வாழ்த்தியது.

"ஆயிர வெள்ள வூழி
வாழி யாத வாழிய பலவே." **(பதிற்.63)**

இஃது அரசரை வாழ்த்தியது.

"விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது." **(குறள்.16)**

இது மழையை வாழ்த்தியது. ஒழிந்தன வந்துழிக் காண்க. இவை அறுமுறை வாழ்த்தெனப் பெயர் கூறப்படும்.

இயலென்றதனான் இயற்கையாய வாழ்த்திவை யெனவும், மேல் வரும் புறநிலைவாழ்த்து முதலியன இயற்கையன்றி வாழ்த்தின்பாற் சார்த்தப்படுவன எனவுங் கொள்க.

வஞ்சிக் குதாரணம் வந்துழிக் காண்க.

"அங்கண் வானத்து அமர அரசர்"

என்பது பின்னுள்ளோர் கூறிய வாழ்த்தியல். (109)

**சிவலிங்கனார்**

**வாழ்த்தியல்................உரித்தே.**

(இ-ள்) வாழ்த்துதற் பொருள் நான்கு பாவிற்கும் உரித்து, எ-று.

வாழ்த்து, தேவர், மக்கள் முதலாக மழைபோலும் அஃறிணைப் பொருள்வகை யுள்ளனவற்றுக்கு ஆம்.

வகை: தனக்குப் பயன்பட வாழ்த்துதல், பிறர்க்குப் பயன்பட வாழ்த்துதல், முன்னிலைப்படுத்தி வாழ்த்துதல், படர்க்கையில் வாழ்த்துதல் முதலியன.

புறநிலை வாழ்த்து

**415. வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்**
**பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து**
**பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே**
**கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ. (106)**

**இலக்குவனார்**

422. The benediction of *puranilai* such as "may your God of worship guard you; may you flourish from generation to generation being endowed with great wealth, freed from censure" will not have the kinds of *kali* and *vañji*.

**பி.இ.நா.**

**இ.வி. 749**

வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தும்

## இளம்பூரணர்

**415. வழிபடு தெய்வம்............பெறாஅ.**

*என்-னின், இது புறநிலைவாழ்த்திற்குரிய பாவமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) வழிபடு தெய்வம் நின்னைப் புறங்காப்பக் குற்றந் தீர்ந்த செல்வத்தொடு வழிவழியாகச் சிறந்து பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்துக் கலிப்பாவகையினும் வஞ்சிப்பா வகையினும் வரப்பெறாது என்றவாறு.

எனவே, வெண்பாவினும் ஆசிரியப்பாவினும் இவையிரண்டும் புணர்ந்த மருட்பாவினும் வரப்பெறும் என்றவாறாம். (106)

## பேராசிரியர்

**422. வழிபடு தெய்வ நிற்புறங்.........பெறாஅ.**

*இது, நாற்பாவுக்கும் உரித்தன்றி வரையறைப்படும் வாழ்த்து வேறுபாடு உணர்த்துகின்றது.*

(இ-ள்) நினக்குத் தொழுகுலமாகிய தெய்வம் புறங்காப்ப, இல்லறம முதலிய செல்வத்தாற் பழியின்றிப் பூத்த செல்வமொடு புதல்வர்ப் பயந்து, புதல்வரும் இப் பெற்றியராகி எல்லீரும் நீடு வாழ்வீராமினென்று தெய்வத்தைப் புறநிறுத்தி வாழ்த்துவது புறநிலை வாழ்த்து. அங்ஙனம் வாழ்த்திய அச் செய்யுள் கலிப்பா உறுப்பாகவும் வஞ்சிப்பாவினும் வருதலில்லை எ-று.

தெய்வத்தைப் புறநிறுத்தி வாழ்த்துதலிற் புறநிலை வாழ்த்தாயிற்று.[1]

"வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப"

என்றோதினமையின், வழிபடு தெய்வம் உள்வழியே புறநிலை வாழ்த் தெனப்படுவதென்பது. எடுத்துக்கொண்ட காரியத்துக்கு ஏதுவாகிய கடவுள் நிற்ப, அக் கடவுளாற் பயன்பெற நின்றானோர் சாத்தனை முன்னிலையாக்கி அவற்குக் காரியங் கூறுதலின் இது புறநிலையாயிற்று. அங்ஙனம் வாழ்த்தியற் செய்யுள் கலிப்பா உறுப்பாகியும் வஞ்சிப்பாவினும் வரப்பெறா தென்றானென்பது; வருதலில்லை என்பான், 'கலிநிலை வகை' என்றதனாற் கலிவகைத்தாகிய பரிபாடற்கும் இஃதொக்கும். இனி, கடவுளாற் காக்கப்பட்ட சாத்தனை வாழ்த்தப்பட்டானெனவுஞ் சொல்லுப; அற்றன்று, கடவுள் வாழ்த்தென்றால் அவ்வாறு பொருள்படாமையி னென்பது. இவற்றுக்குச் செய்யுள்:

---

1. வழிபடுதெய்வம் சைனர் பௌத்தர்கட்கு இன்மையின் சைனபௌத்த ஞானிகளைக் கொண்டு அவர்கள் அறவுரை கூறிப் புறநின்று காப்ப எனக் கொண்டு அவர்க்கும் புறநிலைவாழ்த்து உரித்தாகக் கொள்க.

"இமையா முக்க ணிலங்குசுடர் வாய்ந்த
வுமையொரு பாகத் தொருவன் காப்பநின்
பல்கிளைச் சுற்றமொடு நல்லிதி னந்தி
நீபல வாழிய வாய்வாட் சென்னிநின்
னொருகுடை வரைப்பி னீழல் பெற்றுக்
கிடந்த வெழுகட னாப்ப
ணகலிரு விசும்பின் மீனினும் பலவே"

எனவும்,

"திங்க ளிளங்கதிர்போற் றென்திங்க ளூர்த்தேவன்
மைந்தர் சிறப்ப மகிழ்சிறந்து - திங்கட்
கலைபெற்ற கற்றைச் சடைக்கடவுள் காப்ப
நிலைபெற்று வாழியரோ நீ"

எனவும் வரும்.

இனி, கலிப்பாவினுள் வருங்காற் கடவுண் முன்னிலையாக வரும்; என்னை?

"தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே" (450)

என்றமையின். அது 'வாழ்த்தியல் வகை' என மேலே யடங்கிற்று; வஞ்சிப்பாவிற்கும் அவ்வாறு கொள்ளப்படும்.

இச் சூத்திரம் பாவென்னும் உறுப்பிற்குப் பொருள் வரையறுத்தது. மற்று, 'நிற்புறங் காப்ப' என ஒருமை கூறிப் 'பொலிமின்' எனப் பன்மை கூறிய தென்னையெனின்,

"வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப"

என்றமையிற் புதல்வரொடுங் கூட்டிப் பாட அமையுமென்றற்கு அவ்வாறு கூறினானென்பது. (110)

## நச்சினார்க்கினியர்

**110. வழிபடு தெய்வ............பெறாஅ.**

*இது, நான்கு பாவிற்கும் உரித்தேயன்றி வரைவறைப்படும் வாழ்த்து வேறுபாடு கூறுகின்றது.*

**(இ-ள்)** வழிபடு தெய்வம் நிற்புறங் காப்ப - நீ வழிபடும் நின் குலதெய்வம் நின்னைப் புறத்தே நின்று காப்ப, பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து - இல்லத்தாற் பொலிந்த செல்வத்தோடே நீ பெறும் புதல்வரும் அவர் பெறும் புதல்வரும் சிறப்பெய்தி, பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே - எல்லீரும் நீடுவாழ்வீராமின் என்று தெய்வத்தைப் புறத்தே நிறுத்தி வாழ்த்தும் வாழ்த்து, கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ - கலிப்பா உறுப்பாகவும் வஞ்சிப்பா உறுப்பாகவும் பாடப்பெறா எ-று.

எடுத்துக்கொண்ட காரியத்துக்கு ஏதுவாகிய தெய்வத்தினைப் படர்க்கையாக்கி அத் தெய்வத்தாற் பயன்பெறா நின்றானொருவனை முன்னிலையாக்கிக் கூறலிற் புறநிலையாயிற்று.

வகையென்றதனாற் கலியின் கூறாகிய பரிபாடற்கு மொக்கும்.

(எ-டு)"அறிதுயி லரவணை யமர்ந்தோன் காப்ப
அருட்கடம் பூண்ட வகலாச் செல்வமொடு
நீயுநின் புதல்வருஞ் சிறந்து
வாழிய பெரும பூழியர் கோவே."

"திங்கள் இளங்கதிர்போற் றென்திங்க ளூர்த்தேவன்
மைந்தர் சிறப்ப மகிழ்சிறந்து - திங்கட்
கலைபெற்ற கற்றைச் சடைக்கடவுள் காப்ப
நிலைபெற்று வாழியரோ நீ"

என வரும். இது பாவென்னு முறுப்பிற்குப் பொருள் வரையறுத்தது.

நின்னென ஒருமை கூறிப் பொலிமினெனப் பன்மை கூறியது, புதல்வரோடுகூடப் பாடுதற்கமையுமென்றற்கு. (110)

## சிவலிங்கனார்

**வழிபடுதெய்............பெறாஅ.**

(இ-ள்) நீ வழிபடும் நின் குலதெய்வம் நின்னைப் புறத்தே நின்று காப்பக் குற்றம் தீர்ந்த நல்வழியால் வந்த செல்வத்தோடே வழிவழியாகப் பொலிவுபெற்று வாழ்க என்னும் புறநிலை வாழ்த்தானது கலிப்பாவும் வஞ்சிப்பாவும் பெறாது எ-று.

எனவே, புறநிலை வாழ்த்து வெண்பாவிலும் ஆசிரியத்திலும் வரும் என்பதாம்.

தெய்வம் புறநின்று காக்கும் என்பதனை மாணிக்கவாசகர்,

"பாலினைந் தூட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை யுருக்கி யுள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுன்னைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே"

**(திருவா.பிடித்தபத்து,9)**

**எனப் பாடியதில் காண்க.**

(உ-ம்)"வீர சைவம் விளக்க வந்த
சீருடைச் செம்மல் இரத்தின சபாபதி
ஆரச் சாந்தணி சக்சைக் கடவுள்
நீவழி படுமவன் நிற்புறம் காப்ப
நீடு வாழிய நெடும்புக ழானே."

**416. வாயுறை வாழ்த்தே அவையடக் கியலே**
**செவியறி வுறூஉஎன அவையும் அன்ன. (107)**

## இலக்குவனார்

**423. The benedictions embodying admonition, the manner of controlling an assembly and the giving of sound advice are of the same nature.**

## இளம்பூரணர்

**416. வாயுறை வாழ்த்தே..........அன்ன.**

*என்-னின், ஒருசார் பொருட்குரிய மரபுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) வாயுறைவாழ்த்தும் அவையடக்கியலும் செவியறிவுறுத்தற் பொருளுங் கலியிலும் வஞ்சியினும் வரப்பெறா என்றவாறு.

எனவே முன்னைய வொப்ப ஏனையிரண்டினும் வரப்பெறும் என்றவாறாம் (107)

## பேராசிரியர்

**423. வாயுறை வாழ்த்தே.........மன்ன.**

*இதுவும் பாக்களை (மூன்றாக) வரையறுக்கின்றது.*

(இ-ள்) வாயுறை வாழ்த்தும். அவையடக்கியலும், செவியறிவுறூஉவும் என மூன்றும் மேலைப் புறநிலை வாழ்த்துப்போல் வாழ்த்துப் பகுதியவாகலும் கலிநிலைவகையும் வஞ்சியும் பெறாமையுமுடையவென மாட்டெறிந்தவாறு; அவையர்மாறு முன்னர்ச் சொல்லுதும்.

வாய் - வாய்மொழி; உறை-மருந்து; வாயுறையென்பது, சொன்மருந்தெனப் பண்புத்தொகையாம்[1]. இனி, வாய்க்கட்டோன்றிய மருந்தென வேற்றுமைத் தொகையு மாம்; மருந்து போறலின் மருந்தாயிற்று அவன் சிறப்புக் கூறி வழுத்தி ஒரு சாத்தற்குப் பயன்படச் சொல்லினமையின் வாயுறை வாழ்த்தெனப்படுமென்பது. மற்று, 'நிற்புறங் காப்ப' எனப் புறநிலை வாழ்த்திற்கு இடம் நியமித்தாங்கு இதற்கும் இடநியமங் கூறாரோவெனின், அது மாட்டேற்றானே அடங்கு மென்பது.

1. வாய்உறை - வாயாகிய உறை. இருபெயரொட்டுப் பண்புத்தொகை

அவையடக்கியல் - அவையை வாழ்த்துதல், அவையடக்குதலென் பது, இரண்டாம் வேற்றுமைத் தொகை; அடக்கிய லென்பது, வினைத்தொகை;[1] தானடங்குதலாயின் அடங்கிய லெனல்வேண்டும்; அஃதாவது, அவையத்தா ரடங்குமாற்றால் இனியவாகச் சொல்லி அவரைப் புகழ்தல்.

செவியறிவுறூஉ - ஒரு சாத்தற்குச் செவியறிவுபடுத்து அவனை வாழ்த்துதல்; என அவையும் அன்ன - என்ற இம் மூன்றும் அத்தன்மையவேயாம் என்றவாறு.

தெய்வத்தொடு பட்டமையிற் புறநிலைவாழ்த்து முற்கூறி இவை பிற்கூறினான். இவற்றுள், வாயுறை வாழ்த்து முன்னிலைக்குரிமையின் அதன்பின் வைத்தான்; முன்னிலைக்கே உரித்தாயினுஞ் செவி யறிவுறூஉவினை ஈற்றுக்கண் வைத்தான், பயம் பெறுவானையே நீ இன்ன குணத்தை யாவாயென்று புகழ்பட வாழ்த்திச் சொல்லப்படுதல் வேறுபாடுடைமையினென்பது. இங்ஙனம் வரையறுக்கின்றது நால்வகைப் பாவாகிய உறுப்பினை நோக்கியாகலின், அவற்றுள் இவ் வுறுப்புடைய நால்வகைச் செய்யுட்கும் இவ் வுறுப்பின திலக்கணம் எய்துவித்துக் கொள்ளப்படும்; கொள்ளவே, ஆசிரியப்பாட்டும் வெண்பாட்டும் மருட்பாவும் எல்லா வாழ்த்திற்கும் உரியவென்பதூஉம், கலிப்பாட்டும் வஞ்சிப்பாட்டும் புறநிலை முதலிய நால்வகைப் பொருட்கும் உரியவல்ல வென்பதூஉம் பெற்றாம்; என்னை?

> "மருட்பா வேனை யிருசா ரல்லது
> தானிது வென்னுந் தனிநிலை யின்றே" (397)

என்றமையின். (111)

## நச்சினார்க்கினியர்

**111. வாயுறை வாழ்த்தே..........அன்ன.**

*இதுவும் பாக்களைப் பொருண்மேல் வரையறுக்கின்றது.*

(இ-ள்) வாயுறை வாழ்த்தும் அவையடக்கியலுஞ் செவியறி வுறூஉவும் என்ற அம் மூன்றும் மேலைப் புறநிலை வாழ்த்துப் போல வாழ்த்துப் பகுதியவாகலுங் கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாமையு முடைய எ-று.

அவையாமாறு மேற்கூறுதும். வாயுறையென்றது வாய்மை மொழியாகிய மருந்தெனப் பண்புத்தொகை. மருந்துபோறலின் மருந்தென்றார். ஒருவன் சிறப்புக்கூறி வழுத்தி அவற்குப் பயன்படக் கூறலின் வாயுறை வாழ்த்தென்றார். மாட்டேற்றானே நிற்புறங் காப்ப என இடம் நியமித்தாற்போல இடநியமங் கொள்க.

---

1. அடக்கு+இயல்-அடக்குகின்ற(அடங்குகின்ற) இயல்

அவையடக்கியலென்பது அவையடக்கிய இயலென விரியும்; அஃது அவர் அடங்குமாற்றால் தன்னை யிழித்துக் கூறி அவரைப் புகழ்தல். அவைக்கண் தானடங்குதலாயின், அவையடங்கியலென்பது பாடமாதல் வேண்டும்.

செவியறிவுறூஉவாவது ஒருவர்க்குக் கேள்வியறிவு படுத்து அவரை வாழ்த்துதல்; என்று கூறப்பட்டவவையும் ஆசிரியத்தானும் வெண்பாவானுங் கூறப்பெறும், எ-று.

எனவே, இந் நான்கு பொருண்மேலும் ஆசிரியமும் வெண்பாவும் வருமென்பதூஉம் ஒழிந்தன வாராவென்பதூஉம், மருட்பா அவ் விரண்டினாலும்[1] வருதலின் இப் பொருண்மேல் வருமென்பதூஉம் பெற்றாம்.

தெய்வத்தோடு பட்டமையிற் புறநிலை முற்கூறி, முன்னிலைக் குரிமையின் வாயுறை யதன்பின் கூறி, வரையறை யின்மையின் அதன்பின் அவையடக்கியல் கூறி, முன்னிலைக்கண் வருமேனும் இன்ன குணத்தை யாவாயெனப் புகழ்பட வாழ்த்திப் பிற்கூறுதல் வேறுபா டுடைமையின் அதன்பின் செவியறிவுறூஉம் கூறி இம் முறையே வைத்தார்.

இங்ஙனங் கூறிய பாவுறுப்பினையுடைய நால்வகைச் செய்யுட்கும் இவ் வுறுப்பின திலக்கணம் எய்துவிக்க. (111)

## சிவலிங்கனார்

**வாயுறை......அன்ன.**

(இ-ள்) வாயுறை வாழ்த்தும், அவையடக்கியல், செவியறிவுறூஉ எனும் மூன்றும் புறநிலை வாழ்த்துப்போலக் கலிப்பாவிலும் வஞ்சிப் பாவிலும் வரப்பெறா; வெண்பாவிலும் ஆசிரியப்பாவிலும் வரப்பெறும் (எ-று).

இதனால் இம் மூன்றும் வாழ்த்துப் பகுதியாகவும் வரப்பெறும் என்க.

**வாயுறை வாழ்த்து**

**417. வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்**
**வேம்புங் கடுவும் போல வெஞ்சொல்**
**தாங்குதல் இன்றி வழிநனி பயக்குமென்று**
**ஓம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே. (108)**

---

1. வெண்பா ஆசிரியப்பா இரண்டினாலும்

## இலக்குவனார்

424. The benediction embodying admonition, if we examine clearly, is the form where one is admonished using the strong words as bitter as margosa and gall-nut, blessing that it will be beneficial through generations without fail.

## பி.இ.நா

இ.வி. 749

வேம்பும் கடுவும் போல்வன வெஞ்சொல்
தாங்குதல் இன்றி வழிநனி பயக்குமென
ஓம்படைக் கிளவியின் வாயுறுத் திடூஉம்
வாயுறை வாழ்த்தும்

## இளம்பூரணர்

**417. வாயுறை வாழ்த்தே.......தற்றே.**

*என்-னின், வாயுறை வாழ்த்து ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) வாயுறை வாழ்த்தை விளங்க ஆராயின் வேம்பினையுங் கடுவினையும் போல வெஞ்சொ லடக்காது[1] பிற்பயக்குமெனக் கருதிப் பாதுகாவற் கிளவியானே மெய்யறிவித்தல் என்றவாறு.

(உ-ம்)"இருங்கடல் உடுத்தஇப் பெருங்கண் மாநிலம்
உடையிலை நடுவண திடைபிறர்க் கின்றித்
தாமே ஆண்ட ஏமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
காடுபதி யாகப் போகித் தத்தம்
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே
அதனால், நீயுங் கேண்மதி யத்தை வீயா
துடம்பொடு நின்ற உயிரும் இல்லை
மடங்க லுண்மை மாயமோ அன்றே
கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலுள் ஆங்கண்
உப்பிலாஅ அவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்கா
திழிபிறப்பினோன் ஈயப்பெற்று
நிலங்கல னாக விலங்குபலி மிசையும்
இன்னா வைகல் வாரா முன்னே

---

1. பேராசிரியர்: நச்சினார்க்கினியர் உரைவேறுபாடு காண்க.

செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் துறந்தே" (புறம்.363)

என்னும் பாட்டு. (108)

## பேராசிரியர்

**424. வாயுறை வாழ்த்தே........தற்றே.**

*இது, முறையானே வாயுறை வாழ்த்துணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) முற்பருவத்துக் கைத்து(கடுத்து)ப் பிற்பருவத்து உறுதி பயக்கும் வேம்பும் கடுவும் போல வெய்யவாய சொல்லினைத் தடையின்றிப் பிற்பயக்குமெனக் கருதிப் பாதுகாத்துக் கிளக்குங் கிளப்பினான் மெய்யாக அறிவுறுத்துவது வாயுறைவாழ்த்தெனப்படும் என்றவாறு.

'வாயுறை' என்பது மருந்தாகலான் 'வேம்புங் கடுவும்போல' என்றானென்பது; அதற்குச் செய்யுள்:

"இருங்கடல் உடுத்த பெருங்கண் மாநிலம்
உடையிலை நடுவண திடைபிறர்க் கின்றித்
தாமே ஆண்ட ஏமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
காடு பதியாகப் போகித் தத்தம்
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே
அதனால், நீயுங் கேண்மதி யத்தை வீயா
துடம்பொடு நின்ற உயிரும் இல்லை
மடங்க லுண்மை மாயமோ அன்றே
கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலுள் ஆங்கண்
உப்பிலாஅ அவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்கா
திழிபிறப்பினோன் ஈயப்பெற்று
நிலங்கல னாக விலங்குபலி மிசையும்
இன்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் துறந்தே." (புறம்.363)

பிறவும் அன்ன. (112)

## நச்சினார்க்கினியர்

**112. வாயுறை வாழ்த்தே........தற்றே.**

*இது முறையானே வாயுறை கூறுகின்றது.*

(இ-ள்) வேம்பும் கடுவும் போல வெஞ்சொல் - முற்பருவத்துக் கைத்தும் கடுத்தும் பிற்பருவத்து உறுதி பயக்கும் வேம்பும் கடுவும்போல வெய்ய சொல்லினை, தாங்குதல் இன்றி வழிநனி பயக்கும் என்று - ஒரு தடையின்றிப் பிற்பயக்கும் எனக் கருதி, ஓம்படைக் கிளவியின் வாயுறுத்தற்றே - பாதுகாத்த சொல்லினானே மெய்யாக உறுத்துவது, வாயுறை வாழ்த்தே - வாயுறை வாழ்த்தாம் எ-று.

(எ-டு)"இருங்கடல் உடுத்தஇப் பெருங்கண் மாநிலம்
உடையிலை நடுவண திடைபிறர்க் கின்றித்
தாமே ஆண்ட ஏமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
காடுபதி யாகப் போகித் தத்தம்
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே
அதனால், நீயுங் கேண்மதி யத்தை வீயா
துடம்பொடு நின்ற உயிரும் இல்லை
மடங்க லுண்மை மாயமோ அன்றே
கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலுள் ஆங்கண்
உப்பிலாஅ அவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்கா
திழிபிறப்பினோன் ஈயப்பெற்று
நிலங்கல னாக விலங்குபலி மிசையும்
இன்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் துறந்தே." (புறம்.363)

என வரும். (112)

## சிவலிங்கனார்

**வாயுறை.......தற்றே.**

(இ-ள்) வாயுறை வாழ்த்தாவது யாதென விளங்க ஆராயின் முன் கசந்து பின் நற்பயன்தரும் வேம்பும் கடுவும் போன்று கேட்கும்கால் இன்னாமையும் கேட்டு நடப்பின் இனிமையும் தரும் கடுஞ் சொற்களால் - தடையில்லாமல் பிற்காலத்துப் பயன்தரும் என்ற பாதுகாப்புச் சொற்களால், ஒருவன் தன் வாய்மூலம் பிறனுக்கு உறுத்துவது. எ-று.

வாயுறை-வாயால் உறுத்துதல். வாய்மொழியால் வலியக் கூறுதல். வலியுறுத்திக் கூறுதல் என்பதால் கேட்போனுக்கு அது அப்போது வெறுப்பைத் தருவது என்பது பெறப்படும். பிற்காலத்து அது நற்பயன் தருவதால் வாழ்த்தாயிற்று.

(உ-ம்)"உலகிற் பிறந்தார் ஒருவரும் நிலையார்
உலகின் நீயும் ஒருநாள் இறப்பாய்
உலகில் நல்லறம் ஆற்றினை யாயின்
நிலவுவை மாதோ நீள்புக ழானே."

**அவையடக்கியல்**

**418. அவையடக் கியலே அரில்தபத் தெரியின்**
**வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென்**
**றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே. (109)**

## இலக்குவனார்

425. Controlling an assembly is, if understood thoroughly, the form in which all are humbly requested to choose with discriminations from what is stated unworthily.

## இளம்பூரணர்

**418. அவையடக் கியலே.........தன்றே.**

*என்-னின், அவையடக்கியல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) அவையடக்கியலைக் குற்றமற ஆராயின் அறியாதன சொல்லினும் பாகுபடுத்துக் கோடல்வேண்டும் என எல்லா மாந்தர்க்குந் தாழ்ந்துகூறல் என்றவாறு.

உதாரணம் வந்தவழிக் கண்டுகொள்க. (109)

## பேராசிரியர்

**425. அவை யடக்கியலே........தன்றே.**

*இது, முறையானே அவையடக்கிய லுணர்த்துகின்றது.*

(இ-ள்) வல்லாதன சொல்லினும் அவற்றை ஆராய்ந்து கொண்மின்என அவையகத்தாரெல்லார்க்கும் வழிபடுகிளவி சொல்லுதல் அவையடக்கு என்றவாறு.

'வல்லுதல்' என்பது, ஒன்று வல்லனாதல்; ஒருவன் வல்லனவற்றை 'வல்ல' என்பவாகலான் வல்லாதனவற்றை 'வல்லா' என்றானென்பது.[1] அதற்குச் செய்யுள்:

---

1. வல்ல - வல்லமையுள்ளன, வல்லா - வல்லமையில்லாதன

"திரைத்த விரிக்கிற் றிரைப்பினா வாய்போ
லுரைத்த வுரைபோகக் கேட்டு - முரைத்த
பயன்றவா செய்வார் சிலரேதந் நெஞ்சத்
தியன்றவா செய்வார் பலர்."

இது, பூதத்தார் அவையடக்கு.

'அரிறபத் தெரியின்' என்றதனானே, யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடைய தொச்சக வொருபோகினும் அவையடக்கியல் சிறுபான்மை தொடர்நிலைக்கண் வருமெனக் கொள்க. (113)

## நச்சினார்க்கினியர்

**113. அவையடக் கியலே......தன்றே.**

*இது, முறையே அவையடக்கியல் கூறுகின்றது.*

(இ-ள்) அவையடக்கியலே அரில்தபத் தெரியின் - அவை அடக்கிய இயலைக் குற்றமற ஆராயின், வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மின் என்று - வல்லாதவற்றைக் கூறினும் அவற்றை ஆராய்ந்து கொள்க என்று, எல்லா மாந்தர்க்கும் வழிமொழிந்தன்று - எல்லார்க்கும் வழிபடு கிளவி கூறியதாம் எ-று.

வல்லுதல் என்பது ஒன்று வல்லனாதல்; அஃது ஒருவன் வல்லனவற்றை வல்ல என்பவாகலின், அதனெதிர்மறை 'வல்லா' என்றாயிற்று.

(எ-டு)"திரைத்த விரிக்கிற் றிரைப்பினா வாய்போல்
உரைத்த வுரைபோகக் கேட்டு - முரைத்த
பயின்றவா செய்வார் சிலரேதந் நெஞ்சத்
தியன்றவா செய்வார் பலர்."

இது பூதத்தாரவையடக்கு.

அரில்தப என்றதனாற் சிறுபான்மை யாப்பினும் பொருளினும் வேறுபட்ட தொச்சகத்தாற் கூறுந் தொடர்நிலைச் செய்யுட்கும் அவை யடக்கியல் கொள்க. அது,

"கற்பா லுமிழ்ந்த மணியுங்கழு வாது விட்டா
னற்பா லழியு நகைவெண் மதிபோ னிறைந்த
சொற்பா லுமிழ்ந்த மறுவு மதியாற் கழூஉவிப்
பொற்பா விழைத்துக் கொளற்பாலர் புலமை மிக்கார்"

(சிந்தா. பாயிரம்)

(113)

என வரும்.

**சிவலிங்கனார்**

**அவையடக்.......தன்றே.**

(இ-ள்) அவையடக்கியலாவது யாதென ஆராயின், நான் எளியன சொன்னாலும் பகுத்துணர்ந்து ஏற்பன கொள்ளுங்கள் என அவையிலுள்ள எல்லார்க்கும் அடங்கிக் கூறுவதாம், எ-று.

தமிழ் நூல்களில் வரும் அவையடக்கப் பாடல்கள் உதாரணங் களாம்.

**செவியறிவுறூஉ**

**419. செவியுறை தானே,**
**பொங்குத லின்றிப் புரையோர் நாப்பண்**
**அவிதல் கடனெனச் செவியுறுத் தன்றே.[1] (110)**

**இலக்குவனார்**

426. The giving of sound advice is that it is the duty to be modest among the great without being puffed up with pride.

**பி.இ.நா.**

இ.வி. 749

பொங்குத லின்றிப், புரையோர் நாப்பண்
அவிதல் கடன்எனச் செவியறி வுறுத்தும்
செவியறி வுறூஉவும்

**இளம்பூரணர்**

**419. செவியுறை தானே........தன்றே.**

*என்-னின், செவியறிவுறூஉ வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) செவியுறையாவது பெரியோர் நடுவு வெகுடலின்றித் தாழ்ந்தொழுகுதல் கடன் எனச் செவியறிவுறுத்துதல் என்றவாறு.

"அறிமி னறநெறி.............பெரியார்வாய்ச் சொல்" (நாலடி.172)

என வரும்.

இத்துணையும் பாக்கட்குரிய பொருளுணர்த்தியது. (110)

1 தந்றே - பேரா. நச். பாடம்

## பேராசிரியர்

**426. செவியுறை தானே........தற்றே.**

*இஃது, இறுதிநின்ற செவியுறை யுணர்த்துகிறது.*

(இ-ள்) செவியுறை - செவிமருந்து. அதுவும் ஒப்பினாகிய பெயர்; தானே யென நின்ற ஏகாரம் பிரிநிலை; பொங்குதலின்றி - பெருக்க மின்றி; (புரையோர் நாப்பண் அவிதல் கடன் எனச் செவியுறுத்தன்றே) - பெரியோர் நடுவண் அடங்கி வாழ்தல் கடப்பாடெனச் சொல்லிச் செவிக்கணறிவுறுத்துவது செவியறிவுறூஉ என்றவாறு.

அஃது அடங்கி வாழ்வார்க்குப் புகழாதலான் வாழ்த்தின்பாற்பட்டது; அதற்குச் செய்யுள்:

"வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்" (புறம்.6)

என்பதனுள்,

"பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே
யிறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த
நான்மறை முனிவ ரேந்துகை யெதிரே"

எனவும்,

"என்று மின்சொல் லெண்பதத்தை யாகுமதி பெரும"
(புறம்.40)

எனவும்,

"பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற" (குறள்.95)

எனவும் வரும்.

இத்துணையும் பாவினது பெயரும் முறையும் எண்ணும் பொருட்கு உரியவற்றுக்கண் வரையறையுங் கூறியவாறு. (114)

## நச்சினார்க்கினியர்

**114. செவியுறை தானே..............தற்றே.**

*இது, முறையே செவியுறை கூறுகின்றது.*

(இ-ள்) செவிமருந்து போறலிற் செவியுறை யென்றார். பெருக்கமின்றிப் பெரியோர் நடுவண் அடங்கி வாழ்தல் கடப்பாடு எனக் கூறிச் செவிக்கு அறிவுறுத்துவது செவியறிவுறூஉ எ-று.

தானே என்னும் ஏகாரம் பிரிநிலை; அஃது அடங்கி வாழ்வார்க்குப் புகழாதலின் வாழ்த்தின்பாற் பட்டது. அது,

"வடாஅது பனிபடு நெடுவரை வடக்குந்
தெனாஅ துருகெழு.......மன்னுக பெருமநீ நிலமிசை யானே"
(புறம்.6)

"என்று மின்சொ லெண்பதத்தை யாகுமதி பெரும" (புறம்.40)

என வரும்.

தானே என்றதனான் இன்னகுணத்தை யாவாயென்று வாழ்த்திப் பின் செவியறிவுறுத்தல் கொள்க.

இத்துணையும் பாவின் பெயரும், எண்ணுமுறையும், வரையறையும், அவை பொருட்குரிமையுங் கூறிற்று. (114)

## சிவலிங்கனார்

**செவியுறை............தற்றே.**

(இ-ள்) செவியுறை என்பது, மேலோரிடத்துத் தற்பெருமை கொள்ளுதலின்றி அவர்க்கு அடங்கி நடத்தலே கடப்பாடு எனச் செவியில் அறிவுறுத்துவது எ-று.

(உ-ம்)"தந்தைதாய் தன்னையர் தீகுமறி புலவோர்
முந்திய வயதினர் ஊருயர் மக்கள்
வந்தவர்ப் பணிந்துநின் வரம்புகட வாமல்
இந்த வுலகில் நிகழ்தல்நின் கடனே."

நேரடிக்குரிய பாக்கள்

**420. ஒத்தா ழிசையும் மண்டில யாப்புங்**
**குட்டமும் நேரடிக் கொட்டின வென்ப. (111)**

## இலக்குவனார்

427. *Oththālisai* and *mandila yāppu* and *kuttam* - they say - cling to *nēr* line (of four feet)

## இளம்பூரணர்

**420. ஒத்தா ழிசையும்..........வென்ப.**

*என்-னின், சில செய்யுள்களில் அடிவரையறுத்தலை நுதலிற்று.*

(இ-ள்) ஒத்தாழிசைக் கலிக்கு உறுப்பாகிய ஒத்தாழிசையும், ஆசிரியப்பாவின்கண் நிலைமண்டிலம் அடிமறிமண்டிலம் என்பனவும், ஒத்தாழிசைக்கும் கொச்சகத்திற்கும் பொதுவாகிய குட்டமும் நாற்சீரடிக்குப் பொருந்தின என்றவாறு.

மேல் ஆசிரியப்பாவின் ஈற்றயலினும், இடையினும் முச்சீரும் இருசீரும் ஐஞ்சீரும் வரும் என்றதனானே, எல்லா வடியும் ஒத்து வருவனவு முளவென மண்டிலம் கூறவேண்டிற்று.

கலிப்பாவிற்குச் சுரிதகம் ஈற்றடி முச்சீரானும் ஈற்றயலடி முச்சீரானும் வரும்[1] என்றமையால், தாழிசையுந் தரவும் நாற்சீரானல்லது பிறவாற்றான் வாராவெனக் கூறல் வேண்டிற்று. குட்டமெனினும் தரவெனினும் ஒக்கும்.[2]

இனிக் கலிக் குறுப்பாகிய சின்னங்கள் இருசீரானும் முச்சீரானும் வருதலானும் தனிச்சொல் ஒருசீரானும் வருதலானும் வேறு ஓத வேண்டிற்று.

உதாரணம் முன்னர்க் காட்டுதும். (111)

## பேராசிரியர்

**427. ஒத்தா ழிசையு..............வென்ப.**

*இதுவும், மேனின்ற அதிகாரத்தாற் பாவிலக்கணமே கூறுகின்றன.*

(இ-ள்) ஒத்தாழிசைக் கலியின்கண்ணும் மண்டில யாப்பின் கண்ணும் குட்டம் வருங்கால் அளவடிக்குப் பொருந்தி வருந் தத்தம் பாக்கள் என்றவாறு.

பாவென்பது, அதிகாரத்தாற் கொள்ளப்படும். ஒத்தாழிசைக்கலி அளவடியுஞ் சிந்தடியும் குறளடியும் விராய் நிற்குமாயினும் அளவல்லா வடியேனும் அளவடிக்கும் பொருந்துமாற்றாற் பாக் கொளுத்தப்படு மென்பது.

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" (கலி.11)

என அளவடிக்கண் துள்ளலோசை வந்தது.

"போரவுணர்க் கடந்தோய்நீ
புணர்மருதம் பிளந்தோய்நீ" (விளக்கத்தனார் பாடல்)

எனக் குறளடிக்கண்ணும் அவ்வாறே துள்ளலோசை வந்தவாறு கண்டு கொள்க.

"நீரின் றண்மையுந் தீயின் வெம்மையுஞ்
சாரச் சார்ந்து தீரத் தீருஞ்
சார னாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாதே" (யா.வி.ப.1052)

1. வெண்பாச் சுரிதகமாயின் ஈற்றடி முச்சீராகவும், ஆசிரியச் சுரிதகமாயின் ஈற்றயலடி முச்சீராகவும் வரும்.

2. குட்டம் என்பதற்குப் பேராசிரியர் உரை பார்க்க.

என இஃது இடையடி குறைந்தமையிற் குட்டமெனப் பட்டது. நாற்சீரடி யாத்து வருவன மண்டிலயாப் பெனப்படும். அவைபோலக் குட்டமும் நேரடிக்குப் பாப்பொருந்தின என்றவாறு.

ஈற்றின் மண்டில மோதிய தென்னையெனின், அது சொல்லாக்காற் குட்டமே நேரடிக்கு ஒட்டுவதாவான் சொல்லுமாகலி னென்பது. மண்டில மென்பன:

"மாறாக் காதலர் மலைமறந் தனரே
யாறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே" (யா.வி.ப.369)

என்றற் றொடக்கத்தன.

ஒத்தாழிசையை முன்வைத்த தென்னையெனின், மண்டிலம் போல்வனவும் குட்டம் போல்வனவும் கலிப்பாவினுட் சிறுபான்மை யென்றற்கென்பது. அவை அளவடிக்குரிமை யாண்டுப் பெறுதுமெனின், அவை தம்மை உறழுங்கால் ஓதிய நிலவகையானும்,

"இன்சீர் வகையி னைந்தடிக்கு முரிய" (366)

என்னுஞ் சீர்வகையானும் பெறுதுமென்பது. இதனது பயம்: குறளடிவஞ்சிப்பாப் போலப் பாவேறுபடா வென்பது. 'ஒட்டின' என்றதனான் இத்துணை போகாது சிறுவரவிற்றாய் வரும் வெண்பாக்கண்ணு மென்பது கொள்க. (115)

## நச்சினார்க்கினியர்

**115. ஒத்தா ழிசையும்.......என்ப.**

*இதுவும் பாவிலக்கணங் கூறுகின்றது.*

(இ-ள்) ஒத்தாழிசையும் - ஒத்தாழ்ந்த வோசையும், மண்டில யாப்பும் - மண்டலித்து வரும் யாப்பும், குட்டமும் - இருசீரும் முச்சீருமாகிக் குறைந்து வருவனவும், நேரடிக்கு ஒட்டின என்ப - நாற்சீரடிக்குப் பொருந்தின என்று கூறுவராசிரியர் எ-று.

என்றதனால், நாற்சீரடி முரற்கைபடத் துள்ளிவருதலேயன்றித் தாழம்பட வோசை பெற்றும் வருமென்றார். அதுவே ஒத்தாழிசையை ஒத்து மூன்றாய் வருமென்று 'ஒத்துமூன் றாகு மொத்தா ழிசையே' (141) என்புழிக் கூறுமாற்றா னுணர்க.

இனி, நாற்சீரடியாய் வருமாசிரியமும் வெண்பாவும் ஈற்றயலடியும் ஈற்றடியும் முச்சீராய் வருமென முன்விதித்தவை ஒருகால் நாற்சீராயும் வருமென்றற்கு மண்டிலயாப்பென்றார்; அது மண்டில வாசிரியப்பாவும் மண்டில வெண்பாவுமாம்.

(எ-டு)“வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சார னாட செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே” **(குறுந்.18)**

எனவும்,

“ அறையருவி யாடாள் தினைப்புனமுங் காவாள்.........குன்று” எனவும் மண்டலித்து வந்தன.

இனி, நாற்சீரடியாய் வரும் ஆசிரியப்பாவும் குட்டம்பட்டு வருமென்றார். ஆசிரியப்பாவிற்குக் குட்டமாவது குறளடி வஞ்சியும் சிந்தடி வஞ்சியும் பொருந்தி வருதல். வெண்பாவிற்குக் குட்டமாவது ஈற்றய லடியேயன்றி ஏனையடியுங் குறைதல்.

(எ-டு)“வளித்தலைஇய தீயும்,
தீமுரணிய நீருமென் றாஅங்கு” **(புறம்.2)**

என நாற்சீரடிக்கு இருசீரும் முச்சீரும் பொருந்தி ஆசிரியம் வந்தது.

“அட்டாலும்பால்”[1], “வஞ்சி வெளிய”, “நகாஅ”, “நாளும்”, “கறைப்பற் பெரு” இவையே எழுதுக. இவை வெண்பாக் குட்டம்பட்டு வந்தன. (115)

## சிவலிங்கனார்

**ஒத்தாழிசை..........வென்ப.**

(இ-ள்) ஒத்தாழிசையும், மண்டில யாப்பும் குட்டமும் நேரடிக்குப் பொருந்தின, எ-று.

நேரடி என்பது நேரடியான் வரும் கலி, வெண்பா, ஆசிரியம் எனும் பாக்களை யுணர்த்தும். எனவே அப் பாக்களில் ஒத்தாழிசை, மண்டில யாப்பு, குட்டம் என்பவை வரும் என்றவாறாம்.

ஒத்தாழிசை ஒருபொருள்மேல் மூன்றடுக்கிவரும் தாழிசை யாதலின், அது கலிப்பாவில் வரும். மண்டிலயாப்பு ஆசிரியப்பாவில் நிலைமண்டில ஆசிரியப்பா எனப்பட்டு வரும். வெண்பாவில் ஈற்றடி முச்சீராய் வாராமல் நாற்சீராய் வந்து நிலைமண்டில வெண்பா எனப்படும். குட்டம் என்பது குறைவு. குறைந்த சீர்கள் இணைக்குற ளாசிரியப்பாவில்

---

1. “அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும்.”
இதில் இரண்டாம் அடி குட்டம்.

வரும். நேரடி போலவே குறளடியும் சிந்தடியும் அடி எனப்படும். வெண்பாவிலும் இறுதியடியேயன்றி இடையடியும் குட்டமாக வரும். "அட்டாலும் பால்சுவையில்" என்னும் பாடலில் இரண்டாமடி முச்சீரது காண்க. கலிப்பாவில் சின்னவுறுப்பு இருசீரடியானும் முச்சீரடியானும் வரும்.

வெண்பாவின் இறுதியடியும் ஆசிரியப்பாவின் ஈற்றயலடியும் முச்சீரான் வருவது இங்குக் காட்டப்படவேண்டா, ஆசிரியர் முன்னர் விதந்தமையின்.

**புறனடை**

## 421. குட்டம் எருத்தடி உடைத்தும் ஆகும். (112)

## இலக்குவனார்

428. *Kuttam* will have *eruththu* line also.

## இளம்பூரணர்

**421. குட்டம்...........ஆகும்.**

*என்-னின், மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) தரவு ஈற்றயலடி முச்சீரான் வரவும் பெறும் என்றவாறு. எருத்தடி யுடைத்தென்றதனானே ஈற்றயலடி முச்சீர் எனப் பொருள்படுமோ எனின், ஆசிரியப்பாவின் ஈற்றயலடி முச்சீரான் வருதல் பெருவழக்காதலானும் இனிவருகின்ற சூத்திரம் தூக்கியலென ஓதுகையானும் இவ்வாறு பொருள்படுமென்று கொள்க. உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

இன்னும் குட்டம் என்பதனைத் தரவுகொச்சகமாகிய கொச்சக வொருபோகிற்குப் பெயராக வழங்கினும் அமையும். அவ்வழி ஒத்தாழிசை என்பதனை ஒத்தாழிசைத் தரவெனத் தரவையுங் கூட்டிப் பொருளுரைக்கப்படும். (112)

## பேராசிரியர்

**428. குட்ட மெருத்தடி..........மாகும்.**

*இது, குட்டத்திற்கோர் சிறப்பு விதி.*

(இ-ள்) குட்டம் எருத்தடியின்கண்ணும் வரும் என்றவாறு.

மேல் ஆராய்ச்சிப்பட்ட குட்டம் இடைவருதலன்றி ஒருபாட்டின் ஈற்றயலடிக்கண்ணே வந்தொழிதலும் உண்டன்றே? அதுவும் பாவிற்கேற்பக் குறைக்கப்படுமென்பான்,

"குட்ட மெருத்தடி யுடைத்து மாகும்"

என்றான்; குறைத்தற்குக் கூறினானல்ல னென்பது. இதனை இவ்வாறு கூறவே மேற்கூறிய குட்டம் ஒத்தாழிசைக்கட்போல இடையிடை வருமென்பது பெற்றாம்.

"உடைதிரைப் பிதிர்விற் பொங்கிமுன்
கடல்போற் றோன்றல காடிறந் தோரே" (அகம்.2)

என, ஈற்றயலடி முச்சீரான் வந்தது. பிறவும் அன்ன. (116)

## நச்சினார்க்கினியர்

**116. குட்ட மெருத்தடி.............மாகும்.**

*இது, முற்கூறிய குட்டம் தரவுக்கும் உரித்தென்கின்றது.*

(இ-ள்) தரவினது ஈற்றடி குறைந்துவருதலை யுடைத்தாம் எ-று.

எருத்து என்றது தரவை[1]. அஃது 'எருத்தே கொச்சகம்' (153) என்பதனா னுணர்க.

(எ-டு)"மெல்லிணர்க் கொன்றையும்" (முல்லைக்கலி.3)

"மலிதிரை யூர்ந்துதன்" (முல்லைக்கலி.4)

எனவும் வரும். (116)

## சிவலிங்கனார்

**குட்டம்.................மாகும்.**

(இ-ள்) சீர்குறைந்த அடியாகிய குட்டம் தரவின் ஈற்றடியிலும் வரும், எ-று.

எருத்தம் என்பது கலிப்பாவின் தரவாம். உதாரணம் முல்லைக் கலி மூன்றாம், நான்காம் பாடல்களிற் காண்க.

**422. மண்டிலங் குட்டம் என்றிவை இரண்டும்
செந்தூக் கியல என்மனார் புலவர். (113)**

## இலக்குவனார்

429. *Mandilam* and *kuttam* - these two-are in the nature of *senthūkku* - the poets say.

## இளம்பூரணர்

**422. மண்டிலங் குட்டம்.........புலவர்.**

1. எருத்து என்பதை ஈற்றயலடி என்பர் மற்றையோர் பார்க்க.

*என்-னின், மேற் சொல்லப்பட்டவற்றுள் மண்டிலம் குட்டம் என்பனவற்றிற்குரியதோர் ஓசை வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) மண்டிலமாகக் கூறப்படும் பாவும் குட்டமெனக் கூறப்படும் பாவும் அகவலோசை இயல என்றவாறு.

உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

இனி, நான்கு பாவினும் வெண்பாவுங் கலிப்பாவும் முன்னெடுத் தோதுகின்றா ராதலானும், ஆசிரியப்பாவும் வஞ்சிப்பாவும் இத்துணையும் ஓதிய இலக்கணத்தான் முடித்தலானும், அவையிற்றிற்கு உதாரணம் ஈண்டே காட்டுதும். ஆசிரியப்பாவாவது பெரும்பான்மை இயற்சீரானும் ஆசிரிய வுரிச்சீரானும் ஆசிரியத்தளையானும் அகவலோசையானும் நாற்சீரடியானும் சிறுபான்மை ஒழிந்த சீரானும் தளையானும் அடியானும் வருவது. அவ்வாறாதல் மேற்கூறப்பட்ட சூத்திரங்களான் உணர்க.

இப் பாவிற்கு ஈற்றெழுத்து வரையறுத்துணர்த்தாமையின் எல்லா வீறுமாம். எற்றுக்கு?

"அகவல் இசையன அகவல் மற்றவை
ஏஓ ஈஆ என்ஐஎன் றிறுமே" (யா.வி.ப.69)

என்று வரைந்தோதினார் உளரால் எனின்,

"கோள்மா கொட்குமென் றஞ்சுவல் ஒன்னார்க்
கிருவிசும்பு கொடுக்கும் நெடுவேல் வழுதி
கூடல் அன்ன குறுந்தொடி அரிவை
ஆடமை மென்றோள் நசைஇ நாடொறும்
வடியமை எஃகம் வலவயின் ஏந்திக்
கைபோற் காந்தட் கடிமலர் கமழும்
மைதோய் வெற்பன் வைகிருள் வருமிடம்" (யா.வி)

எனப் பிறவாற்றானும் வருதலின் ஈறு வரையறுக்கப்படா தென்று கொள்க.

இனி, இவ் வாசிரியப் பாவினை அடிநிலையாற் பெயரிட்டு வழங்கப்படும் அஃதாமாறு:

ஈற்றயலடி முச்சீரான் வருவதனை நேரிசையாசிரியம் என்ப.

(உ-ம்) "முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே" (யா.வி.ப.122)

என வரும்.

இடையிடை முச்சீர் வரின் இணைக்குற ளாசிரியம் என்ப.

(உ-ம்) "நீரின் தண்மையும் தீயின் வெம்மையும்
சாரச் சார்ந்து தீரத் தீரும்
சாரல் நாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாதே" (யா.வி.ப.257)

என வரும்.

எல்லா அடியும் ஒத்து வருவதனை நிலைமண்டில ஆசிரியம் என்ப. இதற்கு இலக்கணம் முன்னர்க் காட்டுதும்.

"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே" (குறுந்.18)

என வரும்.

இனி, எல்லா அடியும் ஒத்துவரும் பாட்டினையே அடிமறி மண்டில ஆசிரியம் என்று வழங்குப. இதற்கிலக்கணஞ் சொல்லதிகாரத் துள் 'நிரனிறை சுண்ணம்' (எச்சவியல்,8) என்னும் சூத்திரத்தாற் கொள்க.

"சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளிர் ஆரணங் கினரே
வாரல் எனினே யானஞ் சுவலே
சாரல் நாட நீவர லாறே" (யா.வி.ப.259)

என வரும்.

இதனுள் யாதானும் ஓரடியை முதலுமுடிவுமாக உச்சரித்தாலும் ஓசையும் பொருளும் வழுவாது வருதலின் அடிமறியாயிற்று.

இனி, முச்சீரடி முதலாக அறுசீரடி யீறாக மயங்கிய ஆசிரியத்தினை அடிமயங்காசிரிய மெனவும், வெண்பாவடி மயங்கிய ஆசிரியத்தினை வெள்ளடிமயங்காசிரிய மெனவும், வஞ்சியடி மயங்கிய ஆசிரியத்தினை வஞ்சிஅடி மயங்காசிரிய மெனவும் வழங்கப்படும். இதற்கு இலக்கணம்:

"வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும்
ஐஞ்சீ ரடியும் உளவென மொழிப" (தொல்.செய்.60)

"அறுசீ ரடியே ஆசிரியத் தளையொடு
நெறிபெற்று வருஉ நேரடி முன்னே" (தொல்.செய்.61)

"இயற்சீர் வெள்ளடி ஆசிரிய மருங்கின்
நிலைக்குரி மரபின் நிற்கவும் பெறுமே" (தொல்.செய்.59)

எனவும்,

" ஆசிரிய நடைத்தே வஞ்சி" (தொல்.செய்.104)

என ஒற்றுமைப்படுத்துதலானுங் கொள்க.

(உ-ம்) "சிறியகட் பெறினே யெமக்............தவப் பலவே" (புறம்.235)

இப் பதினேழடி யாசிரியத்துள் ஏழாமடியும் பன்னிரண்டாமடியும் முச்சீரான் வந்தன. மூன்றாமடி முதலாக ஆறாமடி யீறாக நான்கடியும் பதினாலாமடியும் ஐஞ்சீரான் வந்தன. இரண்டாமடியும் பதினொன்றா மடியும் அறுசீரான் வந்தன. ஏனைய நாற்சீரான் வந்தன. இவ்வாறு வருதலின் அடிமயங்காசிரியம் ஆயிற்று.

"எறும்பி அளையிற் குறும்பல் சுனைய
உலைக்கல் லன்ன பாறை யேறிக்
கொடுவில் லெயினர் பகழி மாய்க்குங்
கவலைத் தென்பஅவர் தேர்சென்ற வாறே
அதுமற் றவலங் கொள்ளாது
நொதுமலர்க் கலிழுமிவ் அழுங்க லூரே." (குறுந்.12)

இதனுள், முதலடி இயற்சீர் வெள்ளடியாதலின் வெள்ளடி விரவிய ஆசிரிய மெனப்படும்.

"இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் மாநிலம்
உடையிலை நடுவண திடைபிறர்க் கின்றித்
தாமே யாண்ட ஏமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
காடுபதி யாகப் போகித் தத்தம்
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே
அதனால், நீயுங் கேண்மதி யத்தை வீயா
துடம்பொடு நின்ற உயிரும் இல்லை
மடங்க லுண்மை மாயமோ அன்றே
கள்ளி ஏய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலுள் ஆங்கண்
உப்பிலாஅ அவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்கா
திழிபிறப்பினோன் ஈயப்பெற்று
நிலங்கல னாக விலங்குபலி மிசையும்
இன்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் துறந்தே." (புறம்.363)

இதனுள்,

"உப்பிலாஅ அவிப்புழுக்கல்"

என்பது முதலாக மூன்றடியும் வஞ்சியடி.

இனி, வஞ்சிப்பா ஆவது வஞ்சியுரிச்சீரானும் ஏனைச் சீரானும் இருசீரடியானும் முச்சீரடியானுந் தூங்கலோசையானுந் வந்து தனிச்சொல் பெற்று ஆசிரியச் சுரிதகத்தான் இறுவது. இதற்கு இலக்கணம்:

"வஞ்சிச் சீரென வகைபெற் றனவே
வெண்சீ ரல்லா மூவகை யென்ப" (தொல்.செய்.19)

"தன்பா வல்வழித் தானடை வின்றே" (தொல்.செய்.20)

"வஞ்சி மருங்கின் எஞ்சிய வுரிய" (தொல்.செய்.21)

"வஞ்சி யடியே இருசீர்த் தாகும்" (தொல்.செய்.43)

"முச்சீ ரானும் வருமிடன் உடைத்தே" (தொல்.செய்.45)

"வஞ்சித் தூக்கே செந்தூக் கியற்றே" (தொல்.செய்.68)

என்பனவற்றாற் கொள்க. இப் பா இருசீரடி வஞ்சிப்பா, முச்சீரடி வஞ்சிப்பா என இருவகைப்படும்.

"பூந்தாமரைப் போதலமரத்
தேம்புனலிடை மீன்திரிதரும்
வளவயலிடைக் களவயின்மகிழ்
வினைக்கம்பலை மனைச்சிலம்பவும்
மனைச்சிலம்பிய மணமுரசமும்
வயற்கம்பலைக் கயலார்ப்பவும், நாளும்
மகிழின் மகிழ்தூங் கூரன்
புகழ்தல் ஆனாப் பெருவண் மையனே." (யா.வி.ப.336)

இது குறளடியான் வந்து தனிச்சொற் பெற்று ஈற்றயலடி முச்சீரான் வந்தது. ஆசிரியச் சுரிதகத்தா லிற்ற இருசீரடி வஞ்சிப்பா தனிச்சொற் பெறுதல் எடுத்தோதிற் றிலராயினும் 'உரையிற் கோடல்' என்பதனாற் கொள்க.

"கொடிவாலன கருநிறத்தன குறுந்தாளன
வடிவாளெயிற் றழலுளையன வள்ளுகிரன
பணையெருத்தின் இணையரிமான் அணையேறித்
துணையில்லாத துறவுநெறிக் கிறைவனாகி
எயில்நடுவ ணினிதிருந் தெல்லோர்க்கும்
பயில்படுவினை பத்தியலாற் செப்பியோன், புணையெனத்
திருவுறு திருந்தடி திசைதொழ
வெருவுறு நாற்கதி வீடுநனி எளிதே." (யா.வி.ப.337)

இது முச்சீரடி வஞ்சிப்பா.

இனி,

"வஞ்சி மருங்கின் எஞ்சிய உரிய" (தொல்.செய்.21)

என்றோதியவதனால் ஆசிரியவடியோடும் வெண்பாவடியோடுங் கலியடியோடும் மயங்கி வருவன கொள்க.

பட்டினப்பாலையுள்,

"நேரிழை மகளிர் உணங்குணாக் கவரும்" (22)

என்பது ஆசிரியவடி

"கோழி எறிந்த கொடுங்காற் கனங்குழை" (23)

என்பது வெண்பாவடி.

"வயலாமைப் புழுக்குண்டு வறளடும்பின் மலர்மலைந்து" (64-5)

என்பது கலியடி.

இனி, வெண்பா வாமாறும் கலிப்பா வாமாறும் முன்னர்க் காட்டுதும். (113)

## பேராசிரியர்

**429. மண்டிலங் குட்ட..........புலவர்.**

*இது, மண்டிலங் குட்டமும் வருமிடனுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) மேற்கூறிய மூன்றனையும் இன்ன பாவென்பது உணர்த்தினான்; அவற்றுள், இறுதிநின்ற மண்டிலமுங் குட்டமும் ஆசிரியப்பாவினை உறுப்பாகவுடைய என்றவாறு.

எனவே, ஒத்தாழிசையாகிற் கலிப்பாவினை உறுப்பாகவுடைத் தென்பது பெறுதும்; என்னை?

"ஒத்தா ழிசைக்கலி கலிவெண் பாட்டே
கொச்சக முறழொடு கலிநால் வகைத்தே" (442)

என்ப வாதலான்.

மேற்கூறிய மண்டிலவாசிரியத்தினை, நிலைமண்டிலமெனவும் அடிமறிமண்டிலமெனவும் பெயரிட்டு வழங்குவாரும் உளர் (யா.வி.சூ.73-4); நின்றவாறு நிற்றலும் அடிமறித்துக்கொள்ளினும் பொருள் திரியாது நிற்றலுமுடைய வென்பது போலும் அவர் கருத்து. அடிமறித்தல் பொருள்கோட் பகுதியாகலான் அஃதமையும்;[1] அங்ஙனங் கொள்ளின் நிரனிறை முதலிய பொருள்கோட் பகுதியானுஞ் செய்யுள் வேறுபடுமென மறுக்க. இனி, குட்டமும் இருவகைத்தென்ப, இணைக்குறளாசிரியப்பா நேரிசையாசிரியப்பாவென; அவை அவ்வாறு கொள்ளின்(யா.வி.சூ.71.2) இழுக்கென்னை?

---

1. அஃது அமையும் என்றாலும் எனக் கொள்க.

"குட்ட மெருத்தடி யுடைத்து மாகும்" (428)

என்ற இருவகையாற் கூறினமையி னென்றலுமொன்று; இனி, ஒன்றாக வழங்குதலே வலியுடைத்து.

"குட்ட மெருத்தடி யுடைத்து மாகும்"

என ஒருமை கூறியவதனாள் ஒழிந்தவழி இரட்டித்துக் குறை வேண்டு மென்பது கொள்க. மற்று,

"ஒத்தா ழிசையு மண்டில யாப்பும்" (427)

என்றவழிக் கலிப்பா முற்கூறியதென்னையெனின், குட்டம் ஆண்டுப் பயின்றுவருதலின் ஆசிரியத்திற்கும் அதனை முற்கூறினான்; இனி, முறையானே வெண்பாக் கூறுமென்பது.

குட்டமென்பது வழக்குச் சொல்லாற் செய்த செய்யுளென்பாருமுளர். நாற்சொல்லானுமன்றிச் செய்யுள் செய்யப்படாமையின் அது[1] குட்டமென்றல் நிரம்பாது. ஒத்தாழிசையென்பது எல்லாச் செய்யுண் மேலுஞ் செல்லுமெனவும் உரைப்ப; பாவும் இனமுமெனப் பகுத்துரைப் பார்க்காம் அது பொருளாவதென மறுக்க;[2] அல்லதூஉம், ஒரோவொன்றே வருவது ஒத்தாழிசை யெனப்படாவென்பது[3] செந்தூக் கென்பது ஆசிரி யப்பா வென்றவாறு; பாவினைத் தூக்கெனவுஞ் சொல்லுப (ப•1072). 'இயல' என்பது அப் பாவானே நடக்குமென்றவாறு. இதுவும்[4] இன்ன செய்யுட்கு உரித்தெனப் பாவினை வரையறுத்ததேயாம். (117)

## நச்சினார்க்கினியர்

**117. மண்டிலங் குட்டம்............புலவர்.**

*இது, முற்கூறிய மண்டிலமும் குட்டமும் ஆசிரியத்துக்குப் பெரும் பான்மை வருமென்கின்றது.*

(இ-ள்) மண்டிலம் குட்டம் என்றிவை இரண்டும் - மண்டிலம் குட்டம் என்று முற்கூறியவை இரண்டும், செந்தூக்கு இயல என்மனார்

---

1. அது - வழக்குச் சொல்லாற் செய்யப்படுவது குட்டம் என்பது.

2. பா, இனம் எனப் பகுத்துரைப்பது வேறுபாடு கருதியாதலின் ஒத்தாழிசை என்பது பாவாகாது கலிப்பாவின் ஓர் உறுப்பாக அமைதலின் அது எல்லாச் செய்யுள்மேலும் வாராது. தாழிசை என்பதே வரும். அதனால் பாவும் இனமும் எனப் பகுத்துரைப் பார்க்குத் தாழிசை என்பது எல்லாச் செய்யுட்கும் வரும் என்பதாம்.

3. ஒரு தாழிசைமட்டும் வரின் அது ஒத்தாழிசை எனப்படாது. ஒத்துத் தாழம்பட வரும் பல தாழிசையே ஒத்தாழிசை எனப்படும்.

4. இதுவும் - இச் சூத்திரமும்

புலவர் - ஆசிரியப்பாவின்கண்ணே பயில நடக்கும் தன்மையை உடைய என்று கூறுவர் புலவர் எ-று.

எனவே, வெண்பாவின்கண் சிறுபான்மை வருமென்றவாறாயிற்று. இரண்டும் அங்ஙனம் வருதல் சான்றோர் செய்யுளுட் காண்க. (117)

## சிவலிங்கனார்

**மண்டிலம்................புலவர்.**

(இ-ள்) மண்டிலம் குட்டம் என்னும் இரண்டும் ஆசிரியப்பாவில் பயில நடக்கும் என்பர், எ-று.

வெண்பாவில் சிறுபான்மை வரும்.

**வெண்பாவால் வருவன**

**423. நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே**
**கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுளோ**
**டொத்தவை எல்லாம் வெண்பா யாப்பின. (114)**

## இலக்குவனார்

430. The verses of long *veṇbā*, short *veṇbā*, *kaikkilai*, *paripāttu* and *aṅgatham* are all in the form of *veṇbā*.

## இளம்பூரணர்

**423. நெடுவெண் பாட்டே............யாப்பின.**

(இ-ள்) நெடுவெண்பாட்டு முதலாக அங்கதச் செய்யுள் ஈறாகச் சொல்லப்பட்டவையும் அளவொத்தவையும் எல்லாம் வெண்பாயாப் பினை யுடைய என்றவாறு.

வெண்பாயாப்பாவது, வெண்சீரானும் இயற்சீரானும் வெண்டளை யானும் செப்பலோசையானும் அளவடியானும் முச்சீரீற்றடியானும் வருவது.

இவற்றிற்கு இலக்கணம் மேலோதப்பட்டது. ஈண்டு ஓதப்பட்டன வெல்லாம் இவ்வாறு வரும் என்றவாறு.

இவையெல்லாம் ஓசையான் ஒக்குமாயினும் அளவானுந் தொடையானும் பொருளானும் இனத்தானும் வேறுபடுத்திக் குறியிடுகின்றார் என்று கொள்க.[1]

---

1. அளவால் பெயர் பெற்றன - நெடுவெண்பாட்டு, குறுவெண்பாட்டு.
தொடையால் பெயர்பெற்றன - நேரிசைச் சிந்தியல் இன்னிசை வெண்பாக்கள்
பொருளால் பெயர்பெற்றன - கைக்கிளைவெண்பா, அங்கதவெண்பா.
இனத்தால் வேறுபட்டது - பரிபாடல்.

நெடுவெண்பாட்டாவது அளவடியி னெடிய பாட்டு.

குறுவெண்பாட்டாவது அளவடியிற் குறிய பாட்டு.

கைக்கிளையென்பதூஉம் அங்கதமென்பதூஉம் பொருளானாகிய பெயர்.

பரிபாட்டாவது பரிந்த பாட்டாம். அஃதாவது ஒரு வெண்பாவாக வருதலின்றிப் பலவுறுப்புகளோடு தொடர்ந்து ஒரு பாட்டாகி முற்றுப் பெறுவது. 'ஒத்தவை' என்பது அளவானும் பொருளானும் இனத்தானும் வேறுபடுக்கப்படாத சமநிலை வெண்பாக்களாம். அவையாவன நான்கடியான் வருவன. இவ் வாசிரியர் நான்கினை அளவென்றும் ஏறினவற்றை நெடிலென்றும் குறைந்தவற்றைக் குறள் சிந்து என்றும் வழங்குவராகலின். இவற்றுள் பொருளானும் இனத்தானும் வேறுபடுக்கப் படாத நெடுவெண்பாட்டும் குறுவெண்பாட்டும் சமநிலை வெண்பாட்டும் என மூவகையானும் வரும்.

குறுவெண்பாட்டாவது இரண்டடியானும் மூன்றடியானும் வரும்.

(உ-ம்) "அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தான் இடை" (குறள்.37)

இஃது இரண்டடியும் ஒரு தொடையான்[1] வருதலின் குறள் வெண்பா என்ப.

"உருவுகண் டெள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்
கச்சாணி அன்னார் உடைத்து." (குறள்.667)

இது விகற்பத்தொடையான்[2] வருதலின் விகற்பக் குறள் வெண்பா என்ப.

மூன்றடியான் வருவதனைச் சிந்தியல் வெண்பா என வழங்கப் படும்.

(உ-ம்)"நறுநீல நெய்தலும் கொட்டியுந் தீண்டப்
பிறநாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரி
பறநாட்டுப் பெண்டிர் அடி." (யா.வி.ப.226)

இஃது ஒத்து ஒருதொடையான் வருதலின், இன்னிசைச் சிந்தியல் வெண்பாவாம்.

"நற்கொற்ற வாயில் நறுங்குவளைத் தார்கொண்டு
சுற்றும்வண் டார்ப்பப் புடைத்தாளே - பொற்றேரான்
பாலைநல் வாயில் மகள்" (யா.வி.ப.226)

எனவும்,

---

1. ஒருதொடை - எதுகைத்தொடை
2. விகற்பத்தொடை-எதுகைத்தொடையின்றி வேறுபட்ட தொடை

"சுரையாழ அம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை" (யா.வி.ப.229)

எனவும் இவை வேறுபட்ட தொடையான் வருதலின் நேரிசைச் சிந்தியல் வெண்பாவாம்.

இனி, நான்கடியான் வருவன சமநிலை வெண்பா வெனப்படும். அவற்றுள் இரண்டாமடியின் இறுதிக்கண் ஒரூஉத்தொடை[1] பெற்று வருவனவற்றை நேரிசை வெண்பா எனவும், ஒரூஉத்தொடை பெறாது வருவனவற்றை இன்னிசை வெண்பா எனவும் வழங்கப்படும். ஒரூஉத் தொடை வருக்கவெதுகை யாகியும் வரும். இவையெல்லாம் உரையிற் கோடல் என்பதனாற் கொள்க.

"அறுசுவை உண்டி அமர்ந்தில்லாள் ஊட்ட
மறுசிகை நீக்கியுண் டாரும் - வறிஞராய்ச்
சென்றிரப்பர் ஓரிடத்துக் கூழெனிற் செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று." (நாலடி.1)

இது நேரிசை வெண்பா.

"கல்வரை ஏறிக் கடுவன் கனிவாழை
எல்லுறு போழ்தின் இனிய பழங்கைக்கொண்
டொல்லொலை யோடு மலைநாடன் தன்கேண்மை
சொல்லச் சொரியும் வளை." (கைந்நிலை, 7)

இஃது இன்னிசை வெண்பா.

"வளம்பட வேண்டாதார் யார்யாரும் இல்லை
அளந்தன போகம் அவரவர் ஆற்றான்
விளங்காய் திரட்டினார் இல்லை - களங்கனியைக்
காரெனச் செய்தாரும் இல்." (நாலடி.103)

நான்கடியாயும் மூன்றாமடிக்கண் தனிச்சொற் பெற்று வருதலின் நேரிசைப்பாற்படும். பிறவுமன்ன.

ஐந்தடி முதற் பன்னிரண்டடிகாறும் வருவன பஃறொடை வெண்பா எனப்படும். இதனுள்ளும் ஒரூஉத்தொடை பெற்று வருவன வற்றை நேரிசைப் பஃறொடை எனவும், ஒரூஉத் தொடையின்றி வருவன வற்றை இன்னிசைப் பஃறொடை எனவும் வழங்கப்படும்.

"சேற்றுக்கால் நீலம் செருவென்ற வேந்தன்வேற்
கூற்றுறழ் மொய்ம்பிற் பகழி பொருகயல்
தோற்றந் தொழில்வடிவு தம்முள் தடுமாற்றம்
வேற்றுமை இன்றியே யொத்தன மாவேடர்
ஆற்றுக்கா லாட்டியர் கண்." (யா.வி.ப.236)

இஃது இன்னிசைப் பஃறொடை.

---

1. ஒரூஉத்தொடை- முதற்சீரிலும் நான்காம்சீரிலும் மோனை, எதுகை முதலியன வருவது.

"பன்மாடக் கூடல் மதுரை நெடுந்தெருவில்
என்னோடு நின்றார் இருவர் அவருள்ளும்
பொன்னோடை நன்றென்றாள் நல்லளே - பொன்னோடைக்
கியானைநன் றென்றாளும் அந்நிலையள் யானை
யெருத்தத் திருந்த இலங்கிலைவேல் தென்னன்
திருத்தார்நன் றென்றேன் தியேன்." (யா.வி.ப.237)

இஃது ஆறடியான் வந்து ஒரூஉத்தொடை பெறுதலின் நேரிசைப் பஃறொடை வெண்பா.

"சிற்றாறு பாய்ந்துகளுஞ் சேயரிக் கண்ணினாய்
வற்றா வளவயலும் வாய்மாண்ட ஏரியும்
பற்றார்ப் பிணிக்கு மதிலும் படுகிடங்கும்
ஒப்ப வுடைத்தா ஒலியோவா நீர்ப்புட்கள்
தத்தி இரைதேருந் தையலாய் நின்னூர்ப்பேர்
ஒத்துணரும் வண்ண முரைத்தி யெனக்கூறக்
கட்டலர் தாமரையுள் ஏழுங் கலிமான்றேர்க்
கத்திருவர் ஐவருங் காயா மரமொன்றும்
பெற்றவழி தேர்ந்துண்ணும் பேயின் இருந்தலையும்
வித்தாகா நெல்லின் இறுதியும் பெற்றக்கால்
ஒத்தியைந்த தெம்மூர்ப்பேர் போலென்றாள் வானவன்கை
விற்பொலிந்த வெம்புருவத் தாள்." (யா.வி.ப.237)

இது பன்னிரண்டடியான் (பெருவல்லத்தைக் கூற) வந்த இன்னிசைப் பஃறொடை வெண்பா. ஏனையவும் வந்தவழிக் கண்டுகொள்க.

இவற்றுள்,

"ஒருபொருள் நுதலிய வெள்ளடி இயலால்
திரிபின்றி நடப்பது கலிவெண் பாட்டே" (தொல்.செய்.147)

என ஓதினமையாற் புணர்தல் முதலாகிய பொருள்களுள் யாதானும் ஒருபொருளைக் குறித்துத் திரிபின்றி முடியும் பஃறொடை வெண்பா வினைக் கலிவெண்பா எனவும், குறள்வெண்பா முதலாகிய எல்லா வெண்பாக்களுங் கொச்சகக்கலிக்கு உறுப்பாய் வரிற் கொச்சகம் எனவும், பரிபாடற்கு உறுப்பாய் வரிற் பரிபாட லெனவுங் கொள்ளப்படும்.

கைக்கிளை என்பது கைக்கிளைப் பொருண்மை. மேற்சொல்லப் பட்ட வெண்பாக்கள் இப் பொருள்மேல் வரிற் கைக்கிளை வெண்பா எனப்படும்.

"பொன்னார மார்பிற் புனைகழற்காற் கிள்ளிபேர்
உன்னேனென் றாழுலக்கை பற்றினேற் - கென்னோ
மனனோடு வாயெல்லாம் மல்குநீர்க் கோழிப்
புனல்நாடன் பேரே வரும்." (யா.வி.ப.62)

கைக்கிளை, வெண்பா யாப்பினால் வரும் எனவே, ஆசிரியப் பாவினால் வரப்பெறாதென்பதும், வந்ததேயாயினும் பாடாண்பாட்டுக் கைக்கிளையெனவும் கொள்ளப்படும்.

பரிபாட்டும் அங்கதமும் தத்தஞ் சிறப்புச் சூத்திரத்துட் சொல்லுதும். (114)

## பேராசிரியர்

**430. நெடுவெண் பாட்டே..........யாப்பின.**

*இது, வெண்பாவென்னும் உறுப்பினை இன்னுழிப் பாவாமெனப் பொருளுஞ் செய்யுளும்பற்றி வரையறுக்கின்றது.*

(இ-ள்) நெடுவெண்பாட்டும், குறுவெண்பாட்டும், கைக்கிளையும், பரிபாடலும், அங்கதச் செய்யுளுமென ஐந்துந் தம்மின் ஒத்து வெண்பா வென்னும் உறுப்பினானே வகுக்கப்படும் என்றவாறு.

**நெடுவெண்பாட் டென்பன:** தாமுடைய பன்னீரடியுயர்பு, இழிபு ஏழடியாக வருவனவென்பது; எனவே, நாற்சீர், அளவடியாயினாற்போல நாலடியான் வருதலே அளவிற் பட்டதாகலான் ஐந்தடி முதலாக வருவனவெல்லாம் நெடுவெண்பாட் டென்றலே வலியுடைத்து.

**குறுவெண்பாட்டென்பன:** இரண்டடியான் மூன்றடியான் வருவன; குறள் வெண்பா சிந்தியல் வெண்பா வெனப்படலும் ஒன்று; எனவே நான்கடியான் வருவன அளவியல் வெண்பாவெனப்படும். கைக்கிளைப் பொருண்மைத்தாகலின் மருட்பாவினையுங் 'கைக்கிளை' என்றான். பரிபாடலென்பது, பரிந்து வருவது; அஃதாவது கலியுறுப்புப்போலாது பலவடியும் ஏற்றுவருவது.

**அங்கதமென்பது:** முகவிலக்கு முதலாகிய விலக்குறுப்பாகியும் பிறவாற்றானும் அவை பொருளாக வருவன. 'ஒத்து' என்பது, இலக்கணத்தில் திரியாதென்றவாறு. இதனது பயம்; கைக்கிளை வெண்பாவினான் வரினும் கலிப்பாவின் பாற்படுமென்பது. பரிபாடலுஞ் சிற்றுறுப்புவகையான் ஒப்புமையுடையவென்பது கொள்க; அல்லதூஉம், குறுவெண்பாட்டும், நெடுவெண்பாட்டும் பலவாகியும் ஒன்றாய் அடங்குமென்பதூஉமாம்.

இனி, அல்லாதார் வெண்பாவினை ஐந்தெனவுஞ் சொல்லுப. அவை தனிச்சொற் பெற்றும் பெறாதும் வருமெனவும் அவ்வாறு வருங்கால் ஈற்றடி ஒழித்து எல்லாந் தனிச்சொற் பெறுதலும் அவற்றை ஒன்றொன்றனோடு பரிமாற்றித் தனிச்சொற் கொடுத்து உறழ்வனவுமாகிப் பலவாமென்பது.

அங்கதச் செய்யுளென்பது பண்புத்தொகை,[1] உம்மைத்தொகை, யென்பார்,[2] செய்யுளென்பதும் வேறென்ப; அதற்கு விடை முன்னர்ச் சொல்லுதும், 'எல்லாம் வெண்பா யாப்பின' என்பதனை, செயற் படுத்தவற்றுள் அங்கதமுங் கைக்கிளையும் மற்றைப் பாக்களும் உறுப்பாக வருமென்பது படும். (118)

## நச்சினார்க்கினியர்

**118. நெடுவெண் பாட்டே..............யாப்பின.**

*இது, வெண்பாவென்னும் உறுப்பினை இன்னுழியாமெனப் பொருளுஞ் செய்யுளும்பற்றி வரையறுக்கின்றது.*

**(இ-ள்)** முற்கூறிய நெடுவெண்பாட்டுங் குறுவெண்பாட்டுங் கைக்கிளைப் பொருண்மேல் வருஞ் செய்யுளும் பரிபாடற் செய்யுளும் வசையாகிய பொருண்மேல் வருஞ் செய்யுளுமென்ற ஐந்துந் தம்மி னொத்த செய்யுளெல்லாம் வெண்பாவென்னு முறுப்பினான் யாக்கப்படுந் தன்மையையுடைய எ-று.

எனவே, பெரும்பான்மை குறித்த பொருளை மறையாமற் செப்பிக் கூறலே அதற்கிலக்கணமாயிற்று. 'முன்னைய நான்கும்' (தொல். பொருள்.அகத்.52) என்ற அகத்திணையியற் கைக்கிளையும், 'கடவுளும் வரையார்' (தொல்.பொருள்.புறத்.28) என்ற உம்மையாற் கொண்ட புறத்திணையியற் கைக்கிளையும்; அன்றிக் 'காமஞ் சாலா விளமையோள்' (தொல்.பொருள்.புறத்.50) என்ற கைக்கிளையும், 'கைக்கிளை வகையொடு' (தொல்.பொருள்.அகத்.35) என்ற கைக்கிளை யுட் கடவுட் கைக்கிளையல்லாக் கைக்கிளையும் ஆகாவென்று கொள்க.

(எ-டு) "அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு." (குறள்.1081)

இஃது அகப்புறக் கைக்கிளை.

"களியானைத் தென்னன் கனவின்வந் தென்னை
யளியான் அளிப்பானே போன்றான் - தெளியாது
செங்காந்தள் மெல்விரலாற் சேக்கை தடவந்தேன்
என்காண்பேன் என்னலால் யான்." (முத்தொள்.24)

"மங்கின் மனங்கடைஇ மான்மாலை நின்றேற்குப்
பொங்கு மருவிப் புனனாடன் - கங்குல்
வருவான்கொல் வந்தென் வனமுலைமேல் வைகித்
தருவான்கொல் மார்பணிந்த தார்." (முத்தொள்.)

இவை சுட்டி ஒருவர்ப் பெயர்கோடலிற் புறப்புறக் கைக்கிளை.

---

1. அங்கதமாகிய செய்யுள்
2. அங்கதமும் அதனையுடைய செய்யுளும்

"குடுமிப் பருவத்தே கோதை புனைந்த
நெடுமுத்தம் பூத னிருப்பப் - படுமுத்தம்
புன்னை யரும்பும் புகாஅர்ப் புறம்பணையாய்க்
கென்னை முறைய ளிவள்."

இது கடவுட் கைக்கிளை.

இனி, "முன்னைய மூன்றும்" (தொல்.பொருள்.கள.14) எனக் களவியலுள் கூறிய கைக்கிளையிலும் வருமேனுங் உணர்க.

இனி, ஒருபொருணுதலாது திரிந்துவருங் கலிவெண்பாட்டும் ஈண்டுக் கூறிய நெடுவெண்பாட்டோடு ஒருபுடை யொப்புமையுடைமையின் அக் கலிவெண்பாட்டாக இக்காலத்தோர் கூறுகின்ற உலாச் செய்யுளும் புறப்புறக் கைக்கிளைப் பொருட்டாதல் ஒன்றென முடித்தல் என்னும் உத்தியாற் கொள்க. அவ் வுலாச் செய்யுள் இரண்டுறுப்பாயும் வெண்பாவிற் கெட்டும் வருதலிற் கலிவெண்பாவின் கூறாமாறு ஆண்டுக் கூறுதும். இக்காலத்து அதனை ஒருறுப்பாகச் செய்து செப்பலோசை யாகவுங் கூறுவர்; அது துள்ளலோசைக்கே ஏற்குமாறுணர்க.

பரிபாடலென்பது பரிந்து வருவது; அது கலியுறுப்புப் போலாது நான்கு பாவானும் வந்து பலவடியும் வருமாறு நிற்குமென் றுணர்க. அது மேற்காண்க.

அங்கதச் செய்யுள் பண்புத்தொகை; அஃது இருவகையாதல் மேற்கூறுதும். (118)

## சிவலிங்கனார்

**நெடுவெண்...........யாப்பின.**

(இ-ள்) நான்கடியின் மிக்க வடிகளான்வரும் நெடுவெண்பாட்டும் நான்கடியின் இழிந்த அடிகளான்வரும் குறுவெண்பாட்டும் கைக்கிளைப் பொருள்மேல்வரும் பாட்டும், பரிபாடற் செய்யுளும், அங்கதச் செய்யுளும் ஆகியவை வெண்பா யாப்பாற் செய்யப்படுவன, எ-று.

**நெடுவெண்பாட்டு** - பஃறொடைவெண்பா, கலிவெண்பா

**குறுவெண்பாட்டு** - குறள்வெண்பா, சிந்தியல்வெண்பா

**கைக்கிளைப்பாட்டு** - இயற்கைப்புணர்ச்சியின் முன்னர் நிகழும் காட்சி பற்றியதும் சுட்டிப் பெயர்கொள்ளும் முத்தொள்ளாயிர முதலியவற்றில்வரும் புறப்புறம்பற்றியதுமாய கைக்கிளைகள்.

**பரிபாடல்** - இது பலபாவும் கலந்துவருவதில் வரும் வெண்பாவைக் குறிக்கும்.

**அங்கதம்** - வசை இதுவும் வெண்பாவால் வரும்.

**கைக்கிளைப்பாட்டு முடியுமாறு**

**424. கைக்கிளை தானே வெண்பா வாகி**
**ஆசிரிய இயலான் முடியவும் பெறுமே. (115)**

## இலக்குவனார்

431. *Kaikkiḷai* is one which begins with *veṇbā* and ends with *āsiriyam*.

## பி.இ.நூ.

**இ.வி.749**

ஒருதலைக் காமம் உற்றகைக் கிளையும்
-----------------------------------------------
வெள்ளை முதலா ஆசிரியம் இறுதி
கொள்ளத் தொடுப்பது மருட்பா வாகும்.

## இளம்பூரணர்

**424. கைக்கிளை தானே.............பெறுமே.**

*என்-னின், எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) கைக்கிளைப் பொருண்மை வெண்பாவினால் வருதலின்றி முதலிரண்டடியும் வெண்பாவாகிக் கடையிரண்டடியும் ஆசிரியமாகி இருபாவினாலும் வரும் என்றவாறு.

இவ்வாறு வருவதனை மருட்பா என்ப. இக் கருத்தினானே மேல்,

"மருட்பா ஏனை இருசார் அல்லது
தானிது என்னுந் தன்மை இன்றே" (தொல்.செய்.81)

என ஓதினார் என்று கொள்க. அது,

"உரவொலி முந்நீர் உலாய்நிமிர்ந் தன்ன
கரவரு காமங் கனல - இரவெதிர
முள்ளெயி றிலங்கு முகிணகை
வெள்வளை நல்காள் வீடுமென் உயிரே"

(பு.வெ.மா.கைக்கிளை.9)

என வரும். (115)

## பேராசிரியர்

**431. கைக்கிளை தானே.............பெறுமே.**

*இஃது, எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) வெண்பா உறுப்பாகி வருமென்றான், அற்றன்றி

வெண்பாவினோடு ஆசிரியப்பாவும் உறுப்பாகக் கைக்கிளைக்கு வரும் என்றவாறு.

அங்ஙனம் வருவது மருட்பாவாகலாற் கைக்கிளைப் பொருளே மருட்பாவிற்குரித்தென்பது பெற்றாம்; பெறவே,

"கலிநிலை வகையும் வஞ்சியும் பெறா" (422)

என்புழி, விலக்கப்படாத ஆசிரியப்பாவும் வெண்பாவும் உறுப்பாக வருதலின் வாழ்த்தியல் வகையும் புறநிலைவாழ்த்து முதலாயினவும் கைக்கிளைப் பொருளாக வரும் மருட்பாவென்பது பெற்றாம்.

கைக்கிளை யதிகாரப்பட்டது கண்டு அதனை ஈண்டுக் கூறினான்.[1] ஒழிந்த புறநிலை வாயுறை செவியறிவுறூஉக்களும் பொருளாக மருட்பா வருமென்பது முன்னர் அளவியலுள்(472) சொல்லுதும். இவற்றுக் கெல்லாஞ் செய்யுளும் ஆண்டுக் காட்டுதும். (119)

## நச்சினார்க்கினியர்

**119. கைக்கிளை தானே..............பெறுமே.**

*இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி.*

(இ-ள்) கைக்கிளைதான் முன்பு வெண்பாவுறுப்பாகிப் பின்பு ஆசிரியப்பா உறுப்பாக வரவும்பெறும் எ-று.

இங்ஙனம் வருவது மருட்பா ஆவதூஉம், அதுதான் அகப்புறக் கைக்கிளையென்பதூஉம் உணர்க.

(எ-டு) "திருநுதல் வேரரும்புந்.............தணங்கே"

(பு.வெ.மா.கைக்கிளை)

என வரும். (119)

## சிவலிங்கனார்

**கைக்கிளை.............பெறுமே.**

(இ-ள்) கைக்கிளைதான் முன்பு வெண்பாவடிகள் வந்து பின்பு ஆசிரியவடி வந்து முடியவும்பெறும், எ-று. இது மருட்பாவாகும்.

எனவே, கைக்கிளை வெண்பா என்பது, முன்குறித்தபடி வெண்பாவாக வருவதும், இக் குறித்தபடி மருட்பாவாக வருவதும் என இருவகைப்படும்.

---

1. ஈண்டு - வெண்பாப்பற்றிய இவ்விடத்து. இது அளவியலுள்(472) கூறப்படவேண்டுவது. அதாவது புறநிலை வாயுறை கூறப்பட்ட சூத்திரத்துடன் கூறப்படவேண்டும்.

**பரிபாடல்**

**425. பரிபா டல்லே தொகைநிலை வகையின்[1]**
**இதுபா என்னும் இயனெறி இன்றிப்**
**பொதுவாய் நிற்றற்கும் உரித்தென மொழிப. (116)**

## இலக்குவனார்

432. *Paripādal* when describing its composition, may stand common without being known to which verse it belongs-they say.

## இளம்பூரணர்

**425. பரிபா டல்லே........மொழிப.**

*என்-னின், பரிபாடலாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) பரிபாடலாவது தொகைநிலைவகையாற்[2] பா இது என்று சொல்லப்படும் இலக்கணம் இன்றி எல்லாப் பாவிற்கும் பொதுவாய் நிற்றற்கு முரித்தென்று சொல்லுவர் என்றவாறு.

உம்மை எச்சவும்மையாகலான் இலக்கணங் கூறவும்படும். அது வருகின்ற சூத்திரத்துட் காட்டுதும். பொதுவாய் நிற்றலாவது,

"ஆசிரியம் வஞ்சி வெண்பாகலி மருட்பா" **(செய்.11)**

என்றோதப்பட்ட எல்லாப் பாவின் உறுப்பும் உடைத்தாதல். (116)

## பேராசிரியர்

**432. பரிபா டல்லே.......மொழிப.**

*இது, பரிபாடற் காவதோர் புறனடையுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) பரிபாடல் வெண்பாவுறுப்பாக இன்ன பாவென்ப துணரப்படாமைப் பொதுப்பட நிற்றற்கும் உரித்து என்றவாறு.

"மண்ணார்ந் திசைத்த முழவோடு கொண்டதோள்
கண்ணோ டெனவிழூஉங் காரிகை கண்டார்க்குத்
தம்மொடு நிற்குமோ நெஞ்சு" **(கடவுள் வாழ்த்து)**

எனப் பரிபாடல், வெண்பா உறுப்பாக வந்தது.

---

1. **விரியின்** - பேரா. நச். பாடம்

2. **தொகைநிலைவகை - வெண்பா ஆசிரியம் முதலியன இத்தனைவகை எனத் தொகை கொடுத்து ஓதும்வகை. அது பரிபாடற்கு இல்லை.**

"ஆயிரம் விரித்த வணங்குடை யருந்தலை
தீயுமிழ் திறலொடு முடிமிசை யணவர்" (பரிபா.1)

என்பது வெண்டளையும் ஆசிரியத்தளையும் விராய் வந்து துள்ள லோசைபடச் சொல்லவும்படுதலின்,

"இதுபா வென்னும் மியனெறி யின்றிப்
பொதுவாய் நின்றது"

எனப்படும்.

உம்மை இறந்தது தழீஇயிற்று.[1] மற்றிது கலிப்பாட்டிற்கும் ஒக்கும் பிறவெனின், ஒவ்வா தாகாதே? ஆசிரியன் இவ்வாறு கூறினமையி னென்பது.. அல்லதூஉங் கலிக்கு ஓதிய இலக்கணமின்மையானும் பரிபாடலெனவே படும் பெரும்பான்மையுமென்பது. தொகுத்து விரித்த பா நான்கனுள்ளும் அடங்காது வேறாங்கால் அது வெண்பாவினான் யாக்கப்படாது பொதுவகையான் யாக்கப்படு மென்றவாறு. (120)

## நச்சினார்க்கினியர்

**120. பரிபா டல்லே.............மொழிப.**

*இது, பரிபாடற்காவதோர் புறநடை கூறுகின்றது.*

(இ-ள்) பரிபாடல்லே - பரிபாடல் முற்கூறியவாறே வெண்பா உறுப்பான் வருதலே யன்றி, தொகைநிலை விரியின் - தொகைநிலையும் விரியுமாகக் கூறிய பா நான்கனுள், இது பா என்னும் இயல்நெறி இன்றி - இது பாவென்றறியப்படும் இயல்வழியின்றி, பொதுப்பட யாக்கப்பட்டு நிற்றற்கும் உரித்தென்று கூறுப எ-று.

உம்மை இறந்தது தழீஇயிற்று.

(எ-டு)"மண்ணார்ந் திசைக்கு முழவோடு கொண்டதோள்
கண்ணா துடன்வீழுங் காரிகை கண்டோர்க்குத்
தம்மோடு நிற்குமோ நெஞ்சு"

எனப் பரிபாடல் வெண்பாவுறுப்பான் வந்தது.

"ஆயிரம் விரித்த வணங்குடை யருந்தலை
தீயுமிழ் திறலொடு முடிமிசை யணவர்"

என்றது, வெண்டளையும் ஆசிரியத்தளையும் விராஅய்த் துள்ளலோசை படவுங் கூறப்படுதலின் இது பாவென்னு மியனெறியின்றிப் பொதுவாய் நின்றது.

கலிக்கும் இதற்கும் வேறுபாடுள் என்பது கலிக்கோதிய இலக்கணங்கள் இதற்கின்மையானும், ஆசிரியர் இவ்வாறு வேறு கூறலானும் பெறுதும். (120)

---

1. வெண்பாவில் வரும் என்பது முன்னர்க் கூறப்பட்டதைத் தழுவியது.

**சிவலிங்கனார்**

**பரிபா டல்லே............மொழிப.**

(இ-ள்) பரிபாடலாவது, இவ்வளவு என்னும் தொகைகொடுத்து ஓதும் இன்ன பா என்னும் இலக்கண நெறியின்றி நால்வகைப் பாவிலும் வருவதற்கும் உரியது என்பர், எ-று.

உம்மையால் இலக்கணம் கூறவும்படும் என்றவாறு. அது வரும் சூத்திரத்தாற் கூறப்படும். பொது எல்லாப் பாவின் உறுப்பும் உடைத்தாதல்.

**பரிபாடல் உறுப்பு**

**426. கொச்சகம் அராகஞ் சுரிதகம் எருத்தொடு**
**செப்பிய நான்கும் தனக்குறுப் பாகக்**
**காமங் கண்ணிய நிலைமைத் தாகும். (117)**

**இலக்குவனார்**

433. *Paripādal* may have *koccakam*, *arākam*, *surithakam* and *eruththu* - these four - as its parts, and the love as its theme.

**இளம்பூரணர்**

**426. கொச்சகம்...........தாகும்.**

*என்-னின், இதுவுமது.*

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட பரிபாடற் பாட்டுப் பொதுவாய் நிற்றலேயன்றிக் கொச்சகமும், அராகமும், சுரிதகமும், எருத்தும் என்று சொல்லப்பட்ட நான்குந் தனக்குறுப்பாகக் காமங்கண்ணிய நிலைமையை உடைத்து என்றவாறு.

எனவே, அறத்தினும் பொருளினும் வாராதாம்.

"வாழ்த்தியல் வகையே நாற்பாக்கும் உரித்தே" (தொல்.செய்.105)

எனச் சிறப்புவிதி யோதினமையால் நான்கு பாவினும் பரிபாடல் வெண்பா யாப்பிற்றாதலிற் கடவுள் வாழ்த்தாகியும் வரப்பெறும். கொச்சகமென்பது ஐஞ்சீரடுக்கி வருவனவும் ஆசிரியவடி, வெண்பாவடி, வஞ்சியடி, கலியடி, சொற்சீரடி, முடுகியலடி என்று சொல்லப்பட்ட அறுவகையடியானும் அமைந்த பாக்களை உறுப்பாக வுடைத்தாகி வெண்பாவியலாற் புலபடத் தோன்றுவது. இதனுட்

"சொற்சீ ரடியும் முடுகியல் அடியும்
அப்பா நிலைமைக் குரிய வாகும்" (செய்.118)

என வேறு ஓதுதலின், ஏனை நான்குங் கொச்சகப் பொருளாகக் கொள்ளப்படும்.

"தரவும் போக்கும் இடையிடை மிடைந்தும்
ஐஞ்சீ ரடுக்கியும் ஆறுமெய் பெற்றும்
வெண்பா இயலான் வெளிப்படத் தோன்றும்
பாநிலை வகையே கொச்சகக் கலியென
நூல்நவில் புலவர் நுவன்றறைந் தனரே" (செய்.148)

என்றாராகலின் இவ் விலக்கணத்தானே பரிபாடலுட் கொச்சகம் வரும்வழித் தரவுஞ் சுரிதகமும் இடையிடை வருதலுங் கொள்க. 'வெண்பா வியலான்' என்றதனால் தன்தளையானும் பிறதளையானும் வந்து ஈற்றடி முச்சீராகவும் வருவனவெல்லாங் கொள்க.

அராகமென்பது ஈரடியானும் பலவடியானுங் குற்றெழுத்து நெருங்கிவரத் தொடுப்பது. பெருமைக்கெல்லை ஆறடி. என்னை?

"அராகந் தாமே நான்காய் ஓரோவொன்று
வீதலும் உடைய மூவிரண் டடியே"

"ஈரடி யாகு மிழிபிற் கெல்லை"

என அகத்தியனார் ஓதுதலின்.

சுரிதகம் என்பது ஆசிரிய இயலானாதல் வெண்பா இயலானாதல் பாட்டிற் கருதிய பொருளை முடித்துநிற்பது.

எருத்தென்பது இரண்டடி யிழிபாகப் பத்தடிப் பெருமையாக வருவதோ ருறுப்பு. பாட்டிற்கு முகம் தரவாதலானுங் கால் சுரிதகமாதலானும் இடைநிலைப் பாட்டாகிய தாழிசையுங் கொச்சகமு மராகமுங் கொள்ளக் கிடத்தலின் எருத்தென்பது கழுத்தின் புறத்திற்குப் பெயராக வேண்டுமாதலான் அவ் வுறுப்புத் தரவைச் சார்ந்து கிடத்தல் வேண்டுமென்று கொள்க.

"தரவே எருத்த மராகங் கொச்சகம்
அடக்கியல் வகையோ டைந்துறுப் புடைத்தே"

என்பது, அகத்தியமாதலின். தரவென்பதோ ருறுப்புங் கோடல் வேண்டு மெனின், இவ் வாசிரியர் 'கொச்சகம்' என ஓதியவதனானே தரவும் அவ் விலக்கணத்திற் படுமென்பது ஒன்று. எருத்து என்பது இவ் வாசிரியர் கருத்தினால் தரவென்பது போலும்.

பரிபாடற்கண் மலையும் யாறும் ஊரும் வருணிக்கப்படும்.

"அதுதான், மலையே யாறே யூரென் றிவற்றின்
நிலைபெறு மரபி னீங்கா தாகும்"

என்றாராகலின். இனிச் சுரிதகமின்றியும் பரிபாடல் முற்றுப்பெறும்.

"கொச்சக வகையின் எண்ணொடு விராஅய்
அடக்கிய லின்றி அடங்கவும் பெறுமே"

என அகத்தியனார் ஓதுதலின். (117)

## பேராசிரியர்

**433. கொச்சக........தாகும்.**

*இது, மேற்கூறிய வகையாற் பரிபாடற்கேற்ற பாவுறுப்பினை யெடுத்து விரிகூறி இத்துணை உள்ளுறுப்புடைத்தென்கின்றது. உள்ளுறுப்பென்பன முப்பத்து நான்குறுப்பான்[1] எண்ணப்படாவோ வெனின், அவை எல்லாச் செய்யுட்கும் பொதுவாகலான் அவற்றோ டெண்ணாது, இவற்றை இப் பாவிற்கு உறுப்பாகக் கூறினானென்பது. மேல் வருகின்ற கலியுறுப்பிற்கும் இஃதொக்கும்.*

(இ-ள்) செப்பிய நான்குறுப்புங் கலிக்குறுப்பாகச் சொல்லப்பட்ட வகையானே வரும் அவை ஈண்டும் என்றவாறு.

'தனக்கு' என்றதனான் அவையல்லா உறுப்புளவென்பது முன்னர்ச் சொல்லும்;

'சொற்சீ ரடியும்' (434)

என்புழிக் காண்க.

கொச்சகமென்பது, ஒப்பினாகிய பெயர்; ஓராடையுள் ஒருவழி யடுக்கியது கொச்சகமெனப்படும்; அதுபோல ஒரு செய்யுளுட் பல குறள்[2] அடுக்கப்படுவது கொச்சகமெனப்பட்டது. குறிலிணை பயின்ற அடி அராகமெனப்படும். சுரிதகமென்பது, அடக்கிய லெனப்படும். எருத்தென்பது, தரவு. இவை நான்குறுப்பாக வருவது பரிபாடலென்றவாறு. பெரும்பான்மையுங் கொச்சகவுறுப்புப் பயின்று வருதலின் அதனை முன்வைத்தான். அராகம் எழுவாயாகாமையின் அதனை இடைவைத்தான். சுரிதகமென்பது எஞ்ஞான்றும் ஈற்றதாகலான் அதனை அதன்பின் வைத்தான். எருத்தினை ஈற்றுக்கண் வைத்தான், அதனையின்றியும் வரும் பரிபாடலென்றற்கும் இஃது இடைவருமென் றற்கு மென்பது.

(உ-ம்) "வானா ரெழிலி மழைவள நந்தத்
தேனார் சிமைய மலையி னிழிதந்து
நான்மாடக் கூட லெதிர்கொள்ள வானா
மருந்தாகுந் தீநீர் மலிதுறை மேய
விருந்தையூ ரமர்ந்த செல்வநின்
றிருந்தடி தலையுறப் பரவுதுந் தொழுது

இது தரவு.

1. செய்யுளியல் முதற் சூத்திரத்துக் கூறப்பட்டன.
2. பல குறளடிகள்

ஒருசார், அணிமலர் வேங்கை மராஅ மகிழும்
பிணிநெகிழ் பிண்டி நிவந்துசேர் போங்கி
மணிநிறங் கொண்ட மலை.

ஒருசார், தண்ணறுந் தாமரைப் பூவி னிடையிடை
வண்ண மரையிதழ்ப் போதின்வாய் வண்டார்ப்ப
விண்வீற் றிருக்குங் கயமீன் விரிதகையிற்
கண்வீற் றிருங்குங் கயம்.

ஒருசார், சாறுகொ ளோதத் திசையொடு மாறுற்
றுழவி னோதை பயின்றறி விழந்து
திருநரு மார்த்து நடுநரு மீண்டித்
திருநயத் தக்க வயல்.

ஒருசார், அறத்தொடு வேதம் புணர்தவ முற்றி
விறற்புகழ் நிற்ப விளங்கிய கேள்வித்
திறத்திற் றிரிவிலா வந்தண ரீண்டி
யறத்திற் றிரியா பதி.

இவை நான்குங் கொச்சகம்.

ஆங்கொருசார், உண்ணுவ பூசுவ பூண்ப வுடுப்பவை
மண்ணுவ மணிபொன் மலைய கடல
பண்ணிய மாசறு பயந்தரு காருகப்
புண்ணிய வணிகர் புனைமறு கொருசார்
விளைவதை வினையெவன் மென்புல வன்புலக்
களம ருழவர் கடிமறுகு பிறசார்

ஆங்க, அனையவை நல்ல நனிகூடு மின்ப
மியல்கொள நண்ணி யவை.

இது கொண்டுநிலை.

வண்டு பொரேரென வெழ
வண்டு பொரேரென வெழுங்
கடிப்புகு வேரிக் கதவமிற் றோட்டிக்
கடிப்பிகு காதிற் கனங்குழை தொடர
மிளிர்மின் வாய்ந்த விளங்கொளி நுதலா
ரூர்களிற் றன்ன செம்ம லோரும்
வாயிருள் பனிச்சை வரிசிலைப் புருவத்
தொளியிழை யோங்கிய வொண்ணுத லோரும்
புலத்தோ டளைஇப் புகழணிந் தோரு
நலத்தோ டளவிய நாணணிந் தோரும்
விடையோ டிகலிய விறனடை யோரு
நடைமட மேவிய நாணணிந் தோருங்

கடனிரை திரையிற் கருநரை யோருஞ்
சுடர்மதிக் கதிரெனத் தூநரை யோரு

மடையர் குடையர் புகையர்பூ வேந்தி
யிடையொழி வின்றி யடியுறையா ரீண்டி
விளைந்தார் விளைவின் விழுப்பயன் றுய்க்குந்
துளங்கா விழுச்சீர்த் துறக்கம் புரையு
மிருகே முத்தி யணிந்த வெருத்தின்
நனைகெழு செல்வ னகர்.

வண்டொடு தும்பியும் வண்டொடையா ழார்ப்ப
விண்ட கடகரி மேகமொ டதிரத்
தண்டா வருவியோ டிருமுழ வார்ப்ப
வரியுண்ட கண்ணாரோ டாடவர் கூடிப்
புரிவுண்ட பாடலோ டாடலுந் தோன்றக்
கூடு நறவொடு காமமகிழ் விரியக்
கூடா நறவொடு காமம் விரும்ப
வினைய பிறவு மிவைபோல் வனவு
மனையவை யெல்லா மியையும் புனையிழைப்
பூமுடி நாகர் நகர்."

இவையும் கொச்சகம்.

மணிமரு டகைவகை நெறிசெறி யொலிபொலி
யவிர்நிமிர் புகழ்கூந்தற்
பிணிநெகிழ் துளையினை தெளியொளி திகழ்ஞெகிழ்
தெரியரி மதுமகிழ் பரிமலர் மகிழுண்கண் வாணுதலோர்
மணிமயிற் றொழிலெழி லிகன்மலி திகழ்பிறி
திகழ்கடுங் கடாக்களிற் றண்ண லவரோ
டணிமிக வந்திறைஞ்ச வல்லிகப்பப் பிணிநீங்க
நல்லவை யெல்லா மியைதருந் தொல்சீர்
வரைவாய் தழுவிய கல்சேர் கிடக்கைக்
குளவா யமர்ந்தா னகர்.

இது முடுகியல்.

திகழொளி முந்நீர் கடைந்தக்கால் வெற்புத்
திகழ்பெழ வாங்கித்தஞ் சீர்ச்சிரத் தேற்றி
மகர மறிகடல் வைத்து நிறுத்துப்
புகழ்சால் சிறப்பி னிருதிறத் தோர்க்கு
மமிழ்து கடைய விருவயி னாணாகி
மிகாஅ விருவட மாழியான் வாங்க
வுகாஅ வலியி னொருதோழங் கால
மறாஅ தணிந்தாருந் தாம்.

மிகாஅ மறலிய மேவலி யெல்லாம்
புகாஅவெதிர் பூண்டாருந் தாம்.

மணிபுரை மாமலை ஞாறிய ஞால
மணிபோற் பொறுத்தாருந் தாம்.

பணிவில்சீர்ச் செல்விடைப் பாகன் றிரிபுரஞ் செற்றுழிக்
கல்லுயர் சென்னி யிமயவி னாணாகித்
தொல்புகழ் தந்தாருந் தாம்.”

இவையும் கொச்சகம்.

அணங்குடை யருந்தலை யாயிரம் விரித்த
கணங்கொள் சுற்றத் தண்ணலை வணங்கி
நல்லடி யேத்திநிற் பரவுது
மெல்லேம் பிரியற்கெஞ் சுற்றமொ டொருங்கே” (பரிபா.தி.1)

என்பது ஆசிரியச் சுரிதகம்.

“அறவோ ருள்ளா ரருமறை காப்ப”

என்னும் பரிபாடலுள்,

“செறுநர் விழையாச் செறிந்தநங் கேண்மை
மறுமுறை யானு மியைக நெறிமாண்ட
தண்வரல் வையை யெமக்கு.”

இது வெள்ளைச் சுரிதகத்தான் இற்றது.

“காமங் கண்ணிய நிலைமைத் தாகும்”

என்பது, காமப்பொருள் குறித்து வருமென்றவாறு. ‘கண்ணிய’ என்றதனானே முப்பொருளு மன்றிக் கடவுள்வாழ்த்தினும் மலை விளை யாட்டினும் புனல்விளையாட்டினும் பிறவுமெல்லாங் காமங் கண்ணியே வருமென்பது. என்னை?

“எல்லேம் பிரியற்கெஞ் சுற்றமொ டொருங்கே”

எனத் துணைபிரியாமை காரணமாகத் தொழுதேமென்றலின்.

“காமரு சுற்றமோ டொருங்குநின் னடியுறை
யாமியைந் தொன்றுபு வைகலும் பொலிகென
வேமுறு நெஞ்சத்தேம் பரவுதும்
வாய்மொழி முதல்வநின் றாணிழ றொழுதே” (பரிபா.1:62-5)

என்பதும் அது.

“எரிமலர் சினைஇய கண்ணை பூவை
விரிமலர் புரையு மேனியை மேனித்
திருஞெமிர்ந் தமர்ந்த மார்பினை மார்பிற்
றெரிமணி விளங்கும் பூணினை மால்வரை

யெரிதிரிந் தன்ன பொன்புனை யுடுக்கையை

..........................................................................

நாவ லந்தண ரருமறைப் பொருளே" (பரிபா-1:6-13)

என ஆசிரியம் வந்தது.

"நின்னொக்கும் புகழ்நிழலவை" (பரிபா.1-55)

என்பது வஞ்சித்தூக்கு; பிறவும் அன்ன காட்டுப. அது பொதுவாய் நிற்றலும் உரித்தென்றதனான் அடங்கும்.

இனி, 'செப்பிய நான்கு' என்றதனான் அராகமின்றி வருதலும், கொச்சகம் ஈற்றடி குறைந்து வருதலும், அவ்வழி அசைச்சீராகி இறுதலும், மேற்கலிப்பாவிற்குச் செப்பிய சுரிதகமாதலுங்[1] கொள்க. (121)

## நச்சினார்க்கினியர்

**121. கொச்சகம்..........தாகும்.**

*இது, பரிபாடற்கேற்ற உள்ளுறுப்புக் கூறுகின்றது. இவை சிறப்புறுப்பாகிய முப்பத்து நான்குமன்றி இதற்கும் கலிக்கும் உறுப்பாய் வருமென்று கொள்க.*

**(இ-ள்)** கொச்சகம் என்றது 'எருத்தே கொச்சகம்' (தொல்.செய்.153) என்புழிக் கூறுகின்றாம். சிறப்பில்லதனைக் கொச்சையென்று கூறும் வழக்குநோக்கி இதனையுஞ் சிறப்பின்மையாற் கொச்சகம் என்றார் என்பாருமுளர். குறிலிணை பயின்ற அடி அராகம், சுரிதகம், அடக்கியல், எருத்து, தரவு என்ற இவற்றோடே முற்கூறிய நான்கு பாவையுந் தனக்கு உறுப்பாகக் கொண்டு காமப்பொருளைக் கருதிய நிலைமைத்தாய் வரும் எ-று.

தனக்கென்றதனான் அவையல்லன பிறவுறுப்புங் கொள்வது மேற்கூறுதும். 'கண்ணிய' என்றதனாற் கடவுள் வாழ்த்தும், மலை விளையாட்டும், புனல் விளையாட்டும், பிறவும் எல்லாம் காமங் கண்ணியே வருமென்று கொள்க.

கொச்சகவுறுப்புப் பயில வருதலின் முன்வைத்தார். அராகம் இடையினல்லது வாரா. எருத்தினை ஈற்றில் வைத்தது தானன்றியும் அது (பரிபாடல்) வருதலின்.

(எ-டு)"வானா றெழிலி மழைவள நந்தத்
தேனார் சிமைய மலையி னிழிதந்து
நான்மாடக் கூட லெதிர்கொள்ள வானா
மருந்தாகு தீநீர் மலிதுறை மேய

1. கலிப்பாவிற்குச் சொல்லிய சுரிதகம் வருதலும்

**விருந்தையூ ரமர்ந்த செல்வநின் றிருந்தடி**
**தலையுறப் பரவுது தொழுது**

இது தரவு.

ஒருசார்,
அணிமலர் வேங்கை மராஅ மகிழப்
பிணிநெகிழ் பிண்டி சிவந்துசேர் போங்கி
மணிநிறங் கொண்ட மலை; ஒருசார்,

தண்ணறுந் தாமரைப் பூவி னிடையிடை
வண்ண வரியிதழ்ப் போதின்வாய் வண்டார்ப்ப
விண்வீற் றிருக்குங் கயமீன் விரிதகையிற்
கண்வீற் றிருக்குங் கயம்; ஒருசார்,

காறுக ளோதத் திரையொடு மாறுற்று
உழவி னோதை பயின்றறி விழந்து
திரிநரு மார்த்து நடுநரு மீண்டித்
திருநயத் தக்க வயல்; ஒருசார்,

அறத்தொடு வேதம் புரைதவ முற்றி
விறற்புகழ் நிற்ப விளங்கிய கேள்வித்
திறத்திற் றிரிவில்லா அந்தணர் ஈண்டி
யறத்திற் றிரியா பதி; ஆங்கொருசார்,

உண்ணுவ பூசுவ பூண்ப வுடுப்பவை
மண்ணுவ மணிபொன் மலைய கடல
பண்ணிய மாசறு பயந்தரு காருகப்
புண்ணிய வணிகர் புனைமறு கொருசார்
விழைவதை வினையெவன் மென்புல வன்புலக்
களம ருழவர் கடிமறுகு பிறசார்; ஆங்கு
அனையவை நல்ல நனிகூடு மின்ப
மியல்கொள நண்ணி யவை.

இது கொண்டுநிலை.

வண்டுபொரே ரெனவெழ வண்டுபொரே ரெனவெழுங்
கடிப்பிகு வேரிக் கதவமிற் றோட்டிக்
கடிப்பிகு காதிற் கனங்குழை தொடர
மின்மினி வாய்ந்த விளங்கொளி நுதலார்
ஊர்களிற் றன்ன செம்ம லோருமவ்
வாயிருள் பனிச்சை வரிசிலைப் புருவத்
தொளியிழை யோங்கிய வொண்ணுத லோரும்
புலத்தோ டளைஇப் புகழணிந் தோரு

நலத்தோ டளவு நாணணிந் தோரும்
விடையோ டிகலிய விறனடை யோரு
நடைமட மேவு நாணிழந் தோருங்
கடனுரை திரையிற் கருநரை யோருஞ்
சுடர்மதிக் கதிரெனத் தூநரை யோரு
மடையர் குடையர் புகையர்பூ வேந்தி
யிடையொழி வின்றி யடியுறையா ரீண்டி
விளைந்தார் விளைவின் விழுப்பயன் றுய்க்குந்
துளங்கா விழுச்சீர்த் துறக்கம் புரையு
மிருகே ழுத்தி யணிந்த வெருத்தின்
வரைகெழு செல்வ நகர்;
வண்டொடு தும்பியும் வண்டொடை யாழார்ப்ப
விண்ட கடதட மேகமோ டதிரத்
தண்டா வருவியோ டிருமுழா வார்ப்ப
வரியுண்ட கண்ணாரோடு ஆடவர் கூடிப்
புரிவுண்ட பாடலோ டாறுந் தோன்றக்
கூடு நறவொடு காமமுகிழ் விரியக்
கூடா நறவொடு காமம் விரும்ப
வினைய பிறவு மிவைபோல் வனவு
மனையவை யெல்லா மியையும் புனையிழைப்
பூமுடி நாகர் நகர்;

இவை கொச்சகம்.

மணிமரு டகைவகை நெறிசெறி யொலிபொலி
யவிர்நிமிர் புகழ்கூந்தற்
பிணிநெகிழ் துளையிணை தெளியொளி திகழ்பு
ஞெகிழ்தெரி யரிமது மகிழ்பரிமலர் மகிழுண்கண்
வாணுதலோர்
மணிமயிற் றொழிலெழி லிகலிமலி திகழ்விழி
திகழ்கடுங் கடாக்களிற் றண்ண லவரோ
டணிமிக வந்திறைஞ்ச வல்ல லிகப்பப்
பிணிநீங்க நல்லவையெல்லா மெய்தருந் தொல்சீர்
வரைவாய் தழுவிய கல்சேர் கிடக்கைக்
குளவா யமர்ந்தா னகர்.

இது முடுகியல்.

திகழொளி முந்நீர் கடைந்தக்கால் வெற்புத்
திகழ்வெழ வாங்கித்தஞ் சீர்ச்சிரத் தொற்றி
மகர மறிகடல் வைத்து நிறுத்துப்
புகழ்சால் சிறப்பி னிருதிறத் தோர்க்கு
மமுது கடைய வருவயி னாணாகி
மிகாஅ இருபட மாழியான் வாங்க

வுகாஅ வலியி னொருதோ ளங்கால்
மறாஅ தணிந்தோரும் தாம்;

மிகாஅ மறலிய மேவலி யெல்லாம்
புகாவெதிர் பூண்டாருந் தாம்;

மணிபுரை மாமலை ஞாறிய ஞால
மணிபோற் பொறுத்தாருந் தாம்; பணிவில்சீர்ச்
செல்விடைப் பாகன் றிரிபுரஞ் செற்றுழிக்
கல்லுயர் சென்னி யிமையவின் னாணாகித்
தொல்புகழ் தந்தாருந் தாம்.

இவையுங் கொச்சகம்.

அன்ன அணங்குடை யருந்தலை யாயிரம் விரித்தமை காரணமாகக் கூறலிற் காமங் கூறிற்று.

அராகம் வந்தன வந்துழிக் காண்க.

கொச்சகங்களும் வெள்ளையாதல் பெரும்பான்மை மேலிதற்குக் கூறுகின்ற வுறுப்புகள் வந்துழியு மொக்கும்.

முடுகியலுஞ் சொற்சீரடியும் வெள்ளடியோடு தொடர்ந்து வருதலின்.

"காமரு சுற்றமொ டொருங்குநின் னடியுறை
யாமியைந் தொன்றுபு வைகலும் பொலிகென
வேமுறு நெஞ்சத்தேம் பரவுதும்
வாய்மொழிப் புலவநின் றாணிழ றொழுதே."

இதுவுஞ் சுற்றத்தொடு பிரியாமை கூறலிற் காமங் கண்ணிற்று.

"எரிமலர் சினைஇய கண்ணை பூவை
விரிமலர் புரையு மேனியை மேனித்
திருஞெமர்ந் தமர்ந்த மார்பினை மார்பிற்
றிருமணி பிறங்கும் பூணினை மால்வரை
யெரிதிரிந் தன்ன பொன்புனை யுடுக்கையை
சேவலங் கொடியோய்நின் வலவயி னிறுத்து
மேவலுட் பணிந்தமை கூறு
நாவ லந்தண ரருமறைப் பொருளே" (பரிபா.)

என ஆசிரியம் வந்தது.

"நின்னொக்கும் புகழ்நிழலவை" (பரிபா.)

இது வஞ்சித்தூக்கு. பிறவுமன்ன.

'செப்பிய' என்றதனான் அராகமின்றி வருதலுங், கொச்சக மீற்றடி

குறையாது வருதலும், அவ்வழி யசைச்சீராகி யிறுதலும், வெள்ளைச் சுரிதகத்தா னிறுதலுங் கொள்க.

"அறவோ ருள்ளா ரருமறை காப்ப"

வென்னும் பரிபாடலுள்,

"செறுநர் விழையாச் செறிந்தநங் கேண்மை
மறுமுறை யானு மியைக நெறிமாண்ட
தண்வரல் வையை யெமக்கு"

என வெள்ளைச் சுரிதகத்தா னிற்றது. (121)

**சிவலிங்கனார்**

**கொச்சகம்..........தாகும்.**

(இ-ள்) தரவொடு கொச்சகம், அராகம், சுரிதகம் என்று சொல்லப்பட்ட நான்கு கலிபுறுப்புகளும் தனக்கு உறுப்பாகக் கொண்டு காமப்பொருளைக் கருதிவரும் நிலைமையை யுடையது அப் பரிபாடல் எ-று.

எனவே, பரிபாடலின் பொருள் காமப்பொருளே பிறிதில்லை என்றவாறு.

தரவு முதலிய உறுப்புகளோடு நான்கு பாவும் இடையிடை வந்து விரவும் நிலையுடையதும் பரிபாடலாம் என்பர் பேராசிரியர்.

கொச்சகம் என்பது மகளிர் உடுக்கும் ஆடையின் கொய்சகம் போல் அடுக்கப்படு(மடிக்கப்படு)தலின் ஒப்பினான் ஆய பெயர்.

அராகம் என்பது, அராவப்பட்ட பொன்போல் பாடலில் சீரடியும் பலவடியும் வந்து குற்றெழுத்து நெருங்கிவரத் தொடுப்பது. இதுவும் ஒப்புப் பெயர்.

சுரிதகம் - பாட்டின் பொருளைச் சுரித்து முடிப்பது.
எருத்து - தரவு - பாவின் முன்னர்த் தரப்படுவது.

கொச்சகவுறுப்புப் பரிபாடலில் பயின்று வருதலின் முன்வைக்கப் பட்டது. அராகம் முதற்கண் வாராமல் இடைக்கண் வருதலின் அதன்பின் வைக்கப்பட்டது. சுரிதகம் ஈற்றிலேயே வருதலின் அதன்பின் வைக்கப் பட்டது. தரவு (எருத்தம்) இல்லாமலும் பரிபாடல் வருமாதலின் அதன் இழிவுகருதி யிறுதியில் வைக்கப்பட்டது.

பரிபாடலடிகள்

**427. சொற்சீ ரடியும் முடுகிய லடியும்
அப்பா நிலைமைக் குரிய வாகும். (118)**

## இலக்குவனார்

434. The lines of *sorsir* and *mudukiyal* also occur as its limbs.

## இளம்பூரணர்

**427. சொற்சீ ரடியும் ..................... வாகும்.**

*என்-னின், இதுவுமது.*

(இ-ள்) சொற்சீரடியும் முடுகியலடியும் பரிபாடற்கு உரியவாகும் என்றவாறு.

சொற்சீரடியாவது வருகின்ற சூத்திரத்துட் காட்டுதும்.

முடுகியலாவது ஐந்தடியானும், ஆறடியானும், ஏழடியானுங் குற்றெழுத்துப் பயிலத் தொடுப்பது. (118)

## பேராசிரியர்

**434. சொற்சீ ரடியு..........வாகும்.**

*இதுவும் பரிபாடலுறுப்பு உணர்த்துகின்றது.*

(இ-ள்) எண்ணப்பட்ட இரண்டும் பரிபாடற்குள்ள உறுப்பாய் வரும் என்றவாறு.

சொற்சீரும் முடுகியலுமென்னாது அடியென்றதனான் மேற்கூறிய அடியொடு தொடர்ந்தல்லது வாராவென்பதாம். சொற்சீரடி யாமாறு முன்னர்ச் சொல்லுதும். முடுகியலடி யென்பது முடுகியலொடு விராய்த் தொடர்ந்தொன்றாகிய வெண்பாவடி. அராக மென்பது, தாமே வேறுசில அடியாகி வருவன. இவையன்றிக் குறிலிணை பயில்வன முடுகிய லெனவும், குறிலிணை விரவிவருவன அராகமெனவுஞ் சொல்லுவாரும் உளர்.

"முடுகு வண்ண, மடியிறந் தோடி யதனோ ரற்றே" (545)

என்பவாகலின் மேலதே யுரை.

'உரிய' என்றதனான், இத்துணை பயின்றுவாரா. இவ் விரண்டுங் கலிப்பாவினுளென்பது கொள்க. எனவே, அராகவுறுப்புத்[1] தேவ பாணியல்லது அக் கலிக்கண் யாண்டும் வாராதாயிற்று. (122)

---

1. அராகவுறுப்புக் கடவுளைப்பற்றிய பாடலிலன்றி மற்றவற்றில் வாராது. தேவபாணி - கடவுட்பாட்டு

**நச்சினார்க்கினியர்**

**122. சொற்சீ ரடியும்..........வாகும்.**

*இதுவும் அதற்கு உள்ளுறுப்புக் கூறுகின்றது.*

(இ-ள்) சொற்சீரடியும் முடுகியலடியும் பரிபாடற்கு உள்ளுறுப்பாய் நிற்றற்குரியவாம் எ-று.

அடியென்றதனான் முற்கூறிய வடியோடு தொடர்ந்தல்லது தாமாக வாராவென் றுணர்க.

சொற்சீரடி மேற்கூறுப.

முடுகியலடியாவது வெண்பாவோடு விராய்த் தொன்றாக நிற்கும். அராகமாவது, தாமே வேறு சில வடியாய் வரும்.

'உரிய'வெனவே கலிக்கு இத்துணை யுரியவல்லவென் றுணர்க. எனவே, அராகவுறுப்புத் தேவபாணிக்கல்லது வாராவென் றுணர்க. (122)

**சிவலிங்கனார்**

**சொற்சீரடி...........வாகும்.**

(இ-ள்) சொற்சீரடியும், முடுகியலடியும், பரிபாடற்கு உள்ளே வரும் உறுப்பாய் நிற்றற்குரிய வாகிவரும், எ-று.

சொற்சீரடியாவது, வரும் சூத்திரத்தாற் கூறப்படுவது.

முடுகியலடியாவது ஐந்தடி, ஆறடி, ஏழடிகளால் குற்றெழுத்து மிக வருவது.

**சொற்சீரடியாமாறு**

**428. கட்டுரை வகையான் எண்ணொடு புணர்ந்து**
**முற்றடி யின்றிக் குறைவுசீர்த் தாகியும்**
**ஒழியசை யாகியும் வழியசை புணர்ந்துஞ்**
**சொற்சீர்த் திறுதல் சொற்சீர்க் கியல்பே. (119)**

**இலக்குவனார்**

435. The nature *sorsir* is being the mode of essay having numeral, the line being not complete having less *sir* and the syllable being detached at the beginning and at the end.

## இளம்பூரணர்

**428. கட்டுரை வகையான்.....கியல்பே.**

*என்-னின், சொற்சீராமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) கட்டுரையாவது பாட்டின்றித் தொடுக்கப்பட்டு வருவது.[1]

'எண்'ணென்பது ஈரடியாற் பலவாகியும், ஓரடியாற் பலவாகியும் வருதல். பல வருதலின் எண்ணென்றார்.

'முற்றடி யின்றிக் குறைவுசீர்த் தாகியும்' என்பது நாற்சீரடியின்றி முச்சீரடியானும் இருசீரடியானும் வருதல்.

'ஒழியசை யாகியும்' என்றது ஒழிந்த அசையினை யுடைத்தாகியும் என்றவாறு.

எனவே, இறுதிச்சீர் ஒன்றும் இரண்டும் அசை குறையப்பெறும் என்றவாறாம்.

வழியசை புணர்த்தலாவது ஒரு சீரின்கண்ணே பிறிதொரு சீர் வரத் தொடாது ஓரசைவரத் தொடுப்பது.

சொற்சீர்த் திறுதல் என்பது சொற்றானே சீராந்தன்மையைப் பெற்று நிற்றல்.

சொற்சீர்க் கியல்பே என்றது இப் பெற்றியை யுடைத்துச் சொற்சீரின தியல்பு என்றவாறு.

இவ் விலக்கணம் பரிபாடற் செய்யுட்கண் வருமாறு:

"ஆயிரம் விரித்த அணங்குடை அருந்தலை
தீயுமிழ் திறலொடு முடிமிசை அணவர
மாயுடை மலர்மார்பின் மையில்வால் வளைமேனிச்
சேயுயர் பனைமிசை எழில்மேழி ஏந்திய
வாய்வாங்கும் வளைநாஞ்சில் ஒருகுழை ஒருவனை;

இது தரவு.

"எரிமலர் சினைஇய கண்ணை பூவை
விரிமலர் புரையு மேனியை மேனித்
திருஞெமர்ந் தமர்ந்த மார்பினை மார்பில்
தெரிமணி விளங்கும் பூணினை மால்வரை
எரிதிரிந் தன்ன பொன்புனை உடுக்கையை
சேவலங் கொடியோய்நின் வலவயின் நிறுத்து
மேவ லுழந்தமை கூறு
நாவ லந்தணர் அருமறைப் பொருளே;

இஃது எருத்து.

---

1. சூத்திரவகையாற் தொடுக்கப்படுவது.

இணைபிரி யணிதுணி பணியெரி புரைய
விடரிடு சுடர்படர் பொலம்புனை வினைமலர்
நெரிகிட ரெரிபுரை தனமிகுதன முரண்மிகு
கடறரு மணியொடு முத்தியா கத்தொன்றி
நெறிசெறி வெறியுறு முரல்விறல் வணங்கணங்குவில்
தாரணி துணிமணிவிய லெறுமெழில் புகழலர்மார்பி
ணெரிவயிர் நுதியெறி படையெருத்து மலையிவர் நவையில்
துணிபட லிலமணி வெயிலுற ழெழினக்
கிமையிருள கலமுறு கிறுபுரி யொருபுரி நாண்மலர்
மலரில கினவளர் பருதியி னொளிமணி மார்பணி
மிகநாறுரு வினவிரை வளிமிகு கடுவிசை
உடுவுறு தலைநிரை யிதழணி வயிறிரிய அமரரைப்
போரெழுந் துடன்றிரைத் துரைஇய தானவர்
சீரழிப் புனல்மொழி பிழந்தூர
முதிர்பதி ரப்பல புலவந்தொடவமர் வென்றகணை;

இவை நான்கும் அராகம்.

பொருவ மென்ற மறந்தபக் கடந்து
செருவிடம் படுத்தது செயிர்தீர் அண்ணல்
இருவர் தாதை யிலங்குமுன் மாஅன்
றெருள நின்வர வறிதல்
மருளறு தேர்ச்சி முனைவர்க்கும் அரிது;

என்பது ஆசிரியம்.

அன்ன மரபி னனையோய் நின்னை
யின்னனென் றுரைத்த லெமக்கெவன் எளிது;

இது பேரெண்.

அருமைநற் கறியினம் ஆய நிற்பயில்
பெருமையின் வல்லா யாம்இவண் மொழிபவை
மெல்லிய எனாஅது வெறாஅ
தல்லியந் திருமார்ப நீயருளல் வேண்டும்;

இதுவும் ஆசிரியம்.

விறல்மிகு விழுச்சீ ரந்தணர் காக்கும்
அறனு மார்வலர்க் கருளு நீ;

திறனிலோர்த் திருத்திய தீதுதீர் கொள்கை
மறனு மாற்றலர்க் கணங்கு நீ;

அங்கண் வானத் தணிநிலாத் திகழ்தருந்
திங்களுந் தெறுகதிர்க் கனலியு நீ;

ஐந்தலை யுயரிய அணங்குடை யருந்திறல்
மைந்துடை யொருவனு மடங்கலும் நீ;

நலமுழு தளைஇய புகரறு காட்சிப்
புலம்பு வின்னா ணூற்றமு நீ;

வலனுயர் எழிலியும் மாக விசும்பும்
நிலனு நீடிய இமயமும் நீ;

இவை யாறும் பேரெண்.

அதனால்,

தனிச்சொல்.

இன்னோர் அனையை இனையை யாலென
அன்னோர் யாமிவட் காணா மையிற்
பொன்னணி நேமி வலங்கொண் டேந்திய
மன்னிய முதல்வனை யாகலின்
நின்னோ ரனையைநின் புகழொடும் பொலிந்தே;

இது சுரிதகம்.

அன்றெனின்,
நின்னொக்கும் புகழ்நிழலவை
பொன்னொக்கு முடையவை
புள்ளின் கொடியவை புரிவளை யினவை
எள்ளுநர்க் கடந்திட்ட இகனே மியவை
மண்ணுற்ற மணிபா யுருவினவை
எண்ணிறந்த புகழவை எழின்மார் பினவை;

இவை சிற்றெண்ணும், இடையெண்ணும், அளவெண்ணும்.

ஆங்கு,[1]

தனிச்சொல்.

காமரு சுற்றமொ டொருங்குநின் னடியுறை
யாமியைந் தொன்றுபு வைகலும் பொலிகென
ஏமுறு நெஞ்சத்தேம் பரவுதும்
வாய்மொழி முதல்வநின் தாள்நிழல் தொழுதே." (பரிபா.1)

இது சுரிதகம்.

இது கடவுள் வாழ்த்து. ஈண்டோதப்பட்ட உறுப்புகள் மிக்குங் குறைந்தும் வருதல் இப் பாவிற் கியல்பென்று கொள்க. பிறவும் பரிபாடலகத்துக் கண்டுகொள்க.

"மாநிலந் தோன்றாமை மலிபெய னிலைஇ
ஏமநீ ரெழில்வான மிகுத்தரும் பொழுதினான்

---

1. இது ஒழியசை.

நாகநீள் மணிவரை நறுமலர் பலவிரைஇக்
காமரு வையை சுடுகின்றே கூடல்;

நீரணி கொண்டன்று வையை யெனவிரும்பித்
தாரணி கொண்ட உவகை தலைக்கூடி
ஊரணி கோலம் ஒருவர் ஒருவரிற்
சேரணி கொண்டு நிறமொன்று வெவ்வேறு
நீரணி கொண்ட நிறையணி அங்காடி
ஏரணி கொண்டார் இகல்;

கைபுனை தாரினர் கண்ணியர்
ஐயெனு மாவியர் ஆடையர்
நெய்யணி கூந்தலர் பித்தையர்
மெய்யணி யானை மிசைகொண் டொய்யெனத்
தங்காச் சிறப்பில் தளிரியலார் செல்லப்
பொங்கு புரவிப்புடைப் போவோரும் பொங்குசீர்
வையமுந் தேரும் அமைவோரும் எவ்வாயும்

பொய்யாம்போ யென்னாப் புடைபடைகூட் டிப்போவார்
மெய்யாப்பு மெய்யார மூடுவார் வையத்துக்
கூடுவார் ஊட லொழிப்பார் உணர்குவார்
ஆடுவ்ர் பாடுவார் ஆர்ப்பார் நகுவார்நக்
கோடுவார் ஓடித் தளர்வார்போ யுற்றவரைத்
தேடுவார் ஊர்க்குத் திரிவார் இலராகித்
கற்றாருங் கல்லா தவருங் கயவரும்
பெற்றாரும் பெற்றார்ப் பிழையாத பெண்டிரும்
பொற்றேரான் தானம் பொலம்புரிசைக் கூடலும்
முற்றின்று வையைத் துறை;

துறையாடுங் காதலர் தோள்புணை யாக
மறையாடு வாரை அறியார் மயங்கிப்
பிறையேர் நுதலியர் எல்லாருந் தம்முன்
நிகழு நிகழ்ச்சி யெம்பாலென் றாங்கே
இகலுவ செல்வ நினைத்தெவட் கண்டிப்பால்
அகலல்கும் வையைத் துறை;

காதலான் மார்பிற் கமழ்தார் புனல்வாங்கி
ஏதிலான் கூந்தல் இடக்கண்டு மற்றது
தாதாவென் றாளுக்குத் தானே புனல்தந்து
வேய்தந்த தென்னை விளைந்தமை மற்றது
நோதலே செய்யேன் நுணங்கிழையா யச்செல்வி
போதலுண் டாங்கொல் அறிந்து புனல்புணர்த்த
தோழ பெரிதும் வியப்பு;

கயத்தகப் பூப்பெய்த காமக் கிழமை
நயத்தகு நல்லாளைக் கூடுமா கூடு
முயக்குக்குச் செல்வல் முலையும் முயக்கத்து
நீரு மவட்குத் துணைக்கண்ணி னீர்விட்டோய்
நீயு மவட்குத் துணை;

பணிவில் உயர்சிறப்பிற் பஞ்சவன் கூடல்
மணியெழில் மாமேனி முத்த முறுவல்
அணிபவளச் செவ்வாய் அறங்காவற் பெண்டிர்
மணியணி தம்முரிமை மைந்தரோ டாடத்
தணிவின்று வையைப் புனல்;

புனலூடு போவதோர் பூமாலை கொண்டை
எனலூழ் வகையெய்திற் றென்றேற்றுக் கொண்டை
புனலூடு நாடறியப் பூமாலை அப்பி
நினைவாரை நெஞ்சிடுக்கண் செய்யுங் கனல்புடன்
கூடாமுன் ஊடல் கொடியதிறங் கூடினால்
ஆடாளோ வூர்க்கலர் வந்து;

எனவாங்கு,

ஈப்பா யடுநறாக் கொண்டதிவ் வியாறெனப்
பார்ப்பார் ஒழிந்தார் படிவு;

மைந்தர் மகளிர் மணவிரை பூசிற்றென்
றந்தணர் தோயலர் ஆறு;

வையைத் தேமொழி வழுவழுப் புற்றென
ஐயர்வாய் பூசுறார் ஆறு;

விரியுரை விரைதுறை கரையழி பிழியூர ஊர்தரும் புனல்
கரையொடு கடலிடை வரையொடு கடலிடை நிரைநிரை
நீர்தரு நுரை
நுரையுடன் மதகுதொ றிழிதரு புனல்கரை புரளிய
செலமறி கடல்
புகுமள வளவிய லிச்சிறை தணிவின்று வெள்ள மிகை;

வரைபல புரையர் கயிறணி பயிறொழில்
மணியணி யானைமிசை மைந்தரும் மடவாரும்
நிரைநிரை குழீஇ யினர்உடன் சென்று
குருமணி யானை இயறேர்ப் பொருநன்
திருமருத முன்றுறை முற்றங் குறுகித்
தெரிமருதம் பாடும் பிணிதோள்யாழ்ப் பாணர்
பாய்பன வா

ஆடி யாடி யருளியவர்
ஊடி யூடி யுணர்த்தப் புகன்று
கூடிக் கூடி மகிழ்பு மகிழ்பு
தேடித் தேடிச் சிதைசிதைபூச்
சூடிச் சூடிக்கை தொழுது தொழுதும்
இழுதொடு நின்ற புனல்வையை
விழுதொகை நல்லாரு மைந்தரும் ஆடி
இமிழ்வது போன்றதிந் நீர்குணக்குச் சான்றீர்
முழுவது மிச்சிலா உண்டு;

சாந்துங் கமழ்தாருங் கோதையுஞ் சுண்ணமுங்
கூந்தலும் பித்தையுஞ் சோர்ந்தன
பூவினு மல்லாற் சிறிதானு நீர்நிறந்தா
ஆறொன்றோ திவ்வையை யாறு;

மழைநீர்க் குளத்து வாய்பூசி யாடுங்
கழுநீர மஞ்சனக் குங்குமக் கலக்கல்
வழிநீர வீழுநீரன்று வையை;

வெருவரு கொல்லியானை வீங்குதோள் மாறன்
உருகெழு கூட லவரொடும் வையை
வருபுன வாடிய தன்மை பொருவுங்கால்
இருமுந்நீர் வையம் பிடித்தென்னை யானூர்க்
கொருநிலையு மாற்ற இயையா வருமாவில்
அந்தர வான்யாற் றாயிரங் கண்ணினான்
இந்திரன் ஆடுந் தகைத்து." **(பரிபா.தி.2)**

இது காமப் பொருளாகி வரும் வெண்பா மிக்குவந்த பாட்டு. 119)

## பேராசிரியர்

**435. கட்டுரை வகையா.............கியல்பே.**

*மேலெண்ணப்பட்ட சொற்சீரடியாமா றுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) சொற்சீரடி இக் கூறிய நான்குவகையாலும் வந்து பயிலும் என்றவாறு.

கட்டுரைவகையான் எண்ணொடு புணர்ந்தது.

"வடவேங்கடந் தென்குமரி, யாயிடை" **(பாயிரம்)**

எனவும்,

"அஇஉ,
எஒ என்னு மப்பா லைந்தும்" **(தொல்.எழுத்து.3)**

எனவும் இவை கட்டுரைக்கட் சொல்லுமாறுபோல எண்ணினமையிற்

கட்டுரைவகையான் எண்ணொடு புணர்ந்தன; இனி, ‘முட்டடி யின்றிக் குறைவுசீர்த் தாகும் இயல்பாய்’ வருமாறு;

“நின்னொக்கும் புகழ்நிழலவை” (பரிபா.1:55)

எனவும்,

“கறையணி மிடற்றினவை
கண்ணணி நுதலினவை
பிறையணி சடையினவை”

எனவும் வரும்.

“முட்டடி யின்றி” என்ற இவை தூக்குப்பட்டு முடியு மடியல்ல என்றவாறு.

மேற்காட்டிய பரிபாடற் செய்யுளுள், ‘ஒருசார்’ என்பது ஒழியசை; என்னை? அது சீராகலின் அதனொடு சில அசை கூடியன்றி அசையெனப்படாமையின். ‘ஆங்கு’ என வருந் தனிச்சொல் வழியசை யெனப்பட்டது; என்னை? அஃது, அசையாய்நின்று சொற்சீரடியாகலின். மற்றுச் சொற்சீரடியினை அசையென்ற தென்னையெனின், இயலசை தானேயும்[1] ஒழியசையாய் நிற்குமென்றற்கென்பது.

“ஒரூஉக் கொடியிய னல்லார் குரனாற்றத் துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்
தொடிய வெமக்குநீ யாரை பெரியார்க்
கடியரோ வாற்றா தவர்” (கலி.88)

என்புழி ‘ஒரூஉ’ எனநின்ற இயலசைதானே ஒழியசையாய் நின்றது.

“உகுவது போலுமென் னெஞ்சு; எள்ளித்
தொகுபுட னாடுவ போலு மயில்” (கலி.33)

என்பது, வழியசை புணர்ந்த சொற்சீரடி; என்னை? ‘எள்ளி’ என நின்ற சீரின்வழித் ‘தொகுபு’ என வந்தவசை ‘உகுவது போலும்’ என்னுந் தொடையொடு பொருந்தி,

“உகுவது போலுமென் னெஞ்செள்ளித் தொகுபுடன்”

எனப் புணர்ந்து நின்றாற்போல்வதோர் சுவைமை செய்து நின்றமையின். கொச்சகம் இடைநிலைப் பாட்டெனப் படாமையின்,

“தொகுபுட’ னாடுவ போலு மயில்”

என நாற்சீரடியாலும் வருவதாயிற்று, வரையறையின்மையின். இங்ஙனம் வந்தமையின் சொற்சீரடிமேல் எண்ணவும் படும். இவை கலிக்கண் வருங்கால் ஒத்தாழிசைக்கண் முடுகியலடி வாராதென்பதூஉம், சொற்சீரடி

1. இயலசை மட்டுமே

வருஞான்றுத் தனிச்சொல்லாகியன்றி வாராதென்பதூஉம், உறழ்கலிக் கண்ணும் முடுகியலடி உரித்தன்றெனப்தூஉங் கொள்க.

சொற்சீர்த்திறுதலென்பது, ஓரெழுத்தொருமொழி முதலிய சொற் களெல்லாம் தாமே சீராப் அடியிறுதிக்கண் அடிப்பட முடிந்து அடியாதலிலக்கணத்த அவையென்றவாறு.

இனி, ஒழியசையினையும், வழியசையினையுங் கூறினா னென்னாமோவெனின்;

"சீர்கூ னாத னேரடிக் குரித்து" (361)

என்றமையின் ஈண்டு அசைகூனாகாது; அல்லதூஉம் ஆண்டுக் கூனெனப்பட்டதும் ஈண்டுச் சொற்சீரடி யெனப்பட்டு அடங்குமென்பத னானு முடைத்தென்பது. இவையெல்லாம் பரிபாடற்கண்ணதே கூறினானாயினும் ஒழிந்த பாவினுட் சொற்சீரடி வருமென விதந்தவழி, அதுவே இலக்கணமாக வரும் ஆண்டுமென்பது. 'இயல்பு' என்றதனானே யாண்டு வரினும் அஃதிலக்கணமென்பது பெற்றாம்; அல்லதூஉம், (432)

"தொகைநிலை விரி" என்ற மிகையாற் பரிபாடற்கு உரியவாகக் கண்டுகொள்க. அவை யாவையோவெனின்,-முடுகியலடி மேற்காட்டிய பரிபாடலுள்,

"மணிமருட்கை" என்பது முதலாகக் (ப.140)

"குளவா யமர்ந்தா னகர்"

என்ப தீறாகக் கண்டுகொள்க. (123)

## நச்சினார்க்கினியர்

**123. கட்டுரை வகையான்............கியல்பே.**

*இது, மேலெண்ணிய சொற்சீரடியாமாறு உணர்த்துகின்றது.*

(இ-ள்) கட்டுரை வகையான் எண்ணொடு புணர்ந்தும் புனைந்துரை வகையாற் கூறுமாறுபோல எண்ணொடு கூடியும், முற்றடி யின்றிக் குறைவுசீர்த்தாகியும் - தூக்குப்பட்டு முடியும் அடியின்றிக் குறைவாகிய சீரையுடைத்தாகியும், ஒழியசையாகியும் - வேறோர் அசையோடு கூடாது ஒழிந்து நிற்பதோர் இயலசையாகியும், வழியசை புணர்ந்தும் - அவ்வாறன்றி அதனோடு பல அசை புணர்க்கப்பட்டு நின்றும், சொற்சீர்த்து இறுதல் சொற்சீர்க்கு இயல்பே - ஓரெழுத்தொரு மொழி முதலிய சொற்களெல்லாம் தாமே சீர்த்தன்மை பெற ஓசை பெற்றும் முடிந்து நிற்றல் சொற்சீரடிக்கு இலக்கணமாம் எ-று.

(எ-டு)"வடவேங்கடந் தென்குமரி" (தொல். பாயிரம்)

எனவும்,

"அஇஉ
எஒ வென்னு மப்பா லைந்தும்" (தொல்.எழுத்து.நூல்.3)

எனவும் இவை யெண்ணொடு புணர்ந்தன.

"கறையணி மிடற்றினவை கண்ணணி நுதலினவை
பிறையணி சடையினவை"

எனத் தூக்குப்பட்டு முடியாமற் குறைந்தன.

"ஒரூஉக்
கொடியியல் நல்லார் குரனாற்றத் துற்ற" (கலி.88)

ஒரூஉவென நிரையசைதானே யொழியசையாயிற்று. ஆங்கென வருந் தனிச்சொல் வழியசைப் பாற்படும்.

"நொந்து நகுவனபோல் நந்தின கொம்பு"

"இனைந்துள்ளி யுகுவது போலுமென் னெஞ்சு"

"எள்ளித் தொகுபுட னாடுவ போலுமயில்"

"கையி லுகுவன போலும் வளை" (கலி.33)

இவை முச்சீரடியான் வந்தனவு நாற்சீரடியான் வந்தனவுமாய் நின்றவா றுணர்தற்கு 'நகுவன', 'உகுவது', 'தொகுபுடன்', 'உகுவன' எனத் தொடைச்சுவடுபடுத்துக் கூறவே யவற்றின்முன்னின்ற சொற்கள் வழியசை புணர்ந்த சொற்சீரடியாமாறு காண்க. இவை யிடைநிலைப் பாட்டன்றிக் கொச்சகமாகலின் வரையறையின்றித் "தொகுபுட னாடுவ போலு மயில்" என நாற்சீரடியானும் வந்தது. இவை மேலெண்ணவும்படும். இவை கலிக்கண் வருங்கா லொத்தாழிசையினும் உறழ்கலியினும் முடுகியல் வாராமையும், அவற்றுட் சொற்சீரடி வருங்காற் றனிச் சொல்லாயல்லது வாராமையுங் கொள்க.

"சீர்கூ னாத னேரடிக் குரித்து" (தொல்.செய்.49)

என்றமையின் ஒழியசை கூனாக வமையும். சீர்கூனாகக் கூறியவை யீண்டுச் சொற்சீரடியா னடங்குமாறு முணர்க.

இவை பரிபாடற்கே யுரித்தென்றாரேனும் இயல்பென்றதனானே யாண்டும் வருதலும் இலக்கண மென்பது பெற்றாம், அது,

"பாஅ வண்ணஞ், சொற்சீர்த் தாகி நூற்பாற் பயிலும்"
(தொல்.செய்.215)

என்பதனானு முணர்க.

முடுகியலடி முற்காட்டினாம். (123)

## சிவலிங்கனார்

**கட்டுரை................இயல்பே.**

(இ-ள்) ஐந்துவகையாகச் சொல் ஒன்றே சீராம் தன்மை பெற்று அடியாக நிற்பது சொற்சீர்க்கு இயல்பு எ-று.

நால்வகையாவன: கட்டுரைவகையான் வருவது - அதாவது ஒரு சொல்லே சீர்நிலைப்பட்டு அடியாக வரும்போது பாடல்போல் இல்லாமல் உலகவழக்கு உரைநடைபோல் அமைவது.

(உ-ம்)"வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறும் நல்லுலகம்"

எண்ணொடு புணர்தலாவது, உலகவழக்குப்போல் தொகை கொடுத்துக் கூறுதல்.

(உ-ம்)"அஇஉ
எஒ என்னும் அப்பால் ஐந்தும்"

இதில் அ, இ, உ என்பது ஒருசீராய்த் தனி அடியாக வந்து முடிவில் தொகையும் வந்தது.

இவ் விரண்டையும் சேர்த்து ஓர் இலக்கணமாக்குவர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.

முட்டடியின்றிக் குறைவு சீர்த்தாதல் - நாற்சீரடியென முடியாமல் 'நின்னொக்கும் புகழ்நிலவை" (பரிபா.1:55) என்பதுபோலச் சீர்குறைந்த நிலையில் அடியாக வருவது.

ஒழியசை யாதலாவது தானொரு சொல்லாயிருந்து அசையாகவும் அமைந்து தன்னொடு பிறிதொரு அசைசேராது ஒழிந்து நிற்பது.

(உ-ம்)"ஒரூஉக்
கொடியியல் நல்லார் குரல்நாற்றத் துற்ற" (கலி.88)

இதில் 'ஒரூஉ' என்பது ஓரசை அளபெடை அசைநிலை பெறவில்லை; ஓரடிபோலவும் தனித்து நின்றது.

வழியசை புணர்தலாவது, பாடலின் பொருள் தொடர்பின் இடையே 'ஆங்கு' என்பதுபோல் வரும் அசைநிலை வருவது. பரிபாடலிலும் கலிப்பாடலிலும், இடையிடை வரும் ஆங்கு என்பது வழியசை. ஒரு கருத்துப் பொருள்வழி வருதலின் வழியசையாயிற்று.

சொல் சீரளவில் நின்றால் சொற்சீர் என்றும், அதுவே அடியாக எண்ணப்படின் சொற்சீரடி என்றும் பெயர்பெறும்.

### அங்கதச் செய்யுள்வகை

**429. அங்கதந் தானே அரில்தபத் தெரியிற்**
**செம்பொருள் கரந்த தெனவிரு வகைத்தே. (120)**

## இலக்குவனார்

436. Satire is, if examined thoroughly, of two kinds which are *semboruḷ* and *karanthathu*.

## இளம்பூரணர்

**429. அங்கதந் தானே.........வகைத்தே.**

*என்-னின், அங்கதச் செய்யுளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) அங்கதமாவது குற்றமற ஆராயிற் செம்பொரு ளெனவும், கரந்த தெனவும் இருவகைப்படும் என்றவாறு.

அவை முன்னர்க் காட்டுதும். (120)

## பேராசிரியர்

**436. அங்கதந் தானே..........வகைத்தே.**

*இது, முறையானே அங்கதச் செய்யுளுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) அது செம்பொருள், கரந்தது என்று இருவகைத்தாம் என்றவாறு.

அங்கதமென்பது வசை; அதனை இருவாற்றாற் கூறுக வென்பான் இது கூறினான். அவையாமாறு முன்னர்ச் சொல்லுதும். 'அரிறப' என்ற தென்னை யெனின், அவை புகழ்போன்று வசையாதலும்பட்டுத் தோன்றும் மயக்கமுடையவாதலின் மயக்கமறத் தெரியினென்றவாறு.

"நூற்றுவர் தலைவனைக் குறங்கறுத் திடுவான்" (கலி.52)

என்பது, புகழ்போன்று வசையாயிற்று; என்னை? கொன்றானாயினுங் குறங்கினைக்[1] கதத்தண்டுகொண்டு எற்றுதல் குற்றமாதலின் என்பதறிக. கொடைமடங் கூறுதல், வசைபோன்று புகழெனப்படும், அஃது[2] அங்கதமாகா தென்பான் 'அரிறப' என்றானென்பது. பிறவும் அன்ன.

(124)

---

1. குறங்கு - துடை
2. அது - பழிப்பது போலப் புகழ்வது

## நச்சினார்க்கினியர்

**124. அங்கதந் தானே..........வகைத்தே.**

*இது, முறையானே அங்கதங் கூறுகின்றது.*

(இ-ள்) வசைச் செய்யுளைக் குற்றமற ஆராயிற் செம்பொருளங் கதமும், பழிகரப்பங்கதமும் என அவ் விருவகையினை யுடைத்து எ-று.

அவை புகழ்போன்று வசையாதலும், வசைபோன்று புகழாதலும் பட வருமென்றற்கு அரிறப என்றார்.

(எ-டு)"நூற்றுவர் தலைவனைக் குறங்கறுத் திட்டானும் போன்ம்"

என்றது, புகழ்போன்று வசை; மாயோன் கூறவுணர்தலின் இது காந்தத்தின்பாற்படும்.[1]

"கொடைமடம் படுத லல்லது" (புறம்.142)

என்றது வசைபோன்று புகழ். இது செம்பொருளின் பாற்படும்.

இதனானே அங்கத மாகாதென்பது கருத்தாயிற்று. (124)

## சிவலிங்கனார்

**அங்கதம்.........வகைத்தே.**

(இ-ள்) அங்கத(வசை)ச் செய்யுளானது செம்பொருளங்கதம், பழிகரப்பங்கதம் என இருவகைத்து, எ-று.

### வசை அங்கதம்

**430. செம்பொரு ளாயின[2] வசையெனப் படுமே. (121)**

## இலக்குவனார்

437. *Semboruḷ* is said to be open columny.

## இளம்பூரணர்

**430. செம்பொரு........படுமே.**

*என்-னின், செம்பொருளாகிய அங்கதம் உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) செம்பொரு ளங்கதம் வசையெனப் பெயர் பெறும் என்றவாறு. (121)

---

1. காந்தம் - குணவலங்காரத்துள் ஒன்று
2. ஆவன - பாடம்

## பேராசிரியர்

**437. செம்பொரு.........படுமே.**

*இது முறையானே செம்பொருளங்கத முணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) வாய்காவாது[1] சொல்லப்பட்ட வசையே செம்பொருளங்கத மெனப்படும் என்றவாறு. அஃது,

"இருமர் மணிவிளக்கத் தேழிலார் கோவே
குருடேயு மன்றுநின் குற்ற - மருமர்ந்த
பாட்டு முரையும் பயிலா தனவிரண்
டோட்டைச் செவியு முள"

என்பது ஏழிற்கோவை, அவ்வை முனிந்து பாடியது.

"எம்மிகழ் வோரவர் தம்மிகழ் வோரே
யெம்மிக ழாதவர் தம்மிக ழாரே
தம்புக ழிகழ்வோ ரெம்புக ழிகழ்வோர்
பாரி யோரி நள்ளி யெழினி
யாஅய் பேகன் பெருந்தோண் மலையனென்
றெழுவரு ளொருவனு மல்லை யதனா
னின்னை நோவ தெவனோ
அட்டார்க் குதவாக் கட்டி போல
நீயு முளையே நின்னன் னோர்க்கே
யானு முளனே யெம்பா லோர்க்கே
குருகினும் வெளியோய் தேளத்துப்
பருகுபா லன்னவென் சொல்லுகுத் தேனே"

எனவும் வரும்.

கலிப்பாட்டினான் வருவன வசைக்கூத்தினுட் கண்டுகொள்க.

"அறச்சுவையினன் வையெயிற்றினன்
மயிர்மெய்யினன் மாசுடையினன்
பொய்வாயாற் புகழ்மேவலன்
மைகூர்ந்த மயலறிவினன்
மேவருஞ் சிறப்பி னஞ்சி
யாவரும் வெரூஉ மாவிக் கோவே"

என்பது, வஞ்சிப்பாட்டு. இது, வெண்பாவினான் வருதலே பெரும் பான்மை. (125)

1. வாய்காவாது - மறையாமல்.

## நச்சினார்க்கினியர்

**125. செம்பொரு.........படுமே.**

*இது, முறையே செம்பொருள் அங்கதங் கூறுகின்றது.*

**(இ-ள்)** வாய்காவாது கூறப்படும் வசை செம்பொருள் வசை எனப்படும் எ-று.

அவை வெண்பாவே யன்றிச் சிறுபான்மை மற்றைய பாக்களானும் வருமென் றுணர்க.

(எ-டு)"இருடீர் மணிவிளக்கத் தேழிலார் கோவே
குருடேயு மன்றுநின் குற்ற - மருடேயும்
பாட்டு முறையும் பயிலா தனவிரண்
டோட்டைச் செவியு முள."

இஃது ஏழிற்கோவை ஔவையார் பாடியது.

"எம்மிகழ் வோரவர் தம்மிகழ் வோரே
எம்மிக ழாதவர் தம்மிக ழாரே
தம்புக ழிகழ்வா ரெம்புக ழிகழ்வோர்
பாரி யோரி நள்ளி யெழினியாய்
பேகன் பெருந்தோண் மலைய னென்றிவ்
வெழுவரு ளொருவனு மல்லை யதனா
னின்னை நோவ தெவனோ முட்டாற்
றாக்குறைக் கட்டி போல
நீயு முளையே நின்னன் னோர்க்கே
யானு முளனே எம்பா லோர்க்கே
குருகினும் வெளியோய் தேளத்துப்
பருகுபா லன்னவென் சொல்லுகுத் தேனே."

கலிப்பாட்டான் வருவன வசைக்கூத்தினுட் காண்க.

"அறச்சுவையிலன் வையெயிற்றினன்
மயிர்மெய்யான் மாசுடையினன்
பொய்வாயாற் புகழ்மேவலன்
மைகூர்ந்த மயலறிவினன்
மேவருஞ் சிறப்பி னஞ்சி
மாவரும் வெரூஉ மாவிக் கோவே."

இது வஞ்சி. (125)

## சிவலிங்கனார்

**செம்பொருள்..........படுமே.**

**(இ-ள்)** மறையாது வெளிப்படையாகக் கூறும் வசை செம்பொருள் அங்கதம் எனப்படும் எ-று.

(உ-ம்)"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக வுலகியற்றி யான்." (குறள்.1062)

### மறை அங்கதம்

## 431. மொழிகரந்து மொழியின்[1] அது பழிகரப் பாகும். (122)

## இலக்குவனார்

438. If said with hidden meaning it is called *paḻikarappu*.

## இளம்பூரணர்

**431. மொழிகரந்து........பாகும்.**

*என்-னின், மறைபொருளாகிய அங்கதம் உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) தான் மொழியும், மொழியை மறைத்து மொழியின் அது பழிகரப்பெனப் பெயர்பெறும் என்றவாறு. (122)

## பேராசிரியர்

**438. மொழிகரந்து.....பாகும்.**

*இது, பழிகரப்பங்கதம் உணர்த்துகின்றது.*

(இ-ள்) வசைப்பொருளினைச் செம்பொருள் படாம விசைப்பது பழிகரப்பங்கதம் என்றவாறு.

மாற்றரசனையும் அவனிளங்கோவினையும் வசை கூறுமாறு போலாது தங்கோனையும், அவனிளங்கோனையும், வசைகூறுங்கால் தாங்கியுரைப்பர்; அவைபோலப் பழிப்பன வென்றவாறு; அது,

"நன்றாய்ந்த செங்கோலாய் நாடிய நின்னிளங்கோக்
குன்றெறிந்த சேந்த னெனமதியா - வன்றிறத்து
நின்றொலிக்குந் தானையோ டெல்லா நிகர்த்தார்மேல்
வென்றெறியும் வேலே விடும்"

என வந்த வெண்டொடைச் செய்யுளுட் கண்டுகொள்க. இதனுள்,

"வென்றெறியும் வேலே விடும்"

என்பது, 'முனையகத்துப் படையோடும்' என வசை கூறுவான் 'குன்றெறிந்த சேந்தனை'ப்போல எறிந்தானெனப் புகழ்ந்தான்போலக் கூறினானென்பது.

---

1. சொல்லின் - பேரா. பாடம்

"இன்றுள னாயி னன்றும னென்றநின்
னாடுகொள் வரிசைக் கேற்பப்
பாடுவன் மன்னால் பகைவரைக் கடப்பே" (புறம்.53)

என்பதும் அது. (126)

## நச்சினார்க்கினியர்

**126. மொழிகரந்து..........பாகும்.**

*இது, பழிகரப்பு அங்கதங் கூறுகின்றது.*

(இ-ள்) வசைப்பொருளினைச் செம்பொருள் படாமலிசைப்பது பழிகரப்பு அங்கதமாம் எ-று.

'ஈயென விரத்தல்' (புறம்.204)

என்னும் பாட்டினுள்,

"தெண்ணீர்ப் பரப்பி னிமிழ்திரைப் பெருங்கட
லுண்ணா ராகுவர் நீர்வேட் டோரே"

என்றவழி நின் செல்வங் கடல்போற் பெரிதேனும் பிறர்க்கினிதாய் நுகரப்படாதென வசையைச் செம்பொருளாகாமற் கூறியவாறு காண்க. புறத்தினுட் பலவு மிவ்வாறே வருவன காண்க. வெண்பாவில் வருவன வந்துழிக் காண்க. (126)

## சிவலிங்கனார்

**மொழிகரந்து............பாகும்.**

(இ-ள்) புலவன் தான் வசையாகக் கூறக் கருதிய பொருளைச் சொற்களில் மறைத்துக் கூறுவது பழிகரப்பாகும் எ-று.

(உ-ம்)"மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாங்கண்ட தில்." (குறள்.1071)

மேலும் இரண்டுவகை

**432. செய்யுள் தாமே இரண்டெடன மொழிப. (123)**

## இலக்குவனார்

439. The composition of satire is said to be of two kinds.

## இளம்பூரணர்

**432. செய்யுள் தாமே.........மொழிப.**

*என்-னின், மேற்சொல்லப்பட்டன தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஈண்டு தம்மாற் சொல்லப்பட்ட செய்யுள் இரண்டுவகை என்று சொல்லுவர் என்றவாறு.

அவை முன்னர்க் காட்டுதும். (123)

## பேராசிரியர்

**439. செய்யுட் டாமே..........மொழிப.**

*மேற்கூறிய இரண்டனையும் இவ்வகையானும் வகுக்கப்படு மென்கின்றது.*

(இ-ள்) செம்பொருட் செவியுறை, செம்பொருளங்கதம், பழிகரப்புச்செவியுறை, பழிகரப்பங்கதமென நான்கு கூறுபடும் மேற்கூறிய அங்கதமிரண்டும் என்றவாறு.

'பாய்த்துள்', 'விக்குள்' என்றாற்போலச் 'செய்யுள்' என்பதூஉந் தொழிற்பெயர்[1]. அவையாமாறும் அவற்றது வேறுபாடும் முன்னர்ச் சொல்லுதும். இனி, ஒருவனுரை: இவற்றுள் தொகைச்சூத்திரத்துட்,

"கைக்கிளை பரிபாட் டங்கதஞ் செய்யுள்" (430)

என்று ஓதிச் செம்பொருளங்கதமுஞ் செய்யுளுமென இரண்டாக நிறுத்தான்; நிறுத்தமுறையானே அங்கத முணர்த்திச் செய்யுளுணர்த்திய விதந்தா னென்பது; அற்றன்று, எல்லாப் பாட்டுஞ் செய்யுளெனப்படுதலின் ஒன்றனையே செய்யுளெனலாகாது; அல்லதூஉம்,

"அங்கதச் செய்யு ளென்மனார் புலவர்" (441)

என வருகின்ற சூத்திரத்து ஓதுமாதலான் இவையும் அங்கதச் செய்யுளே. மேலைச் சூத்திரத்துள்ளும் (430) அங்கதச்செய்யுளென்பதே பாட மென்பதூஉம் அதனாற் பெறுது மென்பது. அல்லாத பாடம் ஓதினும் அங்கதச் செய்யுள் செய்கைமேலென அதனைத் 'தாய்க்கொலை' என்றது போல இரண்டாவதன் பொருண்மைப்படுத்திக்கொள்க.[2] (127)

## நச்சினார்க்கினியர்

**127. செய்யுள்..........மொழிப.**

*இது, மேற்கூறிய இரண்டனையுமே இவ்வகையானும் பகுக்கப் படுமென்கின்றது.*

(இ-ள்) முற்கூறிய செய்யுள்தாம் ஒரோவொன் றிரண்டாம் எ-று.

---

1. பாய்த்துள் - பாய்தல், விக்குள்-விக்குதல், செய்யுள்-செய்தல். அங்கதம்செய்தலின்வகை இரண்டு என மொழிப என்பது சூத்திரப் பொருள்.

2. தாய்க்கொலை-தாயைக் கொல்லுதல். இதுபோல் அங்கதச் செய்யுள் என்பதற்கு அங்கதத்தைச் செய்தல் எனப் பொருள் கொள்க.

அவை செம்பொருட் செவியுறையங்கதம் பழிகரப்புச் செவியுறையங்கதம், செம்பொருளங்தம், பழிகரப்பங்கதம் என நான்கு கூறுபடும் எ-று. (127)

### சிவலிங்கனார்

**செய்யுள்.............மொழிப.**

(இ-ள்) மேற்கூறிய செம்பொருள் பழிகரப்புச் செய்யுள்கள்தாம் மேலும் இரண்டுவகைப்படும் என்பர், எ-று.

**செவியுறை அங்கதம்**

**433. புகழொடும்[1] பொருளொடும் புணர்ந்தன் றாயின்**
**செவியுறைச் செய்யுள் என்மனார் புலவர்.[2] (124)**

### இலக்குவனார்

440. If it deals with the fault and income (of the king) it is said to be the composition of advice. (This is one kind of satire.)

### இளம்பூரணர்

**433. புகழொடும் பொருளொடும்.........புலவர்.**

*என்-னின், செய்யுளைப் பாகுபடுத்தலை உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) புகழொடும் பொருளொடும் புணரவரிற் செவியுறைச் செய்யுள் என்று சொல்லுவர் என்றவாறு. (124)

### பேராசிரியர்

**440. துகளொடும் பொருளொடும்...........மொழிப.**

*இது, மேற்கூறிய அங்கதச் செய்யுட்பகுதி இரண்டனுள் ஒன்று கூறுகின்றது.*

(இ-ள்) மேற் செம்பொருளும் பழிகரப்பு மெனப்பட்ட இரண்டும் அங்கதச் செய்யுளெனப்படுதலேயன்றி, அதனானே அரசர்க்குப் பொருள் வருவாயாகச் செய்தானேயெனினும் அது செவியுறையங்கதமெனவும் படும் என்றவாறு.

துகளாவது: படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும் என்னும் இவற்றைப் பாதுகாவாதிருத்தல். 'அரசியல்' என்பனவற்றானே, தங்கோன் அறியாமல் வகுத்தவை வருமாயின் அவற்றை உள்ளவாறுரைத்தலு

1. துகளொடும்-பேரா. நச். பாடம்
2. அதுவென மொழிப - பேரா. நச். பாடம்

மொன்று. (மாற்றரசன் நமரது ஊரடுகின்ற நாட்டவர் யாதிவை நுதலியன வேதுவாகப் போய்ச் சார்ந்தவர்க்குப் நாட்டழிவு கூறுதலுமொன்று). அன்ன பிறவும் அவற்கு உறுவகையாகலான் அவற்றை உள்ளவாறு உணர்த்திப் பொருள் செய அவர்க்குப் பொருள்செயல்வகை கூறினமை யின் அது செவியுறைப்பாற்படு மென்பது; அது,

"அறவை யாயி னினதெனத் திறத்தன்
மறவை யாயிற் போரொடு திறத்த
லறவையு மறவையு மல்லை யாகத்
திறவா தடைத்த திண்ணிலைக் கதவி
னீண்மதி லொருசிறை யொடுங்குத
னாணுத்தக வுடைத்திது காணுங் காலே"

என இது செம்பொருட் செவியுறை; பிறவும் அன்ன. இவை முகவிலக்கினுட் பயின்று வருமென்பது. இனி, மொழிகரந்து சொல்லினும் இஃதொக்கும்; இனி,

"புகழொடும் பொருளொடும்"

என்பதூஉம் பாடமாக உரைப்ப. புகழும் பொருளும் புணர்ப்பது அங்கதமாயின் அஃதமையும்; அற்றன்றாயின் ஈண்டாராய்ச்சி யின்றென்பது; என்னை?

"வசையொடு நசையொடும் புணர்ந்தன் றாயி
னங்கதச் செய்யுள்" (441)

என மேலோதுமாதலின் இவனென்பது.[1] (128)

## நச்சினார்க்கினியர்

**128. துகளொடும் பொருளொடும்..........மொழிப.**

*இது, முற்கூறிய இருவகைச் செவியுறையுங் கூறுகின்றது.*

(இ-ள்) அரசன் தனக்குரிய அரசியலில் தப்பிய நிலையைக் கூறுங் கூற்றோடும், அவ் வறம் பொருளின்பம் பயக்கக் கூறுங் கூற்றோடும் ஒரு செய்யுள் கூடி வந்ததாயின் அது செம்பொருட்செவியுறையங்கதம், பழிகரப்புச் செவியுறையங்கதம் எனப் பெயர் கூறப்படும். எ-று.

துகளாவது படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரணென்னும் இவற்றைப் பாதுகாவாதிருத்தல்.

(எ-டு)"நளியிரு முந்நீ ரேணி யாக
வளியிடை வழங்கா வானஞ் சூடிய
மண்டிணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர்

1. இவன் - ஆசிரியன் தொல்காப்பியன்

முரசுமுழங்கு தானை மூவ ருள்ளும்
அரசெனப் படுவது நினதே பெரும
வலங்குகதிர்க் கனலி நால்வயிற் றோன்றினு
மிலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினு
மந்தண் காவிரி வந்துகவர் பூட்டத்
தோடுகொள் வேலின் றோற்றம் போல
வாடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கு
நாடெனப் படுவது நினதே யத்தை
யாங்க,
நாடுகெழு செல்வத்துப் பீடுகெழு வேந்தே
நினவ கூறுவ லெனவ கேண்மதி
யறம்புரிந் தன்ன செங்கோ னாட்டத்து
முறைவேண்டு பொழுதிற் பதனெளி யோரீண்
டுறைவேண்டு பொழுதிற் பெயல்பெற் றோரே
ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ
மாக விசும்பி னடுவுநின் றாங்குக்
கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை
வெயின்மறைக்கொண் டன்றோ வன்றே வருந்திய
குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ
வெளிற்றுப்பனந் துணியின் வீற்றுவீற்றுக் கிடப்பக்
களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை
வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்
பொருபடை தரூஉங் கொற்றமு முழுபடை
யூன்றுசான் மருங்கி னீன்றதன் பயனே
மாரி பொய்ப்பினும் வாரி குன்றினு
மியற்கை யல்லது செயற்கையிற் றோன்றினுங்
காவலர்ப் பழிக்குமிக் கண்ணகன் ஞாலம்
அதுநற் கறிந்தனை யாயி னீயு
நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது
பகடுபுறந் தருநர் பார மோம்பிக்
குடிபுறந் தருகுவை யாயினின்
னடிபுறந் தருகுவ ரடங்கா தோரே." (புறம்.25)

இது இஞ் ஞாலம் இயற்கையல்லது தனது செயற்கையிற்றோன் றினுங் காவலனைப் பழிக்கும்; இதனையுமுணராதே நீ வேற்றரசர்க்குப் பெறுதற்கரிதாகிய சிறந்த நாட்டினை நினதாகப் பெற்றுவைத்து அதனை யழிக்கின்றது நினக்கரசியலன்றென்று அவனாட்டை யழித்தமை கூறுதலில், துகளோடு புணர்வும், குடிபுறந்தரின் நினக்குச் செல்வ முதலிய சிறத்தலிற் பகைவர் நின்னை வணங்குவரெனப் பொருளொடு புணர்வும் வெளிப்படக் கூறலிற் செம்பொருட் செவியுறையங்கதமாயிற்று.

"வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
நெடியவென் னாது சுரம்பல கடந்து

வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்ற மருத்தி
யோம்பா துண்டு கூம்பாது வீசி
விரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீதறிந் தன்றோ வின்றே
திறப்பட
நண்ணார் நாண வண்ணாந் தேகி
யாங்கினி தொழுகி னல்ல தோங்குபுகழ்
மண்ணாள் செல்வ மெய்திய
நும்மோ ரன்ன செம்மலு முடைத்தே." (புறம்.47)

இது, சோழன் நலங்கிள்ளியுழைநின்று உறையூர் புக்க இளந் தத்தனென்னும் புலவனைக் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி ஒற்றுவந்தானென்று கொல்வுழி யவ் வரசற்கு வருகின்ற துகளினைக் கோவூர்கிழார் புலப்படாமற் செய்யுள் செய்து தமது சொல்லை யரசன் கேட்டு அஞ்சினானென்னும் பொருளை நிறுத்துதலிற் பழிகரப்புச் செவியுறை யங்கதமாயிற்று.

இவ்வாறே புறத்தினுட் செவியுறைச் செய்யுள்கள் பலவும் வருவனவுள. அவ் வேறுபா டுணர்ந்துகொள்க.

'புகழொடும் பொருளொடும்' என்று பாடமோதின் மேல் "வசையொடும் நசையொடும்" (செய்.129) என்பது பொருந்தாதாம். (128)

## சிவலிங்கனார்

**துகளொடும்..........புலவர்.**

(இ-ள்) மேற்சொல்லிய செம்பொருளங்கதமும் பழிகரப்பங்கதமும் அரசர்க்கு அவர்தம் குற்றங்களை எடுத்துக் கூறுதல், அவர்க்குப் பொருள் பெருகக் கூறுதல் என்னும் இருவகையான செவியுறை கூறும் செய்யுளாகவும் வரும் என்பர் புலவர், எ-று.

எனவே, செம்பொருள் அங்கதம் வாளா செம்பொருளங்கதமும், செம்பொருட் செவியுறை அங்கதமும் என இருவகைப்படும் என்பதும், பழிகரப்பங்கதமும், வாளா பழிகரப்பங்கதமும் பழிகரப்புச் செவியுறை அங்கதமும் என இருவகைப்படும் என்பதும் கூறப்பட்டதாம்.

உதாரணம் உரையாளரிடைக் காண்க.

### புறனடை

**434. வசையொடும் நசையொடும் புணர்ந்தன் றாயின்**
**அங்கதச் செய்யுள் என்மனார் புலவர். (125)**

## இலக்குவனார்

441. If it deals with fame and ill - fame, the poets say that it is satire (of another kind).

## இளம்பூரணர்

**434. வசையொடும் நசையொடும்........புலவர்.**

*என்-னின், இதுவுமது.*

(இ-ள்) வசையொடும் நசையொடும் புணர்ந்த செய்யுள் அங்கதச் செய்யுள் எனப் பெயர்பெறும் என்றவாறு.

எனவே, இருவாற்றானும் செய்யுட் செய்யப்பெறும் என்றவாறு. (125)

## பேராசிரியர்

**441. வசையொடு நசையொடும்.........புலவர்.**

*இஃது, ஒழிந்த அங்கதச்செய்யு ளுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) மேற்கூறிய அங்கதச் செய்யுள் வசையேயன்றி அவ் வசையானே நசைதோன்றச் செய்வது செவியறியுறை யெனப்படாது அங்கதச் செய்யுளெனவே படும் என்றவாறு.

எனவே, இல்லாதன சொல்லி நகைப்பொருட்டாகச் செய்யினும் அங்கதச் செய்யுளெனப்படும் என்றவாறு. அவை, விலக்கியற் செய்யுளுட் கண்டுகொள்க. இதுவுஞ் செம்பொருளாகியும், பழிகரப்பாகியும் வருமென வுணர்க; எனவே, கூறப்பட்டனவெல்லாம் வெகுளியும் பொருளும் நகையும் பயப்பனவாயின. (129)

## நச்சினார்க்கினியர்

**129. வசையொடு நசையொடும்.............புலவர்.**

*இஃது, ஒழிந்த அங்கதச் செய்யுள் இருவகைத் தென்கின்றது.*

(இ-ள்) வசைப்பொருளொடும் அதனாற் பிறந்த நசைப் பொருளொடும் ஒரு செய்யுள் கூடிவருமாயின் அதனைச் செம்பொரு ளங்கதம் பழிகரப்பங்கதம் எனப் பெயர் கூறப்படும் எ-று.

அவை, இலக்கியச் செய்யுளுட் காண்க. முன்னர்ச் செம்பொருள் வசைக்குக் காட்டிய உதாரணங்களினும் இவ் வேறுபாடு உய்த்துணர்க. (129)

## சிவலிங்கனார்

**வசையொடு........புலவர்.**

(இ-ள்) வசைப்பொருளொடும் அதன் பயனாகிய நகைப்பொருளொடும் ஒரு செய்யுள்வரின் அது செம்பொருளங்கதம் பழிகரப்பங்கதம் எனப்படும் என்பர் புலவர், எ-று.

இது வசையும் வாழ்த்தும் சேர்ந்துகூட இருவகை அங்கதம் வரப்பெறும் என்பது. வசையே வரவேண்டும் என்பதில்லை.

**கலிப்பாவகை**

**435. ஒத்தா ழிசைக்கலி கலிவெண் பாட்டே**
**கொச்சகம் உறழொடு கலிநால் வகைத்தே. (126)**

## இலக்குவனார்

442. The *kali* verse is of four kinds which are *oth-thālisaikkali, kalivenbāttu, koccakam* and *uralkali*.

## பி.இ.நா.

**இ.வி. 737**

ஒத்தா ழிசைக்கலி வெண்கலிப் பாவே
கொச்சகக் கலியொடு கலிமூன் றாகும்.

**தொன். 227**

ஒத்தாழிசை மூன்று ஓரைங் கொச்சகம்
வெண்கலி கலிவெண்பா விகற்பம்ஈ ரைந்தே.

## இளம்பூரணர்

**435. ஒத்தா ழிசைக்கலி...........வகைத்தே.**

*என்-னின், இனிக் கலிப்பாப் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஒத்தாழிசைக் கலியும் கலிவெண்பாட்டும் கொச்சகமும் உறழ்கலியும் என நான்கு வகைப்படுங் கலிப்பா என்றவாறு.

அவையாமாறு முன்னர்க் காட்டுதும்.

"இருவயின் ஒத்தும் ஒவ்வா இயலினுந்
தெரியிழை மகளிரொடு மைந்தரிடை வரூஉங்
கலப்பே யாயினும் புலப்பே யாயினும்
ஐந்திணை மரபின் அறிவுவரத் தோன்றிப்

பொலிவொடு புணர்ந்த பொருட்டிற முடையது
கலியெனப் படூஉங் காட்சித் தாகும்''

என்று அகத்தியனார் ஓதுதலின் கலிப்பா அகப்பொருளென வழங்கும். (126)

## பேராசிரியர்

**442. ஒத்தா ழிசைக்க லி.........வகைத்தே.**

*இது, கலிப்பாவெனப்பட்ட உறுப்பினை இத்துணைப் பகுதியான் வருமென அது வருஞ் செய்யுள்பற்றி விரிகூறுகின்றது.*

(இ-ள்) ஒத்தாழிசை - ஒத்தாழிசை யென்னும் உறுப்புடைச் செய்யுள்; ஒத்து ஆழ் இசையை ஒத்தாழிசை யென்றான்; அது, வினைத் தொகையாகலின் மருவிய வகையான் முடியுமென்பது.[1] தாழிசை யென்பது, தானுடைய துள்ளலோசைத்தாம்; இது முறைமையிற் பெற்ற பெயர்; எனவே, தரவு வேறுபடினும் வேறுபடாதென்பதூஉம், கொச்சகக் கலி போல்வனவற்றுள் வரும் இடைநிலைப்பாட்டுகள் அவ்வாறு தாழமுடையவன்றியும் வருமென்பதூஉங் கொள்க. இது பன்மைபற்றிப் பெற்றபெயர், தாழிசையின்றியும்[2] ஒத்தாழிசை சிறுபான்மை வருதலின். இனி, ஒழிந்த உறுப்பு நோக்கத் தாழிசை சிறந்தமையின் தலைமையாற் பெற்ற பெயரெனவும் அமையும்.

“ வலிமுன்பின் வல்லென்ற யாக்கைப் புலிநோக்கிற்
சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தைய
ரற்றம்பார்த் தல்குங் கடுங்கண் மறவர்தாங்
கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர்
துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வவ்வலிற்
புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை
வெள்வேல் வலத்திர் பொருடரல் வேட்கையி
னுள்ளினி ரென்ப தறிந்தனளென் றோழி'' (கலி.4)

என்பது தாழ்ந்த ஓசைத்தன்றி ஒத்தாழிசைக் கலியுள் தரவு வந்தது; எனவே, இவ் வேறுபாடு கட்டளைக் கலி அல்லாதவழி யென்பது பெற்றாம். அதுவன்றே இதன் றாழிசை யுள்ளும் நேரீற் றியற்சீரும் வந்ததென்பது; என்னை?

“காழ்விரி வகையார மீவரு மிளமுலை
போழ்திடைப் படாஅமன் முயங்கியு மமையாரென்

---

1. ஒத்து + தாழ் + இசை - ஒத்துத்தாழிசை என முடியற்பாலது ஒத்தாழிசை என முடிந்தது மருவியதாம். தாழ்இசை-வினைத்தொகை. ஒத்து ஆழ் இசை எனப் பிரித்தால் ஒத்தாழிசை - என்பது மருவாகாது. தாழிசை எனப் பின்னர்த் தொடங்குவதும் காண்க- சிவ.

2. தாழம்பட்ட ஓசை யில்லாமலும்

றாழ்கதுப் பணிகுவர் காதலர் மற்றவர்
சூழ்வதை யெவன்கொ லறியே னென்னும்" (கலி.4)

என்புழி 'அறியே னென்னும்' என ஆண்டைத் தாழிசைதோறும் இரண்டு நேரீற் றியற்சீரும் வந்தன. பிறவும் அன்ன.

"நீயே, வினைமாண் காழகம் வீங்கக் கட்டிப்
புனைமாண் மரீஇய வம்பு தெரிதியே;
இவட்கே, சுனைமா ணீலங் காரெதிர் பவைபோ
லினைநோக் குண்க ணீர்நில் லாவே" (கலி.7)

எனக் கொச்சகக்கலியுள் இடைநிலைப் பாட்டுத் தாழிசையின்றி வந்தது; பிறவும் அன்ன.

இனி, கலிவெண்பாட்டு - கலிப்பாவாகிய வெண்பாட்டு; இது பண்புத்தொகையானே முன்மொழிப் பொருட்டாயிற்று.[1] கொச்சக மென்பதும் உறுப்பினாற் பெற்ற பெயர். உறழ்கலியென்பது பொருள்பற்றிவந்த பெயர். ஒத்தாழிசையென்பது தம்மி னொத்துவருதற் கட்டளை யுடைமையானுங் கலிப்பாவிற்குச் சிறந்து வருமாகலானும் முன்வைத்தான்; என்னை இது கலிப்பாவிற்குச் சிறந்தவாறெனின், நூற்றைம்பது கலியுள்ளும் ஒத்தாழிசை அறுபத்தெட்டு வந்தனவாகலின் அது பெருவரவின எனப்பட்டுச் சிறப்புடைத்தாயிற்று. அதுநோக்கி முன் வைத்தான், இது பாவென்னும் உறுப்பிலக்கணங் கூறுகின்ற இடமாகலின். கலிவெண்பாட்டினை, ஒத்தாழிசைக்குங் கொச்சகத்திற்கும் இடை வைத்தான், அதுபோல உறுப்புடைத்தாகியும் வருமென்றற்கு. அதன்பின் கொச்சகப்பா வைத்தான், அது தரவும் போக்குஞ் சிறுபான்மையின்றியும் வருதலின். எல்லாவற்றுப் பின்னும் உறழ்கலி வைத்தான், அவை போலாது சுரிதகமின்றி வருதலே பெரும்பான்மை யாகலானென்பது. அஃதேல், உறழ்கலியுங் கொச்சகக் கலியுள் அடங்காதே அதுவும் அடக்கியலின்றியும் யாப்பினும் பொருளினும் வேற்றுமை உடைத்தாய் வருமாலெனின், அற்றன்று; அடக்கியலின்றிவரின் அடிநிமிர்தலும் ஒழுகிசைத்தாகலும் வேண்டும். உறழ்கலியாயின் அடிநிமிராதும் ஒழுகிசையின்றியும் வருமென்பது. அத்துணையான் இதனை வேறென்ப தென்னை? ஒன்றாக வோதுகவெனின், அற்றன்று; மேற்கூறி வருகின்ற செய்யுளெல்லாஞ் சீரும், அடியும், பாவும், பொருளுமெனச் சில வுறுப்பு வகையான் வேறுபடுகின்றதன்றிப் பிறிதின்மையின். அவற்றின் வேறு பாடுஞ் சிலவாக நோக்கி ஒன்றென்னா மாகலின் அது கடாவன் றென்பது; அல்லதூஉம், நூல் செய்யுங்கான் மரபென்பது வேண்டும்; என்னை?

"மரபுநிலை திரியா மாட்சிய வாகி
யுரைபடு நூறா மிருவகை யியல" (645)

---

1. கலிவெண்பாட்டு - இதில் கலிப்பாவும் வெண்பாவும் கூறப்பட்டதேனும் முன்மொழியாகிய கலிப்பாவினால் பெயர் பெற்றமையின் முன்மொழிப் பொருட்டாயிற்றாம்.

என்பதனான், முதனூற்காயினும் மரபுவேண்டுதலின். அதுவன்றே நிலம், நீர், தீ, வளி, விசும்பென்னும் ஐம்பெரும் பூதங்களும், அவற்றதியை பாகிய பொருள்களும், அஃறிணையான் வழங்கினும் பொருளின் இயைபாகிய மக்களுந் (644) தேவரும் முதலாயினாரை உயர்திணை வாய்பாட்டான் வேறுபடுத்து வழங்குகின்றதென்பது. மற்று உறழ்கலி யென்னும் வழக்குண்டாயினன்றே மரபொடு மாறுபடுவதெனின், மரபென ஆசிரியர் வழக்கும் அடங்குமாகலின் அது கூறினான்; அல்லாக்கால், ஒழிந்த செய்யுளும் வேறுபாடிலவா மன்றோவென்பது.

இனி, பரிபாடலுங் கலிப்பாவினுள் அடங்குமென்பாரும் உளர். கலியும் பரிபாடலுமென வெட்டுத்தொகையுள் இரண்டுதொகை தம்மின் வேறாதலின் அவ்வாறு கூறுவார் செய்யுள் அறியாதாரென்பது; அல்லதூஉம், அராகவுறுப்பில்லாத முடுகியலடியும், கொச்சகக்கலியல்லாத கலிப்பாவினுள் உண்டாவதாகலும் கொச்சகக்கலி யுறழ்ந்துவருதலும் உடையவாம் அவ்வாறு கூறினான்[1] என மறுக்க. (130)

## நச்சினார்க்கினியர்

**130. ஒத்தா ழிசைக்கலி.............வகைத்தே.**

*இது, கலிப்பாவென்னும் உறுப்பினை இத்துணைப் பகுதியினால் வருமென வகுத்து வருஞ் செய்யுள்பற்றி விரிவு கூறுகின்றது.*

(இ-ள்) ஒத்தாழிசைக்கலியும், கலிவெண்பாவும், கொச்சகக்கலியும், உறழ்கலியுமெனக் கலி நான்கு கூறுபடும் எ-று.

ஒத்தாழிசையென்னு முறுப்புடையது ஒத்தாழிசைச் செய்யுள். அது ஒத்தாழிசையென வினைத்தொகையாம். தாழிசையென்றது கட்டளைக் கலிக்குத் தரவு மிகத் துள்ளாதுவரத் தாழிசை யதனிற் றாழம்பட்டு வருதலிற் பெற்ற பெயர். இங்ஙனம் வருவது கட்டளைக் கலியே. இப் பெயர் பன்மையாற் பெற்ற பெயர். இனி, ஒழிந்தவுறுப்பில் தாழிசை சிறத்தலின் தலைமையாற் பெற்ற பெயருமாம். இனி, சீர்வகையான் வரும் கலிக்குத் தரவு மிகத் துள்ளி வரும்; இதற்குத் தாழிசையோசை தாழம்பட்டே வருதலும், சிறுபான்மை நேரீற்றியற்சீர் வருதலுங் கொள்க. எனவே கொச்சகத்திற்காயின் தாழிசை,

> "நீயே
> வினைமாண் காழகம் வீங்கக் கட்டிப்
> புனைமாண் மரீஇய வம்பு தெரிதியே" (கலி.7)

எனத் தாழம்பட்ட ஓசையின்றி வரும். இனிக் கலிவெண்பாட்டுக் கலியாகிய வெண்பாட்டு; இது முன்மொழி நிலையல்.

கொச்சகம் உறுப்பினாற் பெற்ற பெயர்.
உழற்கலி பொருளினாற் பெற்ற பெயர்.

---

1. கூறினான் எனின்

தம்மின் ஒத்துவருதலானும் சிறப்புடைமையானும் ஒத்தாழிசை முற்கூறிற்று. நூற்றைம்பது கலியுள்ளும் ஒத்தாழிசைகலி அறுபத்தெட்டு வந்தது. இதற்குங் கொச்சகத்திற்கு மிடையே கலிவெண்பாக் கூறிற்று, அதுவும் இவைபோல வுறுப்புகளுடைத்தாயும் வருமென்றற்கு. தரவும் போக்குஞ் சிறுபான்மையன்றியும் வருதலிற் கொச்சக மதன்பின்ன தாயிற்று, அடக்கியலின்றியும் அடிநிமிர்ந்தும், ஒழுகிசையின்றியும் வருதலின். அதன்பின்னது உறழ்கலியாயிற்று.

பரிபாடலுங் கலியாகாவோவெனின், கலியும் பரிபாடலுமென வேறாக இரண்டு தொகை வழங்குதலானும், உறுப்பின் வேறுபாட்டானும் வேறென்றுணர்க. (130)

## சிவலிங்கனார்

**ஒத்தாழிசை............வகைத்தே.**

(இ-ள்) ஒத்தாழிசைக் கலியும், கலிவெண்பாட்டும், கொச்சகமும், உறழ்கலியும் என நான்கு வகைப்படும் கலிப்பா, எ-று.

### ஒத்தாழிசைக் கலிவகை

**436. அவற்றுள்[1]**
**ஒத்தா ழிசைக்கலி இருவகைத் தாகும். (127)**

## இலக்குவனார்

443. Of them
*oththālisaikkali* is of two kinds.

## இளம்பூரணர்

**436. அவற்றுள்,**
**ஒத்தா............தாகும்.**

*என்-னின், ஒத்தாழிசைக்கலி பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஒத்தாழிசைக்கலி இரண்டு வகைப்படும் என்றவாறு. அவை முன்னர்க் காட்டுதும். (127)

---

1. அவற்றுள் என்பது நச். பாடத்தில் இல்லை.
2. பகுதி - பிரிவு

## பேராசிரியர்

**443. அவற்றுள்,**
**ஒத்தா..........தாகும்.**

*இது, முறையானே ஒத்தாழிசைக்கலி யுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஒத்தாழிசைக்கலி இரண்டு கூற்றவாம் என்றவாறு.

இதனது பயம்: அவை இரண்டுந் தம்முட் பகுதி யுடையவென் பது; அவையாமாறு முன்னர்ச் சொல்லும். (131)

## நச்சினார்க்கினியர்

**131. ஒத்தா.........தாகும்.**

*இது, முறையே ஒத்தாழிசைப் பகுதி கூறுகின்றது.*

(இ-ள்)[1] இதன் உரைவிடுபட்டுள்ளது. (131)

## சிவலிங்கனார்

**அவற்றுள்,**
**ஒத்தாழிசைக்.......தாகும்.**

(இ-ள்) கலிப்பா நான்கனுள் ஒத்தாழிசைக் கலிப்பா இருவகைத் தாகும் எ-று.

### ஒத்தாழிசைக்கலி

**437. இடைநிலைப் பாட்டே தரவுபோக் கடையென**
**நடைநவின்[2] றொழுகும் ஒன்றென மொழிப. (128)**

## இலக்குவனார்

444. One is said to be having *idainilaippāttu, tharavu, pōkku* and *adai* as its parts.

---

1. கு. சுந்தரமூர்த்தி இவ்வாறு உரை எழுதியுள்ளார்.

ஒத்தாழிசைக் கலி, அகநிலை ஒத்தாழிசைக்கலி என்றும் ஏனைய ஒத்தாழிசைக் கலி என்றும் இருவகைப்படும் என்பது இந் நூற்பாவின் பொருள்.

இவற்றுள் முன்னையதன் இலக்கணத்தை அடுத்த நூற்பாவிலும் ஏனையதன் இலக்கணத்தை 138ஆம் நூற்பாவிலும் அறியலாம்.

2. நடைபயின் றொழுகும் - நச். பாடம்

## இளம்பூரணர்

**437. இடைநிலைப் பாட்டே........மொழிப.**

*என்-னின், ஒத்தாழிசைக்கலி பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) தாழிசையும், தரவும், சுரிதகமும், அடைநிலைக் கிளவியும் என நான்கு உறுப்பினை யுடைத்து ஒத்தாழிசைக்கலி என்றவாறு.

தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் எனக் கிடக்கைமுறையாற் கூறாது தாழிசை முற்கூறிய வகையான் இப் பாவிற்கும் ஒத்தாழிசை சிறந்ததாதலின் முற்கூறினார். முற்கூறுகின்றவழியும் 'இடைநிலைப் பாட்டே' எனக் கூறுதலின் முந்துற்றது தரவு என்றவாறாம். இடை நிலைப்பாட் டெனினும் தாழிசையெனினும் ஒக்கும். போக்கெனினும் சுரிதகம் எனினும் வாரம் எனினும் அடக்கியல் எனினு மொக்கும். அடை எனினும் தனிச்சொல் எனினும் ஒக்கும். தனிச்சொல்லைப் பின் எண்ணியவதனான் தாழிசைதோறுந் தனிச்சொல் வரவும் பெறும் என்று கொள்க. (128)

## பேராசிரியர்

**444. இடைநிலைப் பாட்டொடு......மொழிப.**

(இ-ள்) மேற்கூறிய ஒத்தாழிசை இரண்டனுள் ஒன்று தாழிசையுந் தரவுஞ் சுரிதகமுந் தனிச்சொல்லுமென நான்கு உறுப்பாகப் பயின்றுவரும் என்றவாறு.

'பயின்று வரும்' எனவே இவ்வாறன்றிப் பயிலாது வருவனவும் இதன் பகுதியாயடங்குவனவும் உள வென்பது. அவை தாழிசைப் பின்னர் எண்ணுறுப்பு வருங்கால் ஐந்துறுப்புப் பெறுதலும், அவற்றிடை அராகம் பெறின் ஆறுறுப்பு வருதலுமென இவையென்ப; அற்றன்று; நூற்றைம்பது கலியுள்ளும் ஒத்தாழிசைக் கலியின் அராகவுறுப்பும் அம்போதரங்க வுறுப்பும் பெற்று வருவன இன்மையின் அவை பொருளன்றென்பது.

மற்று, 'நடைநவின் றொழுகும்' என்ற தென்னையெனின் இத்துணை பயின்றுவாராது ஏனையொன்றும் என்றற்கென்பது. தாழிசையினை இடைநிலைப்பாட் டென்பவோவெனின், அவ்வாறுஞ் சொல்லுப, அச் செய்யுள் இடைநிற்றலானென்பது. இனி இடைநிலைப் பாட்டென்பது தாழிசையினை நோக்காது; என்னை? தாழம்பட்ட வோசையல்லாதனவும் இடைநிலைப்பாட்டாய் வருமாதலி னென்பது. அது,

> "காணாமை யிருள்பரப்பிக் கையற்ற கங்குலான்
> மாணாநோய் செய்தான்கட் சென்றாய்மற் றவனைநீ
> காணவும் பெற்றாயோ காணாயோ மடநெஞ்சே" (கலி.123)

என்பது, தாழிசையெனவும் இடைநிலைப்பாட்டெனவும் படும்.

"இன்மணிச் சிலம்பிற் சின்மொழி யைம்பாற்
பின்னொடு கெழீஇய தடவர வல்குல்
நுண்வரி வாட வாராது விடுவாய்
தண்ணந் துறைவ தகாஅய் காணீ" (கலி.125)

என்றாற் போல்வன தாழிசையல்லாத இடைநிலைப்பாட்டு. இவ்விரு பகுதியுங்கூட்டித் தாழிசையென்னாது இடைநிலைப்பாட்டென்பது, இங்ஙனந் தம்முட் பகுதியுடைமையானு மாயிற்று. ஒத்தாழிசைக்கலி இருவகைத் தென்றற்குப் பயனாந் தோற்றுவாய் செய்து போந்ததென்பது.

தரவு என்றதன் பொருண்மை என்னையெனின்,-முகத்துத் தரப்படுவதென்ப; அதனை எருத்தெனவுஞ்[1] சொல்லுப, என்னை? உடம்புந் தலையுமென வேறுபடுத்து வழங்கும் வழக்கு வகையான் உடம்பிற்கு முதல் எருத்தென்பதாகலின். இனி, இசைநூலாரும் இத் தரவு முதலாயினவற்றை முகம் நிலை கொச்சகம் முரியென வேண்டுப. கூத்தநூலார் கொச்சகமுள்வழி அதனை நிலையென அடக்கி முகம் நிலை முரியென மூன்றாக வேண்டுப. அவரும் இக் கருத்திற்கேற்ப முகத்திற் படுந் தரவினை முகமெனவுந் இடைநிற்பனவற்றை இடை நிலையெனவும் இறுதிக்கண் முரிந்து மாறுஞ் சுரிதகத்தினை முரியெனவும் கூறினாரென்பது. செந்துறைச் செய்யுள் அடைநிலை பயப்பதின்மையின் அது சிறந்ததின்றென்று அடக்கி மொழிப. உள்ளுறுப்பின் பொரு ளெல்லாம் ஒருவகையான் அடக்கு மியல்பிற்றாகலின் அடக்கியலெனவும், குறித்த பொருளை முடித்துப் போக்குதலிற் போக்கெனவும், அவையெல்லாம் போதந்து வைத்தலின் வைப்பெனவும்;கூறிய பகுதியைப் பின்னும் பற்றிக் கூறுதலின், வாரமெனவும் எல்லாம் ஒன்றொன்றனை ஒத்தே பெயராயின. அடைநிலை யென்பது, முன்னும் பின்னும் பிறவுறுப்புகளை அடைந்தன்றி வாராது; அது, தனிநின்று சீராதலின் தனிச்சொல் லெனவும்படும். இடைநிலையுறுப்பென்னாது 'பாட்டு' என்ற தென்னையெனின், அவைதாமே பாட்டாயும் வருமிடனுடைய; வருங்கால் அவை ஒன்றும் இரண்டும் பலவுமாய் வருமென்று இடைநிலைப் பாட்டினைத் தரவிற்கு முற்கூறினான் அது பெயர் பெறுதலின்; எனவே, தரவு முன்வைத்தலே மரபாயிற்று. ஒத்தாழிசை கூறிய முறையானே தரவு தாழிசை போக்கென்னும் மூன்றுறுப்பானுஞ் சிறுபான்மை வந்து தனிச்சொலின்றி வருதலின் தனிச்சொல்லினை இறுதிக்கண் வைத்தா னென்பது. இவையெல்லாம் போக்கிச் சொல்லுதும். (132)

## நச்சினார்க்கினியர்

**132. இடைநிலைப் பாட்டே.........மொழிப.**

---

1. எருத்து - 'கழுத்து - உடம்புக்கு முன் உள்ளது கழுத்து. கழுத்தைத் தலை என்றும் ஏற்றிக் கூறுவர்' (உபசாரவழக்கு என்பர் வடநூலார்)

(இ-ள்) இது மேற்கூறிய ஒத்தாழிசை யிரண்டினுள் ஒன்று தாழிசையுந் தரவுஞ் சுரிதகமும் தனிச்சொல்லும் என நான்குறுப்பாகப் பயின்று வருமென்று கூறுவர் புலவர் எ-று.

அவ்வாறு பயின்று வருமெனவே இத்துணை ஏனையொன்றும் பயிலாது வருமென்பதாம்.

செய்யுளிடையே நிற்றலானும், தாழம்பட்ட வோசையின்றியும் வருவனவுங் கோடற்குத் தாழிசையென்னாது பொதுவாக இடைநிலை யென்றார். அவைதாமே பாட்டாயும் வருதலும், அங்ஙனம் வருங்கா லொன்றும் பலவுமாயும் வருதலுங் கோடற்குப் பாட்டென்றார்.

இதனைத் தரவிற்கு முற்கூறினார் ஒத்தாழிசைக்கலியென இதனாற் பெயர் பெறுதலின். இவ் வேறுபட்ட உதாரணங்கள் மேற்காட்டுதும்.

முகத்துத் தரப்படுதலின் தரவு; உடம்புந் தலையும் வேறுபாடாக வழங்கும் வகையான் உடம்பிற்குக் கழுத்துப்போல் இது முன்னிற்றலின் எருத்தென்று பெயர் கூறுப.

போக்கிற் கிலக்கணம் மேற்கூறுதும்.

முன்னும் பின்னும் பிற வுறுப்புகளை யடைய நிற்றலின் அடைநிலை. அது தனிநின்றுஞ் சீராகலின் தனிச்சொல் எனவும் படும்.

எனவே தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் என்னும் முறையே வருதல் மரபாம். சிறுபான்மை தனிச்சொல்லின்றியும் வருதலிற் தனிச் சொல்லை யீற்றிற் கூறினார். (132)

## சிவலிங்கனார்

**இடைநிலை......மொழிப.**

(இ-ள்) தாழிசை, தரவு, சுரிதகம், தனிச்சொல் எனும் நான்கினாலும் நடைபெறும் ஒருவகை ஒத்தாழிசைக் கலி எ-று.

### தரவின் அடிவரையறை

**438. தரவே தானும் நாலடி யிழிபாய்**
**ஆறிரண்[1] டுயர்வும் பிறவும் பெறுமே. (129)**

## இலக்குவனார்

445. *Tharavu* is said to be having two lines as minimum and twelve lines as maximum.

---

1. ஆறிரண் டுயர்பென் றறையவும் பெறுமே-பேரா. பாடம்
   ஆறி ரண்டுயர் பேறவும் பெறுமே- நச். பாடம்

## பி.இ.நூ.

**யா.கா. 44**

சுருங்கிற்று மூன்றடி ஏனைத் தரவு.

**மு.வீ.யா.ஒ. 19**

தரவு மூன்றடி சிறுமை.

**இ.வி. 747**

தரவு அடி இழிபு ஒருமூன்றும்.

## இளம்பூரணர்

**438. தரவே தானும்.............பெறுமே.**

*என்-னின், தரவிற்கு அடிவரையறை உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) தரவு நாலடியிழிபாகப் பன்னிரண்டடி யுயர்பாக, இடைவரும் அடி யெல்லாவற்றானும் வரப்பெறும் என்று கொள்க. (129)

## பேராசிரியர்

**445. தரவே தானு.......:.பெறுமே.**

*இது, தரவின் அடியளவுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) மேற்கூறப்பட்ட தரவுதானும் நான்கடிமுதலாய்ப் பன்னிரண்டடிகாறும் வரப்பெறும் என்றவாறு.

எனவே, ஒன்பது நிலம்பெறுந் தரவென்றவாறாயிற்று.

"உயர்பென் றேறவும் பெறும்" என்றதனாற் பன்னிரண்டடியின் இகந்துவரவும் பெறும் சிறுபான்மையெனக் கொள்க. இதனை எடுத்தோதாது இலேசினாற் கொண்டான், பன்னிரண்டடியின் இகந்தன துள்ளலோசையான் வாராமையின்; அது,

"நீரார் செறுவி னெய்தலொடு நீடிய
நேரித ழாம்ப னிரையிதழ் கொண்மார்"

என்னும் மருதத்திணைக் கலிப்(75)பாட்டினுட் கண்டுகொள்க. (133)

## நச்சினார்க்கினியர்

**133. தரவே தானும்......பெறுமே.**

*இது, தரவிற்கு அளவு கூறுகின்றது.*

(இ-ள்) முற்கூறிய தரவிற்கு அளவுதான் நான்கடி முதலாப் பன்னிரண்டடிகாறும் வரப்பெறும் எ-று.

எனவே, ஒன்பது நிலம்பெற்றதாம். உம்மையாற் சிறுபான்மை பன்னிரண்டடியி னுயரவும் பெறும். அது,

"நீரார் செறுவி னெய்தலொடு நீடிய
நேரித ழாம்ப னிரையிதழ் கொய்ம்மார்
சீரார் சேயிழை யொலிப்ப வோடு
மோரை மகளி ரோதை வெரீஇ
யார லார்கை யஞ்சிறைத் தொழுதி
யுயர்ந்த பொங்க ருயர்மர மேறி
யமர்க்கண் மகளி ரலப்பிய விந்நோய்
தமர்க்குரைப் பனபோற் பல்குரல் பயிற்று
முயர்ந்த போர்வி னொலிநல் லூரன்
புதுவோர்ப் புணர்தல் வெய்ய னாயின்
வதுவை நாளால் வைகலு மஃதியா
னோவேன் றோழி நோவாய் நீயென
வெற்பார்த் துறுவோய் கேளினித் தெற்றென." (கலி.75)

இது பதின்மூன்றடியான் வந்தது. (133)

**சிவலிங்கனார்**

**தரவே...............................பெறுமே.**

(இ-ள்) தரவு என்னும் உறுப்பானது நான்கடி இழிபாகப் பன்னிரண்டடி உயர்பாக இடைப்படும் அடிகளானும் வரப்பெறும், எ-று.

தாழிசை அடிவரையறை

**439. இடைநிலைப் பாட்டே**
**தரவகப் பட்ட மரபின[1] என்ப.** (130)

**இலக்குவனார்**

446. *Idainilaippāttu* is within the limit of *tharavu*.

**பி.இ.நூ.**

**இ.வி. 747**

தாழிசை...............................தரவினில் சுருங்கல் தகுதி.

**யா.கா. 44**

தாழி சைப்பா சுருங்கிற் றிரண்டடி

1. மரபின தென்ப - பேரா. நச். பாடம்.

## இளம்பூரணர்

**439. இடைநிலைப்...........என்ப.**

*என்-னின், தாழிசைக்கு அடியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) தாழிசைகள் தரவிற் சுருங்கிவரும் என்றவாறு.

'தரவகப் பட்ட மரபின' என்றதனால் தரவிற்கு ஓதப்பட்ட நான்கடியின் மிகா தென்பதூஉம், மூன்றடியானும் இரண்டடியானும் வரப்பெறும் என்பதூஉங் கொள்க. வருகின்ற சூத்திரத்துள் "ஒத்து மூன்றாகு மொத்தா ழிசையே" (செய்.137) எனக் கூறுதலானும் இப் பாவினை ஒத்தாழிசைக்கலி யெனக் கூறுதலானுந் தாழிசை ஒரு பொருண்மேல் மூன்றடுக்கி வருமென்று கொள்க. (130)

## பேராசிரியர்

**446. இடைநிலைப் பாட்டே..........தென்ப.**

*இது, தரவிற்குச் சுருங்கியன்றித் தாழிசை வாராதென்ப துணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) தரவின் அகப்பட்டது தாழிசை என்றவாறு.

'அகப்படுதல்' என்பது அகம்புறமென் றிருகூறு செய்தவழி முற்கூற்றினுட் படுதல். முன்னென இடவகையுங் காலவகையும்பற்றிய இருகூற்றின் யாதானுமொன்று கொள்க. எனவே, பதினோரடி முதல் இரண்டடிகாறும் இழிந்து வரப்பெறும் என்றவாறாயிற்று.[1] அது,

"கருங்கோட்டு நறும்புன்னை மலர்சினை மிசைதொறும்
சுரும்பார்க்குங் குரலினோ டிருந்தும்பி யிசைபூத
வொருங்குட னிம்மென விமிர்தலிற் பாடலோ
டரும்பொருண் மரபின்மால் யாழ்கொளக் கிடந்தான்போல்
பெருங்கட றுயில்கொள்ளும் வண்டிமிர் நறுங்கானல்;

காணாமை யிருள்பரப்பிக் கையற்ற கங்குல்வாய்
மாணாநோய் செய்தான்கட் சென்றாய்மற் றவனைநீ
காணவும் பெற்றாயோ காணாயோ மடநெஞ்சே;

---

1. அகம்-உள், புறம்-வெளி. அகத்துக்கு அப்பாற்பட்டது. இங்கு உட்பட்டது கொள்க. தரவு எத்தனை அடிகளால் வந்ததோ அதற்கு உட்பட்ட(சுருங்கிய, குறைந்த) அடிகளால் தாழிசை வரவேண்டும் என்பது கருத்து. முற்கூறு என்பது முன்பகுதியாம். முன்னென்பதை இடமுன்னாகவோ காலமுன்னாகவோ (இரண்டில்) ஒன்று கொள்க. "இடவகையு...... ஒன்று கொள்க." என்பது தேவையற்றது இங்குக் கொள்ளப்பட வேண்டுவது காலமுன்னேயாதலின் பன்னிரண்டடி தரவுக்குப் பெருமையாதலின் அதனிற் சுருங்கியது பதினோரடியாகும். பதினோரடி கூறினும் நாலடியே தாழிசைக்குப் பேரடி என்க.

கொல்லேற்றுச் சுறவினங் கடிகொண்ட மருண்மாலை
யல்லனோய் செய்தான்கட் சென்றாய்மற் றவனைநீ
புல்லவும் பெற்றாயோ புல்லாயோ மடநெஞ்சே;

பொறிகொண்ட புள்ளினம் வதிசேரும் பொழுதினாற்
செறிவளை நெகிழ்த்தான்கட் சென்றாய்மற் றவனைநீ
யறியவும் பெற்றாயோ வறியாயோ மடநெஞ்சே;

எனவாங்கு,

எல்லையு மிரவுந் துயிறுறந்து பல்லூ
ழரும்பட ரவலநோய் செய்தான்கட் பெறனசைஇ
யிருங்கழி யோதம்போற் றடுமாறி
வருந்தினை யளியவென் மடங்கெழு நெஞ்சே" (கலி.123)

என இதுவும் தரவகப்பட்ட மரபிற்றாகித் தாழிசை வந்தது.

தரவிற் சுருங்கு மென்னாது, 'அகப்படும்' என்றான், தரவோடு ஒத்துவருந் தாழிசையென்பதுங் கோடற்கு; என்னை? 'மக்களகத்துப் பிறந்தான்' என்றவழி அச் சாதியோடொக்கப் பிறந்தா னென்பது படுமாகலினென்பது.

'ஞாலமூன் றடித்தாய முதல்வற்கு முதுமுறைப்
பாலன்ன மேனியா னணிபெறத் தைஇய
நீலநீ ருடைபோலத் தகைபெற்ற வெண்டிரை
வாலெக்கர் வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப;

ஊரல ரெடுத்தரற்ற வுள்ளாய்நீ துறத்தலிற்
கூருந்தன் னெவ்வநோ யென்னையு மறைத்தாண்மற்
காரிகை பெற்றதன் கவின்வாடக் கலுழ்பாங்கே
பீரல ரணிகொண்ட பிறைநுத லல்லாக்கால்;

இணைபிவ்வூ ரலர்தூற்ற வெய்யாய்நீ துறத்தலிற்
புணையில்லா வெவ்வநோ யென்னையு மறைத்தாண்மற்
றுணையாருட் டகைபெற்ற தொன்னல மிழந்தினி
யணிவனப் பிழந்ததன் னணைமென்றோ ளல்லாக்கால்;

இன்றிவ்வூ ரலர்தூற்ற வெய்யாய்நீ துறத்தலி
னின்றதன் னெவ்வநோ யென்னையு மறைத்தாண்மன்
வென்றவே னுதியேய்க்கும் விறனல மிழந்தினி
நின்றுநீ ருகக்கலுழு நெடுபெருங்க ணல்லாக்கால்;

அதனால்,

பிரிவில்லாய் போலநீ தெய்வத்திற் றெளித்தக்கா
லரிதென்னா டுணிந்தவ ளாய்நலம் பெயர்தரப்
புரியுளை கலிமான்றேர் கடவுபு
விரிதண்டார் வியன்மார்ப விரைகநின் செலவே." (கலி.124)

பன்னிரண்டடியின் இகந்த தரவிற்கும் இவ்வாறே தாழிசை கொள்ளப்படும். மற்று மேற்கூறிய வரையறையில் தாழிசை கூறுக வெனின், ஆண்டு முறைபிறழ வைத்தற்குக் காரணங் கூறிப்போந்தாமென விடுக்க. இனி வருஞ் சூத்திரத்திற்கும் இதுவே விடை. 'மரபின' என்றதனான் மேலைக் கொண்டும் அடிப்பட வந்த மரபினாற் சுருங்கு மென்பது; எனவே, நான்கடியின் உயர வாராவென்பது கொள்க; இன்னும், 'மரபின' என்றதனான் சிறுபான்மை ஐந்தடியானும் வருவனவும் உள.

"அரிதே தோழி நாணிறுப்பா மென்றுணர்தல்" (கலி.137)

என்னும் நெய்தற்றிணைக் கலிப் பாட்டினுள்,

"நகைமுத லாக நட்பினு ளெழுந்த
தகைமையி னலிவ தல்ல தவர்நம்மை
வகைமையி னெழுந்த தொன்முரண் முதலாகப்
பகைமையி னலிதலோ விலனா மாயிழை
பகைமையிற் கடிதவர் தகையி னலியுநோய்"

என ஐந்தடியால் தாழிசை வந்தது.

ஆறடியான் வருவன வந்தவழிக் கண்டுகொள்க. மற்று நான்கடியின் இழிந்தோரடியானுந் தாழிசை வருமாலெனின், வாராதன்றே 'இடைநிலைப் பாட்டே' என்றாராகலின்; என்னை? பாட்டெனப் படுவன ஓரடியான் வாராமையின். (134)

## நச்சினார்க்கினியர்

### 134. இடைநிலைப் பாட்டே............தென்ப.

*இதுவுமது.*

(இ-ள்) தாழிசையாவது தரவிற் சுருங்கின முறைமையினை யுடையது எ-று.

அகப்படுதலென்பது அகம், புறமென் றிருகூறு செய்தவழி முற் கூற்றி னுடம்படுதல். முன் காலமுன்னாம். எனவே, ஆறடிமுதல் இரண்டடிகாறும் வரப்பெறு மென்று கொள்க.

'மரபின்' என்றதனான் நான்கடித் தரவிற்கு நான்கடித் தாழிசை வருதலுங் கொள்க. இவற்றிற் குதாரணம் மேற்காட்டுதும். இதனானே பன்னீரடி யிகந்த,

"நீரார் செறுவின்" (கலி.75)

என்ற தரவிற்கும்,

"எல்லி வருதி யெவன்குறித் தனையெனச்
சொல்லா திருப்பே னாயி னொல்லென
விரியுளைக் கலிமான் றேரொடு வந்த
விருந்தெதிர் கோடலின் மறைப்ப லென்றும்" (கலி.75)

எனத் தரவகப்பட்ட தாழிசை வருதல் கொள்க. (134)

## சிவலிங்கனார்

**இடைநிலைப்............தென்ப.**

(இ-ள்) தாழிசையுறுப்பானது தரவினின் குறைந்து வரும் மரபுடையது என்பர், எ-று.

தரவு நான்கடியாயின் தாழிசை மூன்றடியும் இரண்டடியுமாயும், தரவு ஆறடியாயின் தாழிசை நான்கடியாயும் குறைவாயும் வரும். தாழிசை நான்கடியின் மிகுதல் இல்லை.

### தனிச்சொல் வருமிடம்

**440. அடைநிலைக் கிளவி தாழிசைப் பின்னர்**
**நடைநவின் றொழுகும் ஆங்கென[1] மொழிப. 131)**

## இலக்குவனார்

447. The word *āngu* occurs as a mode of style after *thālisai*.

## இளம்பூரணர்

**440. அடைநிலைக்...........மொழிப.**

*என்-னின், தனிச்சொல்லாமாறு உணர்த்துதல் நுதலிற்று*

(இ-ள்) அடைநிலைக் கிளவியாகிய தனிச்சொல் தாழிசைப் பின்னர் நடத்தலைப் பயின்றொழுகும் எனச் சொல்லுவர் என்றவாறு.

ஆங்கு[2] அசை தாழிசைப் பின்னர் நடத்தலைப் பயின்றொழுகு மெனவே, தாழிசைக்கு முன்னர் வருதலும் சிறுபான்மை உளதென்று கொள்க. (131)

## பேராசிரியர்

**447. அடைநிலைக் கிளவி.........கிளவி.**

*இஃது, ஆங்கென்னுஞ் சொல் தனிச்சொல்லெனப்படுமென்பது உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) தாழிசைப் பின்னர் ஆங்கு, தனிச்சொல்லாய் நின்று பயிலும் என்றவாறு.

---

1. ஆங்கென் கிளவி - பேரா. நச். பாடம்

2 ஆங்கு என்பது தனிச்சொல்லாக வரும் என்பர் பேராசிரியர். பார்க்க.

ஆங்கென்னுஞ் சொல்லினை எடுத்தோதினான் அது 'நடைநவின் றொழுகும்'[1] ஆகலின். ஆங்கென்னுஞ் சொல் பயின்று வருமெனவே அல்லாதனவும் உள, இத்துணைப் பயிலாதனவென்பது கொள்க. ஆங்கு என்பது ஏழாம் வேற்றுமை இடப்பொருளுணர நின்ற சொல்லாகலின் அஃது எல்லாச் செய்யுட்கண்ணுந் தன் பொருண்மைக்கேற்பச் செய்யல் வேண்டும் பிறவெனின், அற்றன்று; அதனை அசைநிலையாகக் கொள்க; அல்லதூஉம், எல்லாச் செய்யுளும் இதன் பொருண்மைக்கேற்பச் செய்யல்வேண்டுமென்றான் மிகைகூறிப் பயந்த தின்மையானென்பது. அசைநிலை பெய்து செய்யுள் செய்தன் மரபாகலின் அஃதமையு மென்பது.[2] நடை நவிலாதன பொருள் பெற வருமென்பது. அவை முன்னர்க் காட்டுதும். (135)

## நச்சினார்க்கினியர்

**135. அடைநிலைக் கிளவி................கிளவி.**

*இது, தனிச்சொற்கு இடங்கூறுகின்றது.*

(இ-ள்) ஆங்கென்னும் அசைச்சொலாய் அடைநிலையாகிய சொல் தாழிசையின் பின்னே பயின்று வரும் எ-று.

ஆங்கென்னு மசைச்சொல் பயிலுமெனவே, அல்லாதன பொருள் பெற வருதல் பெற்றாம். ஆங்கென ஏழனுருபாய் இடப்பொரு ளுணர்த்திற்றேல் யாண்டும் பொருளுணர்த்தல் வேண்டும். அங்ஙனம் நில்லாமையின் அசைநிலை யாயிற்று.

உதாரணம் மேற்காட்டுதும். (135)

## சிவலிங்கனார்

**அடைநிலைக்........மொழிப.**

(இ-ள்) தனிச்சொல்லானது தாழிசைப் பின்னர் வரும் என்பர், எ-று.

சிறுபான்மை முன்னரும் வரும்.

---

1. நடைநவின் றொழுகுதலாவது செய்யுட்கண் பயின்று வருதல். நடை - செய்யுள். போக்கு எனக் கொண்டு செய்யுட்கண் ஆளும் போக்கு எனினும் ஆம்.

2. ஆங்கு என்பது 7ஆம் வேற்றுமை யிடப்பொருள் தருவதோர் இடைச்சொல் ஆதலின் எல்லாச் செய்யுளிலும் ஆங்கு என்பதைக் கூறும்போது அச் சொல்லின் பொருளுக் கேற்ப முன்னர்க் கூறப்படும் பொருள் அமைதல்வேண்டும் என்பர் சிலர். அது தேவையில்லை. பொருளில்லா அசைச் சொல்லாகவே அதனைக் கூறலாம். அப்படி அமைப்பது மரபு ஆதலின் சிலர் கூறுவது போலக் கொள்வதாயின் நடைநவின்று வரும் என்ற மிகையால் ஆங்கு என்பதேயன்றிப் பிற சொற்களும் சிறுபான்மை வரும் என்ற கருத்துப் பெறப்படாது. நடைநவிலும் என்ற மிகையால் பிறவும் தனிச்சொல்லாக வரும் எனும் கருத்துப் பயந்தது என்க. அவை பொருளுடையனவாக வரும்.

சுரிதகவியல்

**441. போக்கியல் வகையே வைப்பெனப் படுமே**
**தரவியல் ஒத்தும் அதனகப் படுமே**
**புரைதீர் இறுதி நிலையுரைத் தன்றே.[1] (132)**

## இலக்குவனார்

448. *Pōkkiyal* sort is called *vaippu*.

449. It occurs having lines either equal to or less than *tharavu* completing - the sense of the verse.

## இளம்பூரணர்

**441. போக்கியல் வகையே..........தன்றே.**

*என்-னின், சுரிதகமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) சுரிதகம் என்பது வைப்பெனவும் படும். அது தரவோ டொத்த அளவிற்றாகியும் அதனிற் குறைந்த அளவிற்றாகியும் குற்றந் தீர்ந்த பாட்டி னிறுதிநிலையை உரைத்த தென்றவாறு.

தரவியலொத்தலாவது சிறுமை நான்கடி யாகியும் பெருமை பன்னிரண்டடி யாகியும் வருதல். அதனகப்படுதலாவது சிறுமை மூன்றடியானும் இரண்டடியானும் வருதல். இச் சூத்திரங்கள் ஓதினமுறையானே பாட்டு வருமென்று கொள்க. மேல் துள்ளலோசைத் தாகியும், நிரைமுதலாகிய வெண்பாவுரிச்சீர் மிக்கும், சுரிதகம் ஆசிரியத்தானாதல் வெண்பாவானாதல் வருமெனவுங் கூறிய இலக் கணங்களும் அறிந்துகொள்க.

(உ-ம்)"பாடின்றிப் பசந்தகண் பைதல பனிமல்க
வாடுபு வனப்போடி வணங்கிறை வளையூர
ஆடெழில் அழிவஞ்சா தகன்றவர் திறத்தினி
நாடுங்கால் நினைப்பதொன் றுடையேன்மன் அதுவுந்தான்;

இது தரவு.

தொன்னலந் தொலைபீங்கியாந் துயருழப்பத் துறந்துள்ளார்
துன்னிநங் காதலர் துறந்தேகு மாரிடைக்
கன்மிசை உருப்பறக் கனைதுளி சிதறென
இன்னிசை யெழிலியை யிரப்பவும் இயைவதோ;

புனையிழாய் ஈங்குநாம் புலம்புறப் பொருள்வெஃகி
முனையென்னார் காதலர் முன்னிய ஆரிடைச்

1. உரித்தன்றே - பாடம்

சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக்
கனைகதிர்க் கனலியைக் காமுறல் இயைவதோ;

ஒளியிழாய் ஈங்குநாம் துயர்கூரப் பொருள்வயின்
அளியொரீஇக் காதலர் அகன்றேகு மாரிடை
முளிமுதல் மூழ்கிய வெம்மைதீர்ந் துறுகென
வளிதருஞ் செல்வனை வாழ்த்தவும் இயைவதோ;

இவை தாழிசை.

எனவாங்கு,

தனிச்சொல்.

செய்பொருட் சிறப்பெண்ணிச் செல்வார்மாட் டினையன
தெய்வத்துத் திறனோக்கித் தெருமரல் தேமொழி
வறனோடின் வையத்து வான்றரும் கற்பினாள்
நிறனோடிப் பசப்பூர்த லுண்டெனா
அறனோடி விலங்கின்றவர் ஆள்வினைத் திறத்தே." (கலி.16)

இது சுரிதகம்.

இது நான்கடித் தரவும் நான்கடியான் மூன்று தாழிசையுந் தனிச்சொல்லும் ஐந்தடிச் சுரிதகமும் வந்த ஒத்தாழிசைக் கலிப்பா. இதனை நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா என்ப.

"வெல்புகழ் மன்னவன் விளங்கிய ஒழுக்கத்தான்
நல்லாற்றின் உயிர்காத்து நடுக்கறத் தான்செய்த
தொல்வினைப் பயன்துய்ப்பத் துறக்கம்வேட் டெழுந்தாற்போற்
பல்கதிர் ஞாயிறு பகலாற்றி மலைசேர
ஆனாது கலுழ்கொண்ட உலகத்து மற்றவன்
ஏனையான் அளிப்பான்போல் இகலிருள் மதிசீப்பக்
குடைநிழல் ஆண்டாற்கும் ஆளிய வருவாற்கும்
இடைநின்ற காலம்போல் இறுத்தந்த மருண்மாலை;

இது தரவு.

மாலைநீ, தூவறத் துறந்தாரை நினைத்தலிற் கயம்பூத்த
போதுபோற் குவிந்தஎன் எழினலம் எள்ளுவாய்
ஆய்சிறை வண்டார்ப்பச் சினைப்பூப்போல் தளைவிட்ட
காதலர்ப் புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய்;

மாலைநீ, தையெனக் கோவலர் தனிக்குழல் இசைகேட்டுப்
பையென்ற நெஞ்சத்தேம் பக்கம்பா ராட்டுவாய்
செவ்வழியாழ் நரம்பன்ன கிளவியார் பாராட்டும்
பொய்தீர்ந்த புணர்ச்சியுட் புதுநலம் கடிகல்லாய்;

மாலைநீ, தகைமிக்க தாழ்சினைப் பதிசேர்ந்து புள்ளார்ப்பப்
பகைமிக்க நெஞ்சத்தேம் புன்மைபா ராட்டுவாய்

தகைமிக்க புணர்ச்சியார் தாழ்கொடி நறுமுல்லை
முகைமுகந் திறந்தன்ன முறுவலுங் கடிகல்லாய்;

இவை தாழிசை.

ஆங்க,

தனிச்சொல்.

மாலையு மலரு நோனா தெம்வயின்
நெஞ்சமும் எஞ்சுமற் றில்ல எஞ்சி
உள்ளா தமைந்தோர் உள்ளும்
உள்ளில் உள்ளம் உள்ளுள் உவந்தே." (கலி.118)

இது சுரிதகம்.

இது தாழிசைதோறுந் தனிச்சொற்[1] பெற்றுவந்த நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா.

"வயக்குறு மண்டிலம்" (கலி.25).

என்னும் கலிப்பாவில் தரவு பன்னிரண்டடியான் வந்தது.

"இலங்கொளி மருப்பிற் கைம்மா" (கலி.23)

என்னுங் கலிப்பாவினுள் இரண்டடியால் தாழிசை வந்தன.

"உண்கடன் வழிமொழிந் திரக்குங்கான் முகனும்" (கலி.22)

என்னுங் கலிப்பாவில் தாழிசை மூன்றடியான் வந்தன.

"ஆறறி யந்தணர்"

என்னும் கடவுட்பாட்டினுள் மூன்றடிச் சுரிதகம் வந்தது.

இனி, ஏனையடிகளால் வரும் தரவுந் தாழிசையும் சுரிதகமும் கலித்தொகையுட் கண்டுகொள்க. (132)

## பேராசிரியர்

**448. போக்கியல் வகையே.........படுமே.**

*இஃது, ஒழிந்த சுரிதகம் உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) போக்கின திலக்கணப்பகுதி வைப்பென்று சொல்லப்படும் என்றவாறு.

இங்ஙனங் கூறப்பட்ட உறுப்பினை அடக்கியலெனவும் வார மெனவுஞ் சொல்லுப.

"அடக்கியல் வாரந் தரவோ டொக்கும்" (456)

1. மாலைநீ என்பது தனிச்சொல்.

என்பவாகலின்; என்ற தென்னோக்கியெனின்[1] போக்குதலும் வைத்தலு மென்னும் இரண்டிலக்கணமுடைத்து; வாரமெனச் சொல்லின் முடியு மிலக்கணமே கூறுவான்போலப் போக்கி னிலக்கணப்பகுதி வைப் பென்றதனைச் சுட்டிக் கூறப்படுமாகலின்.[2] (136)

**449. தரவிய லொத்து.........தன்றே.**

*இதுவுஞ் சுரிதக முணர்த்துகின்றது.*

(இ-ள்) தரவியலொத்தும் அதனகப்படும் - சிறுபான்மை[3] தரவுகளோடொத்து உம்மையான் ஏறிய வருமாயினும் பெரும்பான்மை தரவின்பாகம் பெறுதலை இலக்கணமாகவுடைத்து மேற்கூறிய சுரிதகம் எ-று.

புரைதீர் இறுதிநிலை உரைத்தன்றே என்பது, இடைநிலைப் பாட்டுப் பொருளினை முடிபுகாட்டியே நிற்கும் அதுதான் என்றவாறு.

'அகப்படும்' என்று அதற்கும் உம்மை கொடுத்தமையின் அஃது இலக்கணமாயிற்று; ஆகவே, அவ் விலக்கணத்திற் கேற்ற தரவின்கண்ணே ஒத்தலும் உயர்தலும் கொள்க.

சுருங்கியவெல்லை, ஆசிரியத்திற்கு இழிந்தவெல்லையாகிய மூன்றடிச் சிறுமையிற் கூறாமையிற் (அதிற்) சுருங்காது வருவதாயிற்று. ஈண்டும் 'அகப்படும்' எனவே பன்னீரடித் தரவின் பாகமாகிய ஆறடியே சுரிதகத்திற்கு உயர்விற்கெல்லை யென்பதூஉம், இழிந்தவெல்லை கூறாமையிற் பன்னிரண்டடித் தரவிற்காய் ஈற்று மூன்றடிச் சுரிதகம் வருதலும் ஒழிந்த கலி நாலிற்கும் அவ்வாறே வருதலுங் கூறினானென்பது. இனி, வெள்ளைச் சுரிதகத்திற்கும் இஃதெல்லா மொக்கும்.

இனித் 'தரவியலொத்தல்' ஈற்றயலடி முச்சீராகாது மண்டிலமாகி வருதலுஞ் சிறுபான்மையெனக் கொள்க. 'இறுதிநிலை' என்பதனை 'நுனிவிரல்' என்றாற்போலக் கொள்க. நிலையெனப்பட்டது, இடைநிலைப்பாட்டு. அதனிறுதியைக் கூறுமெனவே அவற்றுப் பொருளினை முடித்து விடுக்குமென்பதாம்.

"போக்கியல் வகையே வைப்பெனப் படும்" (448)

---

1. என்நோக்கியெனின் - சுரிதகவகை வைப்பு எனவும் கூறப்படும் என்றது என்ன பயன் நோக்கியெனின் .

2. போக்குதலால் சுரிதகம் போக்கியல் எனவும், வைக்கப்படுதலால் வைப்பு எனவும் சொல்லப்படும் என அச் சொற்களின் முடிவில் அப் பொருள்களின் இலக்கணம் கூறுவது போலக் கொண்டு போக்கியல் இலக்கணப்பகுதியானது வைப்பு என்பதன் இலக்கணத்தையும் சுட்டிச் சுரிதகம் கூறப்படும் ஆதலின் என்க. இதனை நச்சினார்க்கினியர் நன்கு சுருக்கிக் கூறியது காண்க.

3. கூறிய சுரிதகம்.......... அகப்படும் என்றதனாற் கும்மை கொடாமையின் அஃது இலக்கணமாயிற்று - பாடம், இது விளக்கமில்லை.

என்றவழி, உள்ளுறுப்பின் பொருளினைத் தன்கண் வைக்கப்படுவது சுரிதகமென்றதன்றி இன்ன உறுப்பின் பொருள் வைக்கப்படுமென் றிலாதான் முற்கூறியது பொதுவிதி மாத்திரையேயன்றி இடைநிலைப்பாட் டின் பொருளே பெரும்பான்மையும் வைக்கப்படுமென்பதூஉம் பொதுவிதியாற் சிறுபான்மை தரவின் பொருண்மை வைத்தலுமுடைத் தென்பதூஉங் கூறினான். 'தரவியல்' என்றதனால் தரவோடொத்த பொருட்கேற்றனவுங் கொள்க.

"நச்சல் கூடாது பெரும விச்செல
வொழிதல் வேண்டுவல்" (கலி.8)

என்பது, தாழிசைப் பொருண்முடிவு தன்பால் வைக்கப்படுதலின் இறுதியுரைத்தது. 'புரைதீ ரிறுதி' என்றதனான் அத் தாழிசைப் பொருளேயன்றி அவற்றொடு போக்கியற் பொருள் வந்தக்கால் அவ் விரண்டனையும் புரைபடாமற் பொருந்தச்செய்க வென்பது; அது,

"தன்னகர் விழையக் கூடின்" (கலி.8)

எனப் போக்கியற்பொருளோடு புரைதீர்ந்திற்றது; பிறவும் அன்ன.

"இமையவில் வாங்கிய வீர்ஞ்சடை யந்தணன்"

என்னுங் குறிஞ்சித்திணைப் (38) பாட்டினுள்,

"கோடுபுய்க் கல்லா துழக்கு நாடன்"

என்று உள்ளுறையுவமத்தால் தலைவியது விழுமங் கூறினமையின் அதனையு முட்கொண்டு போந்து சுரிதகத்து,

"நின்னுறு விழுமங் கூறக் கேட்டு
வருமே தோழி நன்மலை நாடன்"

என வைத்தமையின் அது தரவிய லொத்ததாயிற்று; இனி,

"ஞாலமூன் றடித்தாய"

என்னும் நெய்தற்றிணைக்(124)கலிப்பாட்டு அளவியலாற் சுரிதக மொத்தது.

"கருங்கோட்டு நறும்புன்னை" (கலி.123)

என்பது, தரவிற்கு அடி ஐந்தாகச் சுரிதகம் நான்கடியாய்ச் சுருங்கிவந்தது; அஃதேல் தரவகப்பட்டதெனச் சுருங்குதலன்றி ஒத்தற் பொருளும் படுமாயின் தரவகப்படும் போக்கென்னாது 'தரவிய லொத்தும்' என்ற தென்னையெனின், தரவு மென்ற உம்மையாற் சிறுபான்மை மிக்கு வரவும் பெறும் போக்கென்பது கொள்க.

"பாடின்றிப் பசந்தகண் பைதல பனிமல்க
வாடுபு வனப்போடி வணங்கிறை வளையூர
வாடெழி லழிவஞ்சா தகன்றவர் திறத்தினி
நாடுங்கா னினைப்பதொன் றுடையேன்மன் னதுவுந்தான்"

என்னும் பாலைப் (கலி.16) பாட்டுத் தரவுந் தாழிசையும் நான்கடியாகி யொத்தவழி,

"செய்பொருட் சிறப்பெண்ணிச் செல்வார்மாட் டினையன
தெய்வத்துத் திறநோக்கித் தெருமர றேமொழி
வறனோடின் வையத்து வான்றருங் கற்பினா
ணிறனோடிப் பசப்பூர்த லுண்டெடன
வறனோடி விலக்கின்றவ ராள்வினைத் திறத்தே" (கலி.16)
(137)

எனச் சுரிதகம் ஐந்தடியாயிற்று.

## நச்சினார்க்கினியர்

**136. போக்கியல்..........படுமே.**

*இஃது, ஒழிந்த சுரிதகம் உணர்த்திற்று.*

(இ-ள்) போக்கினதிலக்கணப் பகுதியை வைப்பென்று கூறப்படும் எ-று.

என்றது போக்குதலும் வைத்தலுமென்னும் இரண்டிலக்கண முடைத்து எ-று.

செய்யுள் பிறிதொன்றினை அவாவாமல் கடைபோகச் செய்தலிற் போக்கெனவும், முற்கூறிய தரவு தாழிசைகளிற் பொருள்களைக் கொண்டு தொகுத்து வைத்தலின் வைப்பெனவும் படும் என்றவாறு. இதனை அடக்கியலென்றும், வாரமென்றும் மேற்கூறுவார்; ஆண்டு அப் பொருள்களு முணர்க. (136)

**137. தரவிய லொத்தும்..........தன்றே.**

*இதுவுஞ் சுரிதகத்து எல்லை கூறுகின்றது.*

(இ-ள்) சிறுபான்மை தரவுகளோடொத்தும், உம்மையான் ஏறியும் வருமாயினும் பெரும்பான்மை தரவின் பாகம் பெறுதலை யிலக்கணமாக வுடைத்தாய் வரும். அங்ஙனம் வருமிடத்துப் பெரும்பான்மையும் இடைநிலைப்பாட்டின் பொருளை முடிவு காட்டியே நிற்கும் எ-று.

இயலென்றதனால், தரவின் பொருள்கொண்டு முடியவும் பெறுமென்று கொள்க. சிறுமைக் கெல்லை கூறாமையின் ஆசிரியத்திற்குக் கூறிய மூன்றடியே சிறுமையாம். அகப்படுமெனவே தரவின் பாகமாகிய ஆறடியே உயர்விற் கெல்லையென்பதூஉம், இழிவிற் கெல்லை கூறாமையிற் பன்னீரடித் தரவிற்காயினும் மூன்றடியான் வருமென்பதூஉம், அடிவரையிறந்த தரவிற்கும் இவ்வாறே வருமென்பதூஉம் கொள்க. வெள்ளைச் சுரிதகத்திற்கும் இஃதொக்கும்.

'ஒத்தும்' என்றலின் ஆசிரியம் மண்டிலமாய் வருதலுங் கொள்க.

'இறுதி' யென்றது இடைநிலைப்பாட்டை.

(எ-டு) தரவு மிகத் துள்ளாமற் றாழிசை தாழம்பட்டு வந்து கட்டளைக்கலி வந்துழிக் காண்க.

"வலிமுன்பின் வல்லென்ற யாக்கைப் புலிநோக்கிற்
சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தையர்
சுற்றம்பார்த் தல்குங் கடுங்கண் மறவர்தாங்
கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர்
துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலிற்
புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை
வெள்வேல் வலத்திற் பொருடரல் வேட்கையி
னுள்ளினி ரென்ப தறிந்தன ளென்தோழி;

காழ்விரி கவையார மீவரு மிளமுலை
போழ்ந்திடப் படாஅமை முயங்கியு மமையாரென்
றாழ்கதுப் பணிகுவர் காதலர் மற்றவர்
சூழ்வகை யெவன்கொ லறியே னென்னும்;

முள்ளுறழ் முளையெயிற் றமிழ்தூறுந் தீநீரைக்
கள்ளினு மகிழ்செயு மெனவுரைத்து மமையாரென்
னொள்ளிழை திருத்துவர் காதலர் மற்றவ
ருள்ளுவ தெவன்கொ லறியே னென்னும்;

நுண்ணெழின் மாமைச் சுணங்கணி யாகந்தங்
கண்ணொடு தொடுத்தென நோக்கியு மமையாரென்
னொண்ணுதல் நீவுவர் காதலர் மற்றவ
ரெண்ணுவ லெவன்கொ லறியே னென்னும்;

எனவாங்கு,

கழிபெரு நல்கலொன் றுடைத்தென வென்றோழி
யழிவொடு கலங்கிய வெவ்வத்த னொருநாணீர்
பொழுதிடைப் படநீப்பின் வாழ்வாளோ
வொழிகினிப் பெருமநின் பொருட்பிணிச் செலவே." (கலி.4)

இது, மிகவுந் துள்ளிவந்த எட்டடித் தரவுந் தாழம்பட்ட வோசை பெற்றுத் தரவகப்பட்ட மரபினதாகிய நான்கடித் தாழிசை மூன்றும் ஆங்கென்னு மசைநிலைத் தனிச்சொல்லுந் தரவின் பாகம்பெற்று நான் கடியா யிறுதிநிலை யுரைத்த சுரிதகமும் பெற்றுத் தரவினுந் தாழிசையினு நேரீற் றியற்சீரும் பெற்றுவந்த ஒத்தாழிசைக்கலி.

நேரீற் றியற்சீர் கட்டளைக்கு வாராமை யுணர்க.

"ஞாலமூன் றடித்தாய முதல்வற்கு முதுமுறைப்
பாலன்ன மேனியா னணிபெறத் தைஇய
நீலநீ ருடைபோலத் தகைபெற்ற வெண்டிரை
வாலெக்கர் வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப;

ஊரல ரெடுத்தரற்ற வுள்ளாய்நீ துறத்தலிற்
கூருந்தன் னெவ்வநோ யென்னையு மறைத்தாள்மன்

காரிகை பெற்றதன் கவின்வாடக் கலுழ்பாங்கே
பீரல ரணிகொண்ட பிறைநுத லல்லாக்கால்;

இணைபிவ்வூ ரலர்தூற்ற லெய்யாநீ துறத்தலிற்
புணையில்லா வெவ்வநோ யென்னையு மறைத்தாள்மன்
துணையாருட் டமைபெற்ற தொன்னல மிழந்துநீ
யணிவனப் பிழந்ததன் அணைமென்றோ ளல்லாக்கால்;

இன்றிவ்வூ ரலர்தூற்ற வெய்யாய்நீ துறத்தலி
னின்றதன் னெவ்வநோ யென்னையு மறைத்தாள்மன்
வென்றவே னுதியேய்க்கும் விறனல னிழந்துநீ
நின்றநீ ருகக்கலுழ நெடும்பெருங்க ணல்லாக்கால்;

அதனால்,

பிரிவில்லாய் போலநீ தெய்வத்திற் றெளித்தசொல்
லரிதென்னா டுணிந்தவ ளாய்நலம் பெயர்தரப்
புரியுளை நெடுமான்றேர் கடவுபு
விரிதண்டார் வியன்மார்ப விரைகநின் செலவே." (கலி.124)

இது, நாலடி யிழிபாகிய நான்கடித் தரவிற்கு மரபென்ற இலேசாற் கொண்ட நான்கடித் தாழிசை தம்முள் அளவொத்து வந்து, நடை நவிலாது பொருள் பெற்ற தனிச்சொல்லும் பெற்றுத் தரவியலொத்து இறுதிநிலை யுரைத்த சுரிதகமும் பெற்ற வொத்தாழிசைக் கலிப்பா.

" பாஅ லஞ்செவிப் பணைத்தாண் மாநிரை
மாஅல் யானையொடு மறவர் மயங்கித்
தூறதர் பட்ட வாறுமயங் கருஞ்சுர
மிறந்துநீர் செய்யும் பொருளினும் யாமுமக்குச்
சிறந்தன மாதல் அறிந்தனி ராயின்
நீளிரு முந்நீர் வளிகலன் வெளவலி
னாள்வினைக் கழிந்தோர் போற லல்லதைக்
கேள்பெருந் தகையோ டெவன்பல மொழிகுவ
னாளுங் கோண்மீன் றகைத்தருந் தகைமே;

கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப் படுத்தபின்
புல்லென்ற களம்போலப் புலம்புகொண் டமைவாளோ;

ஆள்பவர் கலக்குற வலைபெற்ற நாடுபோற்
பாழ்பட்ட முகத்தோடு பைதல்கொண் டமைவாளோ;

ஓரிரா வைகலுள் தாமரைப் பொய்கையுள்
நீர்நீத்த மலர்போல நீநீப்பின் வாழ்வாளோ;

எனவாங்கு,

பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட்
டெந்நாளோ நெடுந்தகாய்நீ செல்வ
தந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே." (கலி.5)

இது சிறுமைக்கெல்லை கூறிய ஈரடித் தாழிசையும், ஆசிரியத் திற்குக் கூறிய சிறுமையான் வந்த மூன்றடிச் சுரிதகமும் பெற்றது.

"இமயவில் வாங்கிய வீர்ஞ்சடை யந்தண
னுமையமர்ந் துயர்மலை யிருந்தன னாக
வையிரு தலையி னரக்கர் கோமான்
றொடிபொலி தடக்கையிற் கீழ்புகுத் தம்மலை
யெடுக்கல் செல்லா துழப்பவன் போல
வுறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையைக்
கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை
நீடிரு விடரகஞ் சிலம்பக் கூஉய்த்தன்
கோடுபுய்க் கல்லா துழக்கு நாடகேள்" (கலி.38)

என்ற இதன் உள்ளுறையுவமத்தால் தலைவி விழுமங் கூறியதனையு முடன்கொண்டு சுரிதகத்து,

"நின்னுறு விழுமங் கூறக் கேட்டு
வருமே தோழி நன்மலை நாடன்
வேங்கை விரிவிட நோக்கி
வீங்கிறைப் பணைத்தோள் வரைந்தனன் கொளற்கே"
(கலி.38)

எனக் கூறுதலின் இயலென்ற இலேசாற் றரவின் பொருள்கொண்டிற்ற சுரிதகம் வந்தது.

"பாடின்றிப் பசந்தகண் பைதல் பனிமல்க
வாடுபு வனப்போடி வணங்கிறை வளையூர
வாடெழி லழிவஞ்சா தகன்றவர் திறத்தினி
நாடுங்கா னினைப்பதொன் றுடையேன்மன் னதுவுந்தான்"
(கலி.16)

என்னு நான்கடித் தரவிற்கு,

"செய்பொருட் சிறப்பெண்ணிச் செல்வார்மாட் டினையன
தெய்வத்துத் திறனோக்கித் தெருமரல் தேமொழி
வறனோடின் வையத்து வான்றருங் கற்பினா
ணிறனோடிப் பசப்பூர்த லுண்டென
வறனோடி விலங்கின்றவ ராள்வினைத் திறத்தே" (கலி.16)

எனச் சுரிதகம் ஐந்தடியான் மிக்கு வந்தது. இஃது ஒத்தும் என்ற உம்மை யாற் கொண்டது.

"அரிதே தோழிநா ணிறுப்பாமென் றுணர்தல்
பெரிதே காமமென் னுயிர்தவச் சிறிதே
பலவே யாமம் பையுளு முடைய

சிலவே யெம்மோ டுசாவு மன்றி
யழலவிர் வயங்கிழை யொலிப்ப வுலமு
தெழிலெஞ்சு மயிலி னடுங்கிச் சேக்கையு
ளழலா கின்றவர் நக்கதன் பயனே;

மெல்லிய நெஞ்சு பையுள்கூ ரத்தஞ்
சொல்லினா னெய்தமை யல்ல தவர்நம்மை
வல்லவன் றைஇய வாக்கமை கடுவிசை
வில்லினா னெய்தலோ விலர்ம னாயிழை
வில்லினுங் கடிதவர் சொல்லினுட் பிறந்தநோய்;

நகைமுத லாக நட்பினு ளெழுந்த
தகைமயி னலித லல்ல தவர்நம்மை
வகைமையி னெழுந்த தொன்முரண் முதலாம்
பகைமையி னலிதலோ விலர்மன் ஆயிழை
பகைமையிற் கடிதவர் தகைமையி னலியுநோய்;

நீயல னென்றென்னை யன்பினிற் பிணித்ததஞ்
சாயலிற் சுடுத லல்ல தவர்நம்மைப்
பாயிரு ணீக்கு நோய்தபு நெடுஞ்சுடர்
தீயினாற் சுடுவதோ விலர்ம னாயிழை
தீயினுங் கடிதவர் சாயலிற் கனலுநோய்;

ஆங்க,

அன்னர் காதல ராக வவர்நமக்
கின்னுயிர் போத்தரு மருத்துவ ராயின்
யாங்கா வதுகொல் தோழி யெனையதூஉந்
தாங்குதல் வலித்தன் றாயி
னீங்கரி துற்றன் றவருறீஇய நோயே." (கலி.137)

இது இடைநிலைப்பாட் டென்றதனால் தாழம்பட்ட வோசை யின்றி வந்த இடைநிலைப்பாட்டு ஐந்தடியான் வந்தது.

ஆறடியான் வருவன வந்தவழிக் காண்க.

"இன்னரிச் சிலம்பிற் சின்மொழி யைம்பாற்
பின்னொடு கெழீஇய தடவர வல்குல்
நுண்வரி வாட வாராது விடுவாய்
தண்ணந் துறைவ தகாஅய் காணீ." (கலி.125)

இதுவுந் தாழியசையல்லா இடைநிலைப்பாட்டு.

"காணாமை யிருள்பரப்பிக் கையற்ற கங்குலான்
மாணாநோய் செய்தான்கட் சென்றாய்மற் றவனைநீ
காணவும் பெற்றாயோ காணாயோ மடநெஞ்சே." (கலி.123)

இது தாழிசையெனவும், இடைநிலைப்பாட்டெனவும்படும். இடைநிலைப்பாட்டாய்த் தனியே வருவன கொச்சகமென்றுணர்க. வெள்ளைச் சுரிதகத்தான் முடிவனவும் வந்துழிக் காண்க.

'புரைதீ'ரென்றதனால் தாழிசைப் பொருளேயன்றி அவற்றோடு போக்கியற் பொருளுங்கொண்டு புடைபடாது வருவனவங் கொள்க. அது,

"அரசினு நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ" (கலி.8)

என முடித்தலின்.

"நச்சல் கூடாது பெரும விச்செல
வொழிதல் வேண்டுவல் சூழிற் பழியின்று" (கலி.8)

எனத் தாழிசைப் பொருளைக் கொண்டு பின்பு,

"மன்னவன் புறந்தர வருவிருந் தோம்பி
நன்னகர் விழையக் கூடி
னின்னுறல் வியன்மார்ப வதுமனும் பொருளே" (கலி.8)

எனப் போக்கியற் பொருளையும் கொண்டிற்றது, பிறவுமன்ன. (137)

## சிவலிங்கனார்

**போக்கியல்................தன்றே.**

(இ-ள்) சுரிதகம்(போக்கியல்) வைப்பு எனவும் கூறப்படும். அது, தரவு எத்துணையடி வந்ததோ அத்துணை யடியுடையதாய் அடியால் ஒத்தும் தரவிற் குறைந்த அடியுடையதாயும் குற்றம் தீர்ந்த செய்யுளின் இறுதியில் உரைக்கப்படுவது எ-று.

சுரிதகத்துக்கும் பெருமை தரவுபோல நான்கடிமுதல் பன்னிரண் டடியும், சிறுமை இரண்டடியும் மூன்றடியும் கொள்க.

### ஒத்தாழிசைக்கலிப் பொருள்

**442. ஏனை யொன்றே,**
**தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே. (133)**

## இலக்குவனார்

450. The other kind of *oththālisai* is one which the worship of God is in the direct form.

## இளம்பூரணர்

**442. ஏனை யொன்றே............கண்ணே.**

*என்-னின், சொல்லாதொழிந்த ஒத்தாழிசைக் கலிப்பா உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஒத்தாழிசைக்கலிப்பா முன்னிலையிடத்துத் தேவரைப் பராவும் பொருண்மைத்து என்றவாறு. (133)

## பேராசிரியர்

**450. ஏனையொன்றே..........கண்ணே.**

*இஃது, ஒழிந்த ஒத்தாழிசையுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) அது முன்னிலையிடமாகத் தேவரைப் பராவும் பொருண் மைத்து என்றவாறு.

எனவே, இஃது அகநிலைச் செய்யுளாகாதென்றான்; இதனானே முன்னியது அகநிலை யொத்தாழிசை யெனப்படும். மற்றிது,

"வாழ்த்தியல் வகையே நாற்பாக்கு முரித்து" (421)

என்றவழிச் சொல்லப்பட்டதாமெனின் அஃது உறழ்கலிக்கும் வெண்கலிக்கும் கொச்சகக்கலிக்கும் பொதுவாகலின் அவற்றுக்குத் தேவபாணி விலக்கினானென்பது.

மற்று முன்னிலைக்க ணென்றதென்னையெனின், தெய்வத்தினை முன்னிலையாகச் சொல்லப்பட்டனவன்றி அல்லன தேவபாணி யெனத் தகாவென்பது; என்னை? யான் இன்ன பெருஞ்சிறப்பின் இன்ன தெய்வமென்று தன்னைத்தான் புகழ்ந்துகூறி[1] 'நின்னைக் காப்பேன்; நீ வாழிய' எனத் தெய்வஞ் சொல்லிற்றாகச் செய்யுள் செய்தலும் ஆகாது, வாழ்த்தினுள் அவ்வாறுண்டாயினென்பது. இதனானே படர்க்கையும் விலக்கினானாம்; ஆகவே, தெய்வம் படர்க்கையாயவழிப் புறநிலை வாழ்த்தாவதன்றித் தேவர்ப்பராயிற்றாகாது பாட்டுடைத் தலைவனொடு கூட்டிச் சொல்லினுமென்றானாம். இங்ஙனங் கூறவே, பாட்டுடைத்தலை வனைக் கூட்டினுங் கூட்டாக்காலுந் தேவர்ப் பராயிற்றேயாம், முன்னிலையாயினென்பது பெற்றாம். மற்றிவை பாடல்சான்ற புலனெறி வழக்கிற்கன்றித் தேவர்ப் பராயதற்கும் உரியவோவெனின், ஆண்டு அகப்பொருட்குரிமை யுடையன பயன் கலியும் பரிபாடலுமென்றத னானே அத்துணையன்றிக் கடவுள்வாழ்த்துப் பொருள்படவும் வருமென்பது ஈண்டுக் கூறினானாமென்பது. அதுவன்றே 'ஏனையது' எனச் சிறுமை தோன்றப் பிற்கூறியதென்பது. (138)

---

1. உலகவழக்கில் தெய்வம் 'யான் உன்னைக் காப்பேன்' எனக் கூறுதல், தெய்வம் ஏறிய வேலன் கூற்றில் காணலாம்

## நச்சினார்க்கினியர்

**138. ஏனை யொன்றே.........கண்ணே.**

*இஃது, ஒழிந்த ஒத்தாழிசை கூறுகின்றது.*

(இ-ள்) ஒழிந்த வொத்தாழிசை முன்னிலை யிடமாகத் தேவரைப் பராவும் பொருண்மைத்து எ-று.

எனவே, இது அகநிலைச் செய்யுளாகா தென்பதூஉம் முன்னையது அகநிலைச் செய்யுளா மென்பதூஉம் பெறுதும். முன்னிலைக் கண் வருமெனவே முன் நாற்பாவிற்கு முரித்தென்ற வாழ்த்தியல் நான்கு கலிக்கு மெய்திற்றேனும் அவை தேவபாணி யாகாவாயிற்று. அங்ஙனம் பராவினும் படர்க்கையாயவழிப் புறநிலை வாழ்த்தேயாம். பாட்டுடைத் தலைவனைக் கூட்டிக் கூறினுமென்பது பெறுதும். எனவே, பாட்டுடைத் தலைவனைக் கூட்டினுங் கூட்டாவிடினுந் தேவர்ப் பராயிற்றேயாம்; முன்னிலையென்பது பெற்றாம். கலிப்பாப் புலனெறி வழக்கேயன்றிச் சிறுபான்மை கடவுட்பராஅய பொருளானும் வருமென்றற் கிதனைப் பிற்கூறினார். தெய்வந்தானே நின்னை யான் காப்பேனெனக் கூறும் உலக வழக்கமாகாதென் றுணர்க. (138)

## சிவலிங்கனார்

**ஏனை யொன்றே...............கண்ணே.**

(இ-ள்) சொல்லாது விடுபட்ட ஒத்தாழிசைக் கலிப்பாவானது தேவரை முன்னிலைப்படுத்திப் பரவுமிடத்தது, எ-று.

தேவர்ப் பரவும் ஒத்தாழிசைவகை

**443. அதுவே,**
**வண்ணகம் ஒருபோ கெனவிரு வகைத்தே. (134)**

## இலக்குவனார்

451. It is of two kinds which are *vaṇṇakam* and *orupōku*.

## இளம்பூரணர்

**443. அதுவே,**
**வண்ணகம்.............வகைத்தே.**

*என்-னின், மேற்சொல்லப்பட்ட முன்னிலைப்பரவலாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) தேவரிடத்து முன்னிலைப் பரவலாகிய அதுதான் வண்ணக மெனவும் ஒருபோகு எனவும் இருவகைப்படும் என்றவாறு. (134)

## பேராசிரியர்

**451. அதுவே,**
**வண்ணக...........வகைத்தே.**

*இஃது, அதன் வகையுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) 'ஏனை யொன்று' (450) எனப்பட்ட ஒத்தாழிசை, வண்ணக வொத்தாழிசையெனவும் ஒருபோகெனவும் இரண்டாம் என்றவாறு.

இதன் பயன்: ஒத்தாழிசை யெனப்படாது, இவற்றுளொன்றென் பது அறிவித்தவாறாயிற்று; அஃதென்னை பெறுமாறெனின், மேல் ஒத்தாழிசைக்கலி இருவகைத்தாகு மென்றான்; பின்னர் அவ் விரண்ட னுள் ஒன்றற்கு வண்ணகம் ஒருபோகென வேறுபெயர் கூறவே முன்னரதே ஒருதலையாக ஒத்தாழிசைக்கலி யெனப்படுவதென உய்த்துணரவைத்தமையானும் 'ஏனையொன்று' (450) என வேறுபடுத் தமையானும் அப் பெயரும் உடன்கூறாது போதந்து வைத்தமையானும் அதனோடு ஓரினத்தவல்லவென்பது பலவாற்றானுங் கொள்ளவைத்தா னென்பது; அஃதேல், வண்ணகமும் ஒத்தாழிசை யெனப்படாதாம் பிறவெனின், அது மாற்றுதற்கன்றே வண்ணகம் முற்கூறிய அதிகாரம்பட வைப்பானாயிற்றென்பது. இக்காலத்தார் ஒருபோகினையும் ஒத்தாழிசையென்று தாழிசை பெய்து காட்டுப.

"எருத்தே கொச்சக மராகஞ் சிற்றெண்
ணடக்கியல் வாரமொ டந்நிலைக் குரித்தே" (464)

என்புழி, தாழிசையுறுப்பு ஓதாமையின் அது பொருந்தாது.[1] (139)

## நச்சினார்க்கினியர்

**139. அதுவே,**
**வண்ணக............வகைத்தே.**

(இ-ள்) இஃது ஏனையொன்று என்ற பெயர்த் தாழிசை வண்ணக வொத்தாழிசை யெனவும், ஒருபோகெனவு மிரண்டாம் எ-று.

இதன் பயன்: இவற்றுள் ஒருபோகு ஒத்தாழிசையெனப் பெயர் கூறப்பெறாதென்பதாம். அது அகநிலை யொத்தாழிசையை முற்கூறிப் பின் சிறுபான்மை தோன்ற ஏனையொன்றெனவுங் கூறிப் பின்னரு முற்கூறிய வொத்தாழிசையைச் சேர வண்ணகத்தை வைத்துப் பின் ஒருபோகென வேறுபட வைத்ததனானும், அதனிலக்கணங் கூறுகின்ற

---

1. ஒருபோகு கலிப்பாவில் தாழிசையிராது என்றபடி

'எருத்தே கொச்சகம்' (செய்.153) என்னுஞ் சூத்திரத்துத் தாழிசையுறுப்புப் பெறுமெனக் கூறாமையானு முணர்க.

இக்காலத்தார் ஒருபோகினையும் ஒத்தாழிசையென்னுந் தாழிசை பெய்து காட்டுவர்; இது தொல்காப்பியனார் கருத்தன்மையுணர்க.

(139)

**சிவலிங்கனார்**

**அதுவே,**
**வண்ணக...........வகைத்தே.**

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட முன்னிலைப்பரவலாகிய ஒத்தாழிசைக் கலி வண்ணகம் எனவும் ஒருபோகு எனவும் இருவகைப்படும் எ-று.

**வண்ணக ஒத்தாழிசைக்கலி**

**444. வண்ணகம் தானே,**
**தரவே தாழிசை எண்ணே வாரமென்**
**றந்நால் வகையில் தோன்று மென்ப. (135)**

**இலக்குவனார்**

452. Of those

*Vannakam* occurs having *tharavu, thālisai, en* and *vāram* as its parts in order.

**பி.இ.நா.**

**யா.வி. 84**

அவற்றொடு முடுகிய லடியுடை அராகம்
அடுப்பது வண்ணக ஒத்தா ழிசைக்கலி.

**யா.கா. 32**

அசையடி முன்னர் அராகம்வந்து எல்லா வுறுப்பும் உண்டேல்
வகையறு வண்ணக ஒத்தா ழிசைக்கலி.

**வீர. 116,117**

தரவொடு தாழிசை சுற்றும் அராகம் அம்போதரங்கம்
உரவுடை நற்றனி வாரம் என்றாம் கலி..........

வண்ணக ஒத்தாழிசைக் கலிக்கு ஆறு உறுப்பு என்பர்.

**தொல். 233**

தரவுஒன்று ஒருமுத் தாழிசை........................ அம்போதரங்கம்
சாரவும்
அம்போ தரங்கமேல் அராகம் அணையவும்...........
ஆம்வண்ணகம்.

**மு.வீ.யா.செ.37**

தாழிசை அம்போ தரங்கக் கிடையே
அராகம் அடைந்துமுன் தரவு தாழிசை
அராகமும் அம்போ தரங்கம் தனிச்சொல்
சுரிதகம் ஆறொடு தோன்றும் வண்ணக
ஒத்தா ழிசைக்கலி யாமுறை தரினே.

**இ.வி. 738**

அசையடி மிசைத்தாய் அராகம் அவற்றொடும்
இசைவுறின் வண்ணக ஒத்தா ழிசைக்கலி.

## இளம்பூரணர்

**444. வண்ணகம் தானே...........மென்ப.**

*என்-னின், வண்ணக வொத்தாழிசைக் கலிப்பா ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) வண்ணக ஒத்தாழிசையாவது தரவும், தாழிசையும், எண்ணும்[1], சுரிதகமும் என்று சொல்லப்பட்ட நான்கு உறுப்பினையும் உடைத்து என்றவாறு. (135)

## பேராசிரியர்

**452. வண்ணகந் தானே...........மென்ப.**

*இது, முறையானே வண்ணக வொத்தாழிசை யுணர்த்துகின்றது.*

(இ-ள்) தரவும், தாழிசையும், எண்ணும், வாரமுமென்னும் உறுப்பு முறையானே வருவது வண்ணக வொத்தாழிசையாம் என்றவாறு. அது,

"முதற்றொடை பெருகிச் சுருங்குமன் னெண்ணே" (457)

என்றவழிக் காட்டுதும். வண்ணித்துப் புகழ்தலின் வண்ணக மெனப்படும்; என்னை? தரவினானே தெய்வத்தினை முன்னிலையாகத் தந்து நிறீஇப் பின்னர்த் தெய்வத்தினைத் தாழிசையானே வண்ணித்துப் புகழ்தலின் அப் பெயர் பெற்றதாகலின். ஒழிந்த உறுப்பான் வண்ணிப்பினுஞ் சிறந்த உறுப்பு இதுவென்க; எனவே, அகநிலைச் செய்யுட்டாழிசை, வண்ணித்து

1 பேரெண், சிற்றெண்

வாராவென்பதாம். எண்ணுறுப்பாமாறு முன்னர்ச்(457) சொல்லுதும். அவ் வெண்ணுறுப்புத்தான் நீர்த்திரை போல வரவரச் சுருங்கிவருதலின் அம்போதரங்கமெனவும்[1] அமையுமாகலின் அதனை அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பாவெனவுஞ் சொல்லுப.

இனி வண்ணகமென்பது, அராகமென[2] உரைத்து அவ் வுறுப் புடையன வண்ணகவொத்தாழிசை யெனவுஞ் சொல்லுவாரும் உளர். எல்லா ஆசிரியருஞ் செய்த வழிநூற்கு இது முன்னூலாதலின் இவரோடு மாறுபடுதன்(649) மரபன்றென மறுக்க. இசைநூலுள்ளும் மாறுபடின் அஃது அவர்க்கும் மரபன்றென்பது. மற்றிதற்குத் தனிச்சொல்லோதிய தில்லையாலெனின் அதனை அதிகாரத்தாற் கொள்க. (140)

## நச்சினார்க்கினியர்

**140. வண்ணகத் தானே................மென்ப.**

*இது, முறையானே வண்ணகங் கூறுகின்றது.*

(இ-ள்) வண்ணகவொத்தாழிசைதான் தரவுந் தாழிசையும் எண்ணுறுப்புஞ் சுரிதகமுமென் றெண்ணிய நான்கு முறைமையாற் றோன்றும் எ-று.

தனிச்சொல்லையும் அதிகாரத்தாற் கொள்க. தரவினால் தெய்வத்தை முன்னிலையாக நிறுத்தித் தாழிசையால் தெய்வத்தை வண்ணித்துப் புகழ்தலின் வண்ணகமாயிற்று, ஒழிந்த வுறுப்பான் வண்ணிப்பினும் அதற்குச் சிறந்தவுறுப் பிதுவேயாம்; எனவே, அகநிலைச் செய்யுளுள் தாழிசை வண்ணித்து வாராவாயிற்று. எண்ணுறுப்பு மேற்கூறுப.

உதாரணம் மேற்காட்டுதும்.

அவ் வுறுப்பு நீர்த்திரைபோல் முறையே சுருங்கிவருதலி னதனை யம்போதரங்க வொத்தாழிசை யென்றும், வண்ணக மென்றதனை அராக வுறுப்பாக்கி அவ் வுறுப்புடையது வண்ணகவொத்தாழிசை யென்றுங் கூறுவாருமுளர். இது பின்னுள்ளோர் கூறிய நூற்கெல்லா முதனூ லாதலின் தொல்காப்பியனாரை மாறுபடுதல் மரபன்றென்க. (140)

## சிவலிங்கனார்

**வண்ணகத்.......................என்ப.**

(இ-ள்) வண்ணக ஒத்தாழிசையானது தரவும், தாழிசையும், எண்ணும், சுரிதகமும் எனும் நான்கு உறுப்பினையுடையது, எ-று.

---

1. அம்பு-நீர், தரங்கம்-அலை

2. வண்ணகம் என்பது அராகம் எனக் கொண்டு வண்ணித்துவரின் அதனை அராகம் எனும் உறுப்பு என்றனர் பிற்காலத்தார்.

தனிச்சொல்லும் அதிகாரத்தாற் கொள்க.

தாழிசையால் தெய்வத்தை வண்ணித்துப் பாடலின் வண்ணகம் ஆயிற்று.

பிற்காலத்தார் அம்போதரங்க உறுப்பு ஒன்று கொண்டு அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவும் கொள்வர்.

**வண்ணகவொத்தாழிசைக் கலித்**
**தரவின் அடிவரையறை**

**445. தரவே தானும்,**
**நான்கும் ஆறும் எட்டும் என்ற**
**நேரடி பற்றிய நிலைமைத் தாகும். (136)**

## இலக்குவனார்

453. *Tharavu* is having four, six and eight standard lines (of four feet).

## இளம்பூரணர்

**445. தரவே தானும்...............தாகும்.**

*என்னின், தரவிற்கு அடிவரையறை உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவிற்குத் தரவு நான்கும் ஆறும் எட்டுமாகிய அளவடியினாலே வரும் என்றவாறு.

ஈண்டு நேரடி[1] என்றது கொச்சகத் தரவுபோல வாராமைக்கு என்று கொள்க. சொல்லப்பட்ட ஒன்பதடியினும் மூன்றடியே[2] இதற்கு வருவ தென்றவாறாயிற்று. (136)

## பேராசிரியர்

**453. தரவே தானு.......தாகும்.**

*இஃது, ஒத்தாழிசையுள் ஏனையொன்றற்குத் தரவு வேறுபட்ட இலக்கணத்திற்றாகலான் அது கூறுகின்றது.*

(இ-ள்) இது நான்கு முதல் பன்னிரண்டடி யீறாக வாராது தேவபாணிக்காயின் எட்டும், ஆறும், நான்குந் தரவடியாம் என்றவாறு.

---

1. நேரடி என்பது நாற்சீரடி. நாற்சீரடியான் வரும் என்பது முன்னரே கூறப்பட்டு விட்டமையின் இங்கும் நேரடி என்றது மிகை. அதனால் கொச்சகத்தரவு அளவடியின் மிக்குவருவதுபோலத் தேவர்ப்பராவும் வண்ணகத்தரவு வாராது என்பது கொள்ளப்படும்.

2. மூன்றடி - நான்கடி, ஆறடி, எட்டடி

இத்னானே தலையளவும் இடையளவுங் கடையளவுமென்பன கூறினானாம்.[1] இங்ஙனங் கூறவே ஒழிந்த வுறுப்பிற்குந் தலையிடைகடை யென்பது கொள்ளப்படும்.

'நேரடி பற்றிய நிலைமைத் தாகும்'

என்பதனை, அளவடியான் வருமென்றற்குக் கூறினானாமென்பாருமுளர்; அற்றன்று; பிற அடி மயங்குவனவும் அளவடி யுரியவென்பதும் முன்னர்க் கூறப்பட்டமையின்; மற்றென்னை கருதிய தெனின், சமநிலையின்றி வியநிலை[2] வாரா வென்பது.

இனிப் 'பற்றிய' என்ற மிகையானே, முற்கூறிய தரவுந் தாழிசையும் அளவடியான் வருதலில்லை யென்பது கொள்க.[3] வருகின்ற ஒத்தாழிசைக்கும் பேரெண்ணிற்குஞ் சிற்றெண்ணிற்கும் இஃதொக்கும். (141)

## நச்சினார்க்கினியர்

**141. தரவே தானும்...........தாகும்.**

*இஃது, ஏனையொன்றற்குத் தரவிலக்கணங் கூறுகின்றது.*

(இ-ள்) தரவுதானும் நான்குமுதற் பன்னிரண்டடி யிறுதியாக வாராது; தேவபாணிக்காயின் எட்டும் ஆறும் நான்குமென்ற சமநிலையைப் பற்றிய நிலைமைத்தாய் வரும் எ-று.

இதனால் தலையளவு, இடையளவு, கடையளவுகளாம். ஒழிந்த வுறுப்பிற்கும் இவை கொள்க.

'நேரடி பற்றிய' வென்றதற்கு அளவடியென்பது ஈண்டுக் கூறவேண்டாமையிற் சமநிலையானன்றி வியநிலையான் வாராவென்பதே பொருளாயிற்று. (141)

## சிவலிங்கனார்

**தரவே தானு.............தாகும்.**

(இ-ள்) வண்ணக வொத்தாழிசைக் கலிப்பாவுக்குத் தரவானது நான்கு, ஆறு, எட்டு எனும் அளவடியினாலேயே வரும்நிலையது. எ-று.

---

1. நான்கடி தலையளவு, ஆறடி இடையளவு, எட்டடி கடையளவு
2. வியநிலை - சமநிலைக்கு மாறுபட்ட நிலை.
3. அளவடியால்தான் வருதல் என்பதில்லை.

**தாழிசை அளவு**

**446. ஒத்துமூன் றாகும் ஒத்தா ழிசையே**
**தரவிற் சுருங்கித் தோன்று மென்ப. (137)**

## இலக்குவனார்

454 *Oththālisai* occurs in threes being equal.

455. It is said that it will occur within the limit of *tharavu*.

## இளம்பூரணர்

**446. ஒத்துமூன் றாகும்............மென்ப.**

*என்-னின், தாழிசைக்கு அடிவரையறை உணர்த்துதல் நுதலிற்று. இச் சூத்திரம் இறந்தது காத்தது என்று கொள்க.*

(இ-ள்) தாழிசையுந் தம்முள் அளவும்[1] ஒத்து மூன்றாகி வரும். அவை தரவிற் சுருங்கத் தோன்றும் என்றவாறு. (137)

## பேராசிரியர்

**454. ஒத்துமூன்.........ழிசையே.**

*இது, முறையானே ஒத்தாழிசை உணர்த்துகின்றது.*

(இ-ள்) தம்மின் ஒத்த அளவினவாகலும் ஒத்த பொருள வாகலு முடைய தேவபாணிக்கண் மூன்றாக வரும் ஒத்தாழிசை என்றவாறு.

இவை பொருள் ஒக்குமெனவே, முன்னை அகநிலை யொத் தாழிசைக்கண் வரும் இடைநிலைப்பாட்டிற் பொருள் ஒவ்வாது வருதலுஞ் சிறுபான்மை யுண்டெென வறிக; அவை,

> "கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப் படுத்தபிற்
> புல்லென்ற களம்போலப் புலம்புகொண் டமைவாளோ" (கலி.5)

என இடத்தியல் பொருளொழிய இடப்பொருளோடு[2] உவமங் கூறினான்.

> "ஓரிரா வைகலுட் டாமரைப் பொய்கையு
> ணீர்நீத்த மலர்போல நீநீப்பின் வாழ்வாளோ" (கலி.5)

என இடப்பொருளொழிய இடத்தியல் பொருளோடு உவமங் கூறினமையின் வேறுபட்டன[3]. ஒத்துவருவன முன்னர்க் காட்டினாம். (142)

---

1. அளவும் என்றதன் உம்மை பொருளும் ஒத்தல் வேண்டும் என்பதைத் தழுவியது, அளவு என்றது அடியளவை.
2. புல்லென்ற களம் என்றது இடப்பொருள்.
3. பொய்கையில் நீர்நீத்த மலர் என்றது இடத்தியல் பொருள். முன்னர் இடம் கூறிப் பின்னர் இடத்துப் பொருள் கூறியது வேறுபட்டதாம்.

**455. தரவிற் சுருங்கித்..........மென்ப.**

*இஃது, ஐயம் அறுத்தது; அகநிலையொத்தாழிசைகட்குப் போலத் தரவோடொத்து வருங்கொலென் றையுறாமைத் தரவிற் சுருங்கித் தோன்று மென்றமையின்.*

(இ-ள்) மூவகை வண்ணகத்தின் தாழிசையுஞ் சமநிலைத் தரவிற்[1] சுருங்கித் தோன்றும் என்றவாறு.

வாளாதே தரவென்றமையின் இடையளவின்மேற் செல்லும் அடியென்றவழி அளவடிமேற் றாயது 'போல வென்பது'[2] தோன்றும் என்பதனான் இடைநிலையாகிய நான்கடியானும் மூன்றடியானு மன்றி ஐந்தடியா னாகாதென்பது கொள்க. எண்ணொடு தொடர்தலின் இரண் டடியா னாகாதென்பது பெற்றாம்.[3] இடையளவு தரவிற் சுருங்குமெனவே, கடையளவு தரவினுந் தாழிசை சுருங்குமென்பது உய்த்துணரப்படும். இங்ஙனங் கூறாக்கால் ஓரடி முதலாகத் தாழிசை கோடல் வேண்டுமஃ தன்றோவென்பது. 'தோன்றும்' என்றதனாற் கடையளவினை[4] ஒழித்து மற்றைத் தரவு இரண்டளவாகக் கொள்வாமெனக் கொள்க. (143)

## நச்சினார்க்கினியர்

**142. ஒத்துமூன்.......ழிசையே.**

*இது, தாழிசை கூறுகின்றது.*

(இ-ள்) பொருளும் அளவுந் தம்முளொத்து மூன்றாய் வருந் தேவபாணிக்கண் வருந் தாழிசை எ-று.

இவை பொருளொக்குமெனவே அகநிலை யொத்தாழிசைக்கண் வருந் தாழிசை சிறுபான்மை பொருளொவ்வாது வருதல் பெற்றாம்.

(எ-டு)"கல்லெனக் கவின்பெற்ற" (கலி.5)

---

1. சமநிலைத் தரவு - நான்கு, ஆறு, எட்டு எனும் அடிகளால் வருவது.
2. அடிஎனின் அளவடிமேல் செல்வது போல இங்குத் தரவு என்றது இடைப்பட்ட அளவின்மேல் செல்லும். தரவுக்கு மூன்றடி முதல் பன்னிரண்டடியளவு கூறப்பட்டமையின் இடைப்பட்ட அளவடிகள் நான்கும் பதினொன்றும் இடையளவுகள் எனப்படும். அவற்றுள் நான்கு, ஆறு, எட்டு என்பனவே சமநிலை யாதலின் இங்குத் தரவு எனப்பட்டது, அம் மூன்று அடிகள் உள்ளதையே குறிக்கும். தாழிசையானது தரவுக்குச் சுருங்கி வரல்வேண்டும் எனில் எட்டடித் தரவுக்கு ஏழடித் தாழிசையோ ஆறடித் தாழிசையோ ஐந்தடித் தாழிசையோ வரலாமா எனின் கூடாது என்க.
3. சமநிலை என்னும் எண்ணொடு தொடர்ந்து தாழிசை வருதலால் தாழிசை இரண்டடியான் வாராது என்னெனின் சமநிலை நான்கடியுடைமையே சுருக்கம் ஆதலின்.
4. கடையளவு, எட்டடித் தரவு

என்னுந் தாழிசையே இடப்பொருளோடு உவமைகூறி 'ஓரிரா வைகலுள்' (கலி.5) என்னுந் தாழிசையே இடத்தியல் பொருளோடு உவமை கூறியவாறுணர்க. (142)

**143. தரவிற்...........என்ப.**

*இது, முன்னர்வந்த வொத்தாழிசைபோல் தாழிசை தரவோடொத்து வாராவென ஐயமகற்றியது.*

(இ-ள்) எட்டும், ஆறும், நான்கும் என்ற வண்ணத்தின் றாழிசையுஞ் சமநிலைத் தரவிற் சுருங்கித் தோன்றும் எ-று.

வாளாதே 'சுருங்கு' மென்றாரேனும் 'தோன்றும்' மென்றதனால் தரவின் பாதியாகிய நான்கடியு மூன்றடியுமே தனக்குப் பெருமைக்குஞ் சிறுமைக்கு மெல்லை யென்று கொள்க. ஈரடி யிரண்டும் வந்து தொடர்தலின் நான்கடித் தரவின் பாகமாகிய ஈரடித் தாழிசை யாகா தாயிற்று. இங்ஙனங் கூறாக்கால் ஏழடிப் பெருமையாகத் தாழிசை கோடல் வேண்டும்.

இதனாற் கூறிய நான்கடியானு மூன்றடியானுமன்றி ஐந்தடியானு மிரண்டடியானும் வாராதென்ப தாயிற்று. (143)

## சிவலிங்கனார்

**ஒத்து............என்ப.**

(இ-ள்) பொருளானும், அடியளவானும் ஒத்து மூன்றாகி வரும் தாழிசை; அது தரவடியிற் சுருங்கிய அடியாய் வரும் என்பர் எ-று.

**சுரிதகநிலை**

### 447. அடக்கியல் வாரம் தரவோ டொக்கும். (138)

## இலக்குவனார்

456. *Adakkiyal vāram* is equal to *tharavu.* (138)

## இளம்பூரணர்

**447. அடக்கியல் வாரம்......டொக்கும்.**

*என்-னின், சுரிதகம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) அடக்கியலாகிய சுரிதகம்[1] தரவோடொத்த இலக்கணத்த தென்றவாறு. (138)

## பேராசிரியர்

**456. அடக்கியல் ......டொக்கும்.**

*இது, சுரிதக விலக்கணங் கூறுகின்றது.*

(இ-ள்) தரவொடு ஒத்துவரும் அடக்கியல் வாரம் என்றவாறு.

அடக்கியல் வாரமென்பது அடக்கும் இயல்பிற்றாகிய வாரமென்றவாறு. நிறுத்தமுறையானே[2] எண்ணுறுப் புணர்த்தாது மயங்கக் கூறியவதனானே தனிச்சொல் வருஞான்று எண்ணீற்றினுஞ் சுரிதகத்து முன்னும் புணர்க்க. அடக்கியலென்றான், முன்னர்ப் பலவகையாற் புகழப்பட்ட தெய்வத்தினை ஒரு பெயர்கொடுத் தடக்கி நிற்றலின். வாரமென்றான், தெய்வக் கூற்றின் மக்களைப் புகழ்ந்த அடி மிகுமாகலி னென்பது.[3] (144)

## நச்சினார்க்கினியர்

**144. அடக்கியல்.......டொக்கும்.**

*இது, சுரிதகத்தெல்லை கூறுகின்றது.*

(இ-ள்) அடக்கியல்பிற்றாகிய சுரிதகந் தரவோடொக்கும் எ-று.

முன்னர்ப் பல்வகையாற் புகழ்ந்த தெய்வத்தினை ஒரு பெயர் கொடுத்து அடக்கிநிற்றலின் அடக்கியலாயிற்று. தெய்வத்தையன்றி மக்களைப் புகழ்ந்த அடியும் வருதலின் வாரமாயிற்று.[4]

நிறுத்தமுறையானே எண்ணுறுப் புணர்த்தாது மயங்கக் கூறியவதனானே தனிச்சொல் வருங்கால் எண்ணீற்றுப் பின்னுஞ் சுரிதகத்தின் முன்னும் புணர்க்க. (144)

---

1. அடக்கியல் என்பதும் சுரிதகம் என்பதும் ஒன்றே. அதனால் அடக்கியலாகிய வாரம் என்றார் பண்புத்தொகையாக. வாரம் என்பது சுரிதகப் பெயர். பேராசிரியர் அடக்கியல் வாரம் என்பதற்கு அடக்கும் இயல்பிற்றாய வாரம் (சுரிதகம்) என்பர் காண்க.

2. நிறுத்தமுறை - வண்ணகந்தானே, தரவே தாழிசை எண்ணே வாரம்(452 )என்பதிற் காண்க.

3. வாரம் - ஓரம். ஒருபாற் சார்தலை உலகினர் ஓரவஞ்சனை என்பர் அதுபோல மக்களைப் புகழ்ந்த அடிமிகுதலாகிய வாரம் இருத்தலின் சுரிதகம் வாரம் எனப்பட்டது என்பது பேராசிரியர் கருத்துப் போலும்.

4. தெய்வப்பாடலில் மக்களைப் புகழ்ந்த அடியும் வருதலின் சுரிதகம் வாரம் எனப்பட்டது என்பது இவர் கருத்து. வருவது வாரம் என்க. பேராசிரியர் கருத்துக்கு இது மாறுபட்டது காண்க.

## சிவலிங்கனார்

**அடக்கியல்...............ஒக்கும்.**

(இ-ள்) அடக்கியலாகிய சுரிதகம் (வாரம்) தரவோடொத்த இலக்கணத்தது.

"(செய்யுளில்) முன்னர்ப் பலவகையாற் புகழப்பட்ட தெய்வத்தினை ஒரு பெயர் கொடுத்து அடக்கிநிற்றலின் அடக்கியல் என்றான். வாரம் என்றான் தெய்வக்கூற்றின் மக்களைப் புகழ்ந்த அடி மிகுமாதலின் என்பது" - பேராசிரியர்.

வாரம் ஒரு பகுதி - பரிபாட்டில் தெய்வப்புகழ்ச்சியில் ஒரு பகுதி மக்கட் புகழ்ச்சியும் இருத்தலின் வாரம் ஆயிற்று எனினும் ஆம்.

தரவோ டொத்தலாவது அடிவரையறை யொத்தல்.

### எண்

**448. முதற்றொடை பெருகிச் சுருங்குமன் எண்ணே.**

**(139)**

## இலக்குவனார்

457. *Eṇ* will be in the decreasing order having the first in maximum number of lines.

## இளம்பூரணர்

**448. முதற்றொடை...........எண்ணே.**

*என்-னின், எண்ணாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) முதற்றொடுத்த உறுப்புப் பெருகிப் பின்றொடுக்கும் உறுப்புச் சுருங்கிவரும் என்றவாறு.

அதனை இரண்டடியான் வருவன இரண்டும், ஓரடியான் வருவன நான்கும், சிந்தடியான் வருவன எட்டும், குறளடியான் வருவன பதினாறும் எனப் பிறநூலாசிரியர் உரைப்பர். இவ் வாசிரியர்க்கு வரையறையிலவாம்.

(139)

## பேராசிரியர்

**457. முதற்றொடை..............னெண்ணே.**

*இஃது, எண்ணுறுப்பாமா றுணர்த்துகின்றது.*

(இ-ள்) முதல் பெருகியவழி முதலெண் என்றவாறு.

'தொடை' என்றதனால் தலையெண் இரண்டு அளவடியான் ஒரு தொடையாகி வருமெனவும், 'பெருகி' என்றதனான் இரண்டடியான் இரண்டனை நாட்ட அதுவேபற்றி முதல் பெருகிய வென்றதனான் ஒழிந்த எண்ணுத்தொடை பெறுதலும் நேர்ந்தானாம். இதனை 'முதல்' எனவே, வழிமுறை வருவனவும் எண்ணளவென்பது பெற்றாம். அவை இத்துணையென்பது அறியுமாறென்ப தென்னை? 'முதற்றொடை பெருகி' என்றதனான் இரண்டடியான் இரண்டனை நாட்டி அதுவே பற்றிச் 'சுருங்கும்' என்றமையின் ஈரடியிற் சுருங்கி ஓரடியாதலும், ஓரடியிற் சுருங்கி இருசீராதலும், இருசீரிற் சுருங்கி ஒருசீராதலும் கொள்ளப்படும். முதலடி இன்னதென்றிலனாயினும் அளவடியே கொள்ளப்படும்.

"நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே" (344)

என்றானாகலின். ஆகவே இருசீரெனப்பட்டது குறளடி யாயினும் இவை இரண்டு தொடர்ந்தன்றி எதுகையாய் அமையாமையிற் குறளடியென்னா னாயினானென்பது. ஒரு சீர்க்கும் அளவடிப்படுத்துத் தொடை கோட லொக்கும்; என்னை?

"போரவுணர்க் கடந்தோய் நீ
புணர்மருதம் பிளந்தோய் நீ;
நீரகல மளந்தோய் நீ;
நிழறிகழும் படையோய் நீ*" (ப.1177)

எனவும்,

"ஊழிநீ;
உலகுநீ;
உருவுநீ;
அருவுநீ;
ஆழிநீ;
அருளுநீ;
அறமுநீ;
மறமுநீ;" (ப.1177)

எனவும் அளவடிப்படுத்தே தொடைகொள்ப வாகலின்.

அஃதேல், ஒரு சீரினுஞ் சுருங்கப் பெறாதோவெனின், கந்தருவ நூலின்கண்ணும்' ஒருசீர் சுருங்கின வாராவாகலின் இவனும்,

"பிறநூன் முடிந்தது தானுடம் படுதல்" (665)

---

இதனை இரண்டடியாக அதாவது அளவடியாகக் கொள்ளின் போர, நீர என எதுகைத்தொடை யமைவது காண்க.

கந்தருவ நூல் என்றது இசைநூலை

என்னும் உத்திவகையான் ஒருசீரிற் சுருங்குதல் நேரானென்பது. மற்று வழிமுறையாற் பாகஞ்[1] சுருங்குதல் பெறுமாறென்னை யெனின்,

"வகார மிசையு மகாரங் குறுகும்" (தொல்.எழுத்து.330)

என்றாற்போல மேலைக்கொண்டும் வருகின்றவாற்றாற் பாகமே சுருங்குதல் பெறலாமென்பது.[2] மன்னென்பது, ஆக்கத்தின்கண்ணும் வந்ததாகலிற் சுருங்கிப் பலவாமென்பது கொள்க. எனவே, இரண்டடி யிரண்டும், ஓரடி நான்கும், இருசீரெட்டும், ஒருசீர் பதினாறுமாகி எண் பல்கு மென்பது. இருசீர் குறளடியுமாகலின் ஒருசீரான் வருவன சிற்றெண்ணெனவே படும்; ஆகவே, ஒழிந்த எண் மூன்றும் தலையெண்ணும் இடையெண்ணும் கடையெண்ணுமென மூன்றுங் கூடியே எண்ணென்றற் குரியவாயின. இதுநோக்கிப் போலும் எண்ணென்று அடக்காது,

"சின்ன[3] மல்லாக் காலை" (458)

என ஒரு சீரின் வேறுபடுத்து மேற்கூறுகின்றதென்பது.

இனி, அளவடியினை நாட்டியே முதற்றொடை பெருகிச் சுருங்கு மென்றமையின் அளவடியிற் சுருங்கின இருசீரும் ஒரோவழிச் சின்ன மெனப்படும். இனி, அல்லாதார் ஈரடி யிரண்டினைப் பேரெண்ணெனவும், ஓரடி நான்கினைச் சிற்றெண்ணெனவும், கடை யெண்ணினை இடை யெண்ணெனவும், ஒரு சீரான் வருவனவற்றை அளவெண் ணெனவுஞ் சொல்லுப. அளவடியாக நோக்கிப் பேரெண் சிற்றெண் ணென்றலும், சின்னம்பட்டவழி இடைநின்றது இடையெண்ணாதலும், எல்லை யளவைத்தாகிய சின்னம் அளவெண்ணாதலும் அமையும். அவற்றுள் இருசீரினை முச்சீராகவும், ஒருசீரினை இருசீராகவும் அலகுவைப்பினும் அதனை,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி" (323)

என்பதனான் மறுக்க. இதற்குச் செய்யுண் முன்னர்க் காட்டுதும். (145)

## நச்சினார்க்கினியர்

**145. முதற்றொடை..........எண்ணே.**

*இஃது, எண்ணுறுப்பாமா றுணர்த்துகின்றது.*

---

1. பாகம் - பாதி

2. வகார மிசையும் மகாரம் குறுகும் என்றது மகரக்குறுக்கம் கூறுவது. மகரம் குறுகுதல் என்றால் மகரத்துக்குரிய அரை மாத்திரையில் அதன் பாதியாகிய கால் மாத்திரையாகக் குறுகும் என்பதாம். எனவே ஆசிரியர் குறுகுதல் - சுருங்குதல் என்பனவற்றை முன் உள்ளதிற் பாகமாக (பாதியாக)ச் சுருங்குதல் என்ற பொருளிலேயே ஆண்டுள்ளமையின் இங்கும் ஒன்றிற் பாதி பாதியிற் பாதி என்றே கொள்ளுதல் வேண்டும்.

3. ஒருசீரடி சின்னம் எனப்படும்.

(இ-ள்) எண்ணாவது முற்படப் பெருகிய வழிமுறையாற் சுருங்கி வரப்பெறும் எ-று.

'தொடை' யென்றதனான் ஒழிந்த எண்களுந் தொடைபெறுதலும் நோக்காராயிற்று.

முற்பட வெனவே பிற்படச் சில வருமென்பது பெற்றாம்.

பெருகியென்றதனான் ஈரடியா னிரண்டை நாட்ட வழிமுறை சுருங்கி வருமெனவே ஈரடியிற் சுருங்கி யோரடியாயும், ஓரடியிற் சுருங்கி யிருசீராயும், இருசீரிற் சுருங்கி யொருசீராயும் ஒன்றற்கொன்று பாகமே சுருங்குதல் கொள்க.

'நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே' (செய்.32)

என்றலின் அளவடியே கொள்க. இருசீரான் வருவன இரண்டிணைந்து அளவடியாதற் கேற்பத் தொடைகொண்டு சுவடுபட நிற்றலானும் ஒரு சீரான் வருவனவும் நான்கிணைந்து அளவடியாதற் கேற்பத் தொடை கொண்டு சுவடுபட நிற்றலானும் அவையும் அளவடிக்கண் அடங்கிற்று.

'மன்' ஆக்கமாதலிற் சுருங்கியும் பலவாதல் கொள்க. ஈரடியும் ஓரடியும் இருசீரும் ஒருசீருமாய்ச் சுருங்கி வாராநிற்கவும் இரண்டிற்கு நான்கும், நான்கிற்கு எட்டும், எட்டிற்குப் பதினாறுமாய் ஒன்றற்கொன்று உறுப்புவகையான் இரட்டிக்குமெனக் கொள்க. இருசீர் வருவன குறளடி யெனப்படுதலின் மேற்சின்னமென்பன அடியினடங்கா வொருசீரே யாயிற்று.

ஆகவே, இதனையொழிந்த எண் மூன்றும் நான்குமாய்த் தலை யெண், இடையெண், கடையெண் எனவும் படுதல் நோக்கி மேல் எண்ணுஞ்[1] 'சின்னமும்' எனப் பிரித்தோதுப.

இனி, அளவடியிற் சுருங்குமென்றலின் இவ் வளவடியிற் சுருங்கிய இருசீரையும் ஒருவழிச் சின்னமெனவும் படும். இனி ஈரடி யிரண்டினைப் பேரெண்ணெனவும், ஓரடி யதனிற் குறைதலிற் சிற்றெண்ணெனவும், இவற்றிற்கும், பின்வருஞ் சின்னத்திற்கும் இடையே நிற்றலின் இருசீரை இரண்டிடை யெண்ணெனவும், முடிவிற்கு அளவாய் நிற்குஞ் சின்னத்தினை அளவெண்ணெனவும் பெயர் கூறினுமமையும். இருசீரினை முச்சீராக்கியும், ஒருசீரினை யிருசீராக்கியும், அலகு வைப்பின் அதற்கசையுஞ் சீரும் இசையொடு சேராமை யுணர்க. (145)

## சிவலிங்கனார்

**முதற்றொடை...........எண்ணே.**

---

1. எண் என்றது ஒருசீரடி யல்லா மற்றைச் சீரடி

(இ-ள்) எண்ணுறுப்பானது முன்னர்த் தொடுக்கப்பட்ட உறுப்புப் பெருகிவரப் பிற்பிற் றொடுக்கப்படும் உறுப்புகள் குறைந்து வரும், எ-று.

இரண்டடியான் வருவன இரண்டும், ஓரடியான் வருவன நான்கும், சிந்தடியான் வருவன எட்டும், குறளடியான் வருவன பதினாறும் ஆகச் சுருங்கிவரும் எண் என்பது பிற்காலத்தார் வரையறை. ஆசிரியர் கூறாமையின் வேண்டியவாறு அவர்காலத்து வரப்பெறும் போலும்.

**எண்-புறனடை**

**449. எண்ணிடை ஒழிதல் ஏதம் இன்றே**
**சின்னம் அல்லாக் காலை யான. (140)**

## இலக்குவனார்

458. There is no harm is not having *eṇ* in the middle when *sinnam* is there.

## இளம்பூரணர்

**449. எண்ணிடை..........யான.**

*என்-னின், மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட எண் ஒரோவொன்று இடை யொழிந்து வருதல் குற்றமாகாது தனிச்சொல் இல்லாதவழியென்றவாறு.

எனவே, சொல்லப்பட்ட உறுப்புகள் தனிச்சொல் வருவழி இடையொழியாமல் வருதல் வேண்டுமென்றவாறு. தனிச்சொல் உளப்பட ஐந்துறுப்புடைத்தாயிற்று.

இனித் தனிச்சொல்லின்றி எண்ணிடையிட்டவழி ஒருபோகெனப் பெயர்பெறும்.

(உ-ம்)"கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் தொழுதேத்தக்
கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளைய
அழல்வளை சுழல்செங்கண் அரிமாவாய் மலைந்தானைத்
தாரொடு முடிபிதிரத் தமனியப் பொடிபொங்க
வார்புன லிழிகுருதி அகலிடம் உடனனைப்பக்
கூருகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்;

இது தரவு.

முரசதிர வியன்மதுரை முழுவதூஉந் தலைபனிப்பப்
புரைதொடித் திரள்திண்டோட் போர்மலைந்த மறமன்னர்

அடியொடு முடியிறுப்புண் டயர்ந்தவர் நிலம்சேரப்
பொடியெழ வெங்களத்துப் புடைத்ததுநின் புகழாமோ;

கலியொலி வியனுலகங் கலந்துடன் நனிநடுங்க
வலியியல் அவிராழி மாறெதிர்ந்த மருட்சோர்வு
மாணாதா ருடம்போடு மறம்பிதிர எதிர்கலங்கச்
சேணுயர் இருவிசும்பிற் செகுத்ததுநின் சினமாமோ;

படுமணி இனநிரை பரந்துடன் இரிந்தோடக்
கடுமுரண் எதிர்மலைந்த காரொலி எழிலேறு
வெரிநொடு மருப்படர வீழ்ந்துதிறம் வேறாக
எருமலி பெருந்தொழுவில் இறுத்ததுநின் இகலாமோ;

இவை மூன்றுந் தாழிசை.

இலங்கொளி மரகதம் எழின்மிகு வியன்கடல்
வலம்புரித் தடக்கையோய் மானு நின்னிறம்;

விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொன்னும்
பொருகளி றட்டோய் புரையும் நின்னுடை;

இவை பேரெண்.

கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை;
தண்சுடர் உறுபகை தணித்த ஆழியை;

ஒலியியல் உவணம் ஓங்கிய கொடியினை;
வலிமிகு சகட மாற்றிய அடியினை;

இவை அளவெண்.

போரவுணர்க் கடந்தோய் நீஇ;
புணர்மருதம் பிளந்தோய் நீஇ;
நீரகலம் அளந்தோய் நீஇ;
நிழல்திகழ்ஐம் படையோய் நீஇ;

இவை இடையெண்.

ஊழிநீஇ;
உலகுநீஇ;
உருவுநீஇ;
அருவுநீஇ;
ஆழிநீஇ;
அருளும்நீஇ;
அறமும்நீஇ;
மறமும்நீஇ;

இவை சிற்றெண்.

எனவாங்கு,

தனிச்சொல்.

அடுதிறல் ஒருவனிற் பரவுதும் எங்கோன்
தொடுகழற் கொடும்பூட் பகட்டெழின் மார்பிற்
கயலொடு கிடந்த சிலையுடைக் கொடுவரிப்
புயலுறழ் தடக்கைச் செவ்வேல் அச்சுதன்
தொன்று முதிர்கடல் உலகம் முழுதுடன்
ஒன்றுபு திகிரி உருட்டுவோ னெனவே."

இது ஆறடிச் சுரிதகம்.

இவ்வாறு வருவதனை ஒருசாராசிரியர் அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பாவெனக் கூறுப. (140)

## பேராசிரியர்

**458. எண்ணிடை........யான.**

*இது, மேலதற்கோர் புறனடை..*

(இ-ள்) முற்கூறிய எண்களின்றி வருதல் செய்யுட்கு ஏதமின்று, சின்னவெண்ணொன்று மொழிந்து நில்லாவிடத்து என்றவாறு.

எனவே, சின்னவெண் ணொழியாது மூவகையெண்ணும் ஒழிதலும் சின்னவெண்ணொழிய மூவகையெண்ணும் பெறுதல் பெரிதும் சுவைமையுடைத் தென்றவாறாயிற்று. இதனானே 'எண்ணொழிதல்' என்னாது, 'இடை' யென்றதனால் தலையெண்ணும் இடையெண்ணு மல்லன எட்டு நான்காகியும், பதினாறு எட்டாகியும் குறைந்து வருமென்பதுங் கொள்க. மூவகை யெண்ணுஞ் சின்னமும் பெற்றுவருதல் சிறப்புடைமை ஏதமின்று என்றதனாற் பெறுதும். அவை வருமாறு:

"மணிவிளங்கு திருமார்பின் மாமலராள் வீற்றிருப்பப்
பணிதயங்கு நேமியும் பானிறத்த சுரிசங்கு
மிருசுடர்போ லிருகரத்தி லேந்தியமர் மாயோனும்
பங்கயத்தி லுறைவோனும் பாகத்தோர் பசுங்கொடிசேர்
செந்தழற்கண் ணுதலோனுந் தேருங்கா னீயென்பார்க்
கவரவர்த முள்ளத்து ளவ்வுருவா யல்லாத
பிறவுருவு நீயென்னிற் பிறவுருவு நீயேயா
யளப்பரிய நான்மறையா னுணர்த்துதற் கரியோனே;

எட்டடித் தரவு.

எவ்வுயிர்க்கு முயிரேயா யியங்குதனின் றொழிலாகி
யவ்வுயிர்க்க ணடங்கியே யருளாது நிற்றலினால்
வெவ்வினைசெய் தவையிழந்து வெம்பிறவிக் கடலழுந்த
வவ்வினையே யகற்றாம னிற்பதுநின் னருளன்றே;

பல்லுயிரும் படைப்பதுநின் பண்பன்றே பகலினால்
வல்வினையின் வலைப்பட்டு வருத்தங்கூ ருயிர்தம்மை
நல்வினையே பயில்வித்து நடுக்கஞ்செய் பவைநீக்கி
யல்லல்வா யழுந்தாம லகற்றுவது மருளன்றே;

அழிப்பதுநின் றொழிலன்றே யறைந்தாலு முயிரெல்லா
மொழிந்தவற்றுள் ளுணர்வுகளை யொருவாம லுடனிருத்திப்
பழிப்பின்றிப் பலகாலு மிப்பரிசே பயிற்றுதலி
னழிப்பதுவு மில்லையா லாங்கதுவு மருளன்றே;

நான்கடித் தாழிசை.

வேள்வி யாற்றி விதிவழி யொழுகிய
தாழ்வி லந்தணர் தம்வினை யாயினை;

வினையி னீங்கி விழுத்தவஞ் செய்யு
முனைவர் தமக்கு முத்தி யாயினை;

ஈரடி யிரண்டு.

இலனென விகழ்ந்தோர்க் கிலையு மாயினை;
உளனென வுணர்ந்தோர்க் குளையு மாயினை;
யருவுரு வென்போர்க் கவையு மாயினை;
பொருவற விளங்கிய போத மாயினை;

ஓரடி நான்கு.

பானிற வண்ணனீ;
பனிமதிக் கடவுணீ
நீனிற வுருவுநீ;
நிறமிகு கனலிநீ;
அறுமுக வொருவனீ;
ஆனிழற் கடவுணீ;
பெறுதிரு வுருவுநீ;
பெட்பன வுருவுநீ;'

இருசீ ரெட்டு.

மண்ணுநீ;
விண்ணுநீ;

மலையுநீ;
கடலுநீ;
எண்ணுநீ;
எழுத்துநீ;
இரவுநீ;
பகலுநீ;
பண்ணுநீ;
பாவுநீ;
பாட்டுநீ;
தொடருநீ;
அண்ணனீ;
அமலனீ;
அருளுநீ;
பொருளுநீ."

ஒருசீர் பதினாறு.

ஆங்க,

தனிச்சொல்.

இனியை யாகிய விறைவநின் னடியிணை
சென்னியின் வாங்கிப் பன்னாள் பரவுது
மலர்தலை யுலகின் மன்னுயிர்க் கெல்லா
நிலவிய பிறவியை நீத்தல் வேண்டி
முற்றிய பற்றொடு செற்ற நீக்கி
முனிமை யாக்கிய மூவா முத்தியை
மயலற வளித்தநின் மலரடி
யரிய வென்னா யுரிதினிற் பெறவே."

சுரிதகம்.

இஃது எட்டடித் தரவும், தரவின் பாகம்பற்றிய நான்கடித் தாழிசை மூன்றும், ஈரடி யிரண்டும், ஓரடி நான்கும், இருசீரெட்டும், ஒருசீர் பதினாறுமாகிய நால்வகையெண்ணும், தனிச்சொல்லும், எட்டடிச் சுரிதகமும் பெற்ற தலையளவு வண்ணகப் பெருந்தேவபாணி.

"பலியுருவிற் கேலாத படைமழுவாள் வலனேந்திப்
புலியுரிமேற் பைந்தலைதாழ் பூங்கச்சை விரித்தமைத்துச்
கண்கவருந் திருமேனி வெண்ணூலின் கவின்பகைப்பத்
தண்கமழ்பூந் தாரிதழி தலைமலைந்து பிறைதயங்க
மொழிவலத்தான் மயங்காதே முறுவலாற் றோலாதே
விழிவலத்தா னுருவழிந்தோன் வேடங்கண் டுணர்வழியக்
கலிகெழு கடற்கச்சிக் கமழிளந் தேமாவி
னொலிதளிரு முலைச்சுவடு முடன்சிறப்ப வுலவுங்கால்;

எட்டடித் தரவு.

நீறேறுந் திருமேனி நெடும்பகலே நிலவெறிப்ப
வேறேறிக் கடைதோறு மிடுபலிக்கு வருதிரால்
ஏறேறி யிடுபலிக்கு வரும்பொழுது மிடைபிரியாக்
கூறேறும் பசும்பாகங் கொள்ளுமோ கொள்ளாதோ;

நாணாக மடந்தையர்பாற் பலிக்கென்று நடந்தக்காற்
பூணாகந் தழீஇக்கொளினும் பொங்காது போலுமாற்
பூணாகந் தழீஇக்கொளினும் புகையுயிர்த்துப் பொங்காத
கோணாகம் யாந்தருபால் குடிக்குமோ குடியாதோ;

பல்லேற்ற பரிகலத்துப் பலியேற்றன் மேலிட்டு
வல்லேற்ற முலைமகளிர் மனமேற்ப வருதிரால்
வல்லேற்ற முலைமகளிர் மனமறுக நீர்வருங்காற்
கொல்லேற்றுக் கறுகிடினுங் கொள்ளுமோ கொள்ளாதோ;

நான்கடித் தாழிசை.

எரிகல னிமைக்கு மிடவயிற் றொடிக்கை
பரிகல மேந்தும் பரிசிறந் ததுகொல்;

உமையவள் விலக்கவு மொலிகட னஞ்ச
மிமையவர் தம்மை யிரந்துகொண் டதுகொல்;

ஈரடி இரண்டு.

இடையெழு பொழில்கட்கு மிமைப்பளவிற் கொல்லேறே;
கடைதொறு மதுநிற்பக் கற்பித்த வாறெவன்கொல்;
இரப்புநீர் வேட்டதுகேட் டிமையவரென் பட்டனரே;
பரப்புநீர்க் கங்கையோர் படர்சடையிற் கரந்ததோ.;

ஓரடி நான்கு.

பூண்டன வென்பு;
புனைவது தும்பை;
ஆண்டன பூதம்;
அறைவன வேதம்;
இசைப்பன பல்பேய்;
எழீஇயது வீணை;
அசைப்பன வேணி;
அதிர்வன பொற்கழல்;

இருசீரெட்டு.

எனவாங்கு,

தனிச்சொல்.

எல்வளை மகளி ரிடுபலி நசைஇப்
பல்கடை திரிதரூஉஞ் செல்வநிற் பரவுதுங்

கொடியணி யேனம் பொடியணிந்து கிடப்ப
வடதிசை வாகை சூடித் தென்றிசை
வென்றீ வாய்த்த வன்றாள் வளவ
னிமிழிசை வேங்கடம் போலத் தமிழகத்து
நாவலொடு பெயரிய ஞாலங்
காவல் போற்றி வாழிய நெடிதே"

சுரிதகம்.

இஃது எட்டடித் தரவும், தரவிற் சுருங்கிய வொத்தாழிசை மூன்றும், சின்னமல்லா மூவகை என்னும் தனிச்சொல்லும், தரவோடொத்த[1] அடக்கியல் வாரமும் பெற்றுவந்தது.

"ஆயிரங் கதிராழி யொருபுறந்தோன் றகலத்தான்
மாயிருந் திசைசூழ வருகின்ற வரவுணர்த்த
மனக்கமல மலரினையு மலர்த்துவான் றானாத
லினக்கமல முணர்த்துவன்போன் றெவ்வாயும் வாய்திறப்பக்
குடதிசையின் மறைவதூஉ மறையென்று கொள்ளாமைக்
கடவுளர்த முறங்காத கண்மலரே சுரிபோக
வாரிருளும் புலப்படுப்பா னவனேயென் றுலகறியப்
பாரகலத் திருள்பருகும் பருதியஞ் செல்வகேள்.

தரவு.

மண்டலத்தி னிடைநின்றும் வாங்குவார் வைப்பாராய்
விண்டலத்திற் கடவுளரை வெவ்வேறு வழிபடுவா
ராங்குலக முழுதுபோர்த் திருவுருவி னொன்றாக்கி
யாங்கவரை வேறுவே றளித்தியென் றறியாரால்;

மின்னுருவத் தாரகைநீ வெளிப்பட்ட விடியல்வாய்
நின்னுருவத் தொடுங்குதலா னெடுவிசும்பிற் காணாதா
ரெம்மீனுங் காலைவா யிடைகரந்து மாலைவா
யம்மீனை வெளிப்படுப்பாய் நீயேயென் றறியாரால்;

தவாமதியந் தொறுநிறைந்த தண்கலைக டலைத்தேய்ந்
துவாமதிய நின்னொடுவந் தொன்றாகு மென்றுணரார்
தண்மதியி னின்னொளிபுக் கிருளகற்றாத் தவற்றாற்கொ
லம்மதியம் படைத்தாயு நீயேயென் றறியார்ரால்;

தாழிசை.

நீராகி நிலம்படைத்தனை;
நெருப்பாகி நீர்பயந்தனை;
ஊழியிற் காற்றெழுவினை;
ஒளிகாட்டி வெளிகாட்டினை;

இருசீர் நான்கு.

---

1. தரவொடு ஒத்தலாவது அடியெண் ஒத்தல்

கருவாயினை;
விடராயினை;
கதியாயினை;
விதியாயினை;
வருவாயினை;
அருவாயினை;
ஒன்றாயினை;
பலவாயினை;
ஒருசீ ரெட்டு.

எனவாங்கு,

தனிச்சொல்.

விரிதிரைப் பெருங்கட லமிழ்தத் தன்ன
வொருமுதற் கடவுணிற் பரவுதுந் திருவொடு
சுற்றந் தழீஇக் குற்ற நீக்கித்
துன்பந் தொடரா வின்ப மெய்திக்
கூற்றுத்தலை பனிக்கு மாற்றல் சான்று
கழிபெருஞ் சிறப்பின் வழிவழி பெருகி
நன்றறி புலவர் நாப்பண்
வென்றியொடு விளங்கி மிகுகம்யா மெனவே."

சுரிதகம்.

என்பது, எட்டடித் தரவும், தாழிசையும், இருவகைச் சின்னமும்,[1] தனிச்சொல்லும், தரவோடொத்த சுரிதகமும் பெற்றுவந்த தலையளவு வண்ணகப் பெருந்தேவபாணி.

சின்னமெனவே, இருசீ ரெட்டும், ஒருசீர் பதினாறும் அடங்கு மென்றாராகலின், இது[2] சின்னமல்லாக்கால் எண்ணிடையிட்டு வந்த வண்ணக வொத்தாழிசை யாயிற்று.

இனி, இருசீருமன்றி ஒருசீர் பதினாறாகிய சின்னவெண் பெற்றும் வரும். அது வருமாறு:

"உறைபதியி னுடனயனை யுந்தியாற் படைத்தோயு
மறைகடல்சூழ் நிலமுதலா யனைத்துலகும் புரப்போயுந்
திருநிறமே கரிபோகத் திருமேகம் பயந்தோயு
மொருநிறமே நிறமாக வொள்ளொரியை யுயிர்த்தோயு
மறுவத்து மார்பென்ன மலர்மகளை வைத்தோயு
நிறத்தோடு நெஞ்சத்த நிலமடந்தை கணவனுநீ;

தரவு.

பின்னமா யொன்றாகும் பெருமாயை யியற்றுவா
யின்னமா யந்தெளிய வெமக்கருளி யிமையவர்க்கு
மன்னமாய் முன்னொருகா லறம்பயந்த வரனுநீ;

---

1. இருவகைச் சின்னம் இருசீர் நான்கு, ஒருசீர் எட்டு

2. இது - இருசீரெட்டு, இது சின்னம் எனப்படாதாயின் பேரெண் இடையிட்டு வந்ததாகக் கொள்க.

குறியாதும் பிழையாத குறிமறைய மதன்மயக்கி
வெறியாதி மலரோற்கு வெளிப்படுத்து வேறுபடுத்
தறியாத மறையெமக்கு மறிவித்த வறிவனீ;

மாணாத மதிகொடுத்து வானவரை மயக்கியுங்
கோணாத மதிவாங்கிக் கொடுத்தருளி யடியவர்க்குக்
காணாத மதிகாட்டுங் கருணைகூர் காட்சியைநீ;

தாழிசை.

வானுநீ;
நிலனுநீ;
மதியுநீ;
விதியுநீ;
தேனுநீ;
அமிழ்துநீ;
திருவுநீ;
அருவுநீ;
அன்புநீ;
அருளுநீ;
ஆதிநீ;
அந்தநீ;
இன்பநீ;
துன்பநீ;
இன்மைநீ;
உண்மைநீ;

ஒருசீர்ச் சின்னம்.

எனவாங்கு,

தனிச்சொல்.

நால்வகை யுருவிற் பால்வே றாகிய
கால முதல்வநிற் பரவுது ஞாலத்து
நல்லவை யல்லவை யெல்லா நினாஅது
செல்வ நோக்கி னெய்தி(ய) வல்லிதிற்
றுயரொடு தொல்வினை நீங்கப்
பெயராச் சுற்றம் பெறுகம்யா மெனவே."

சுரிதகம்.

என வரும்.

இதனுள், தரவுந் தாழிசையும் ஒருசீர்ச் சின்னமும் தனிச்சொல்லும் சுரிதகமும் வந்தவாறு கண்டுகொள்க.

"கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் றொழுதேத்தக்
கடல்கெழு கனைசடரிற் கலந்தொளிரும் வாலுளைய
வழல்வளை கழல்செங்கண் ணரிமாவாய் மலைந்தானைத்
தாரொடு முடிபிதிரத் தமனியப் பொடிபொங்க
வார்புன லிழிகுருதி யகலிட முடனனைப்பக்
கூருகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்;

தரவு.

முரசதிர வியன்மதுரை முழுவதூஉந் தலைபனிப்பப்
புரைதாடித் திரடிண்டோட் போர்மலைந்த மறமல்ல
ரடியொடு முடியிறப்புண் டயர்ந்தவ ணிலஞ்சேரப்
பொடியெழ வெங்களத்துப் புடைத்ததுநின் புகழாமோ;

கலியொலி வியனுலகங் கலந்துட னனிநடுங்க
வலியிய லவிராழி மாறெதிர்ந்த மருட்சோ
மாணாதா ருடம்போடு மறம்பிதிர வெதிர்கலக்கச்
சேணுய ரிருவிசும்பிற் செகுத்ததுநின் சினமாமோ;

படுமணி யினநிரைகள் பரந்துட னிரிந்தோடக்
கடுமுர ணெதிர்மலைந்த காரொலி யெழிலேறு
வெரிநொடு மருப்படர வீழ்த்துநிறம் வேறாக
வெருமலி பெருந்தொழுவி னிறுத்ததுநின் னிகலாமோ;

தாழிசை.

இலங்கொளி மரகத மெழின்மிகு வியன்கடல்
வலம்புரித் தடக்கை மாஅ னின்னிறம்;
விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொனும்
பொருகளி றட்டோய் புரையு நின்னுடை;

ஈரடி யிரண்டு.

கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை;
தண்சுட ருறுபகை தவிர்த்த வாழியை;
ஒலியிய லுவண மோங்கிய கொடியினை;
வலிமிகு சகட மாற்றிய வடியினை;

ஓரடி நான்கு.

போரவுணர்க் கடந்தோய்நீ;
புணர்மருதம் பிளந்தோய்நீ;
நீரகல மளந்தோய்நீ;
நிழறிகழும் படையோய்நீ;"

இருசீர் நான்கு.

ஊழிநீ;
உலகுநீ;
உருவுநீ;
அருவுநீ;
ஆழிநீ;
அருளுநீ;
அறமுநீ;
மறமுநீ;

ஒருசீ ரெட்டு.

எனவாங்கு,

தனிச்சொல்.

அடுதிற லொருவனிற் பரவுது மெங்கோன்
றொடுகழற் கொடும்பூட் பகட்டெழின் மார்பிற்
கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்
புயலுறழ் தடக்கைச் செவ்வே லச்சுதன்
றொன்றுமுதிர் கடலுலக முழுதுட
னொன்றுபுரி திகிரி யுருட்டுவோ னெனவே."

சுரிதகம்.

(விளக்கத்தனார் பாடல்)

இது நால்வகை எண்ணினுள் இறுதிநின்ற எண் ணிரண்டுஞ் சுருங்கி வந்தது.[1] பிறவும் அன்ன. (146)

நச்சினார்க்கினியர்

146. எண்ணிடை யொழித..........யான.

*இது, மேலதற்கோர் புறனடை...*

(இ-ள்) முற்கூறிய எண்களின்றி வருதல் செய்யுட்கு ஏதமின்று, சின்னவெண் ணொன்று நில்லாதவிடத்து எ-று.

எனவே, சின்னவெண் ணொழியாது மூவகையெண்ணும் ஒழிதலும், சின்னவெண் ணொழியுமிடத்து மூவகையெண்ணும் ஒழியாது வருதலுஞ் சுவையுடைத்தாயிற்று.

'இன்றே'யென்றதனாற் றலையெண்ணு மிடையெண்ணுமல்லன எட்டு நான்காகியும், பதினாறு எட்டாகியுங் குறைந்து வருதலுங் கொள்க. மூவகையெண்ணுஞ் சின்னமும் பெற்றுவருதல் சிறப்புடைமை 'ஏத'மின் றென்பதனாற் பெறுதும்.

1. இருசீர் எட்டு நான்காகவும், ஒருசீர் பதினாறு எட்டாகவும் சுருங்கின.

"மணிவிளங்கு திருமார்பின் மாமலராள் வீற்றிருப்பப்
பணிதயங்கு நேமியும் பானிறத்த சுரிசங்கு
மிருசுடர்போ லிருகரத்தி லேந்தியமர் மாயோனும்
பங்கயத்தி லுறைவோனும் பாகத்தோர் பசுங்கொடிசேர்
செந்தழற்கண் ணுதலோனுந் தேருங்கா னீயென்பார்க்
கவரவர்த முள்ளத்து ளவ்வுருவா யல்லாத
பிறவுருவு நீயென்னிற் பிறவுருவு நீயேயா
யளப்பரிய நான்மறையா லுணர்த்துதற் கரியோனே;

எவ்வுயிர்க்கு முயிரேயா யியங்குதனின் றொழிலாகி
யவ்வுயிர்க்க ணடங்கியே யருளாது நிற்றலினால்
வெவ்வினைசெய் தவையுழந்து வெம்பிறவிக் கடலழுந்த
வவ்வினையை யகற்றாம னிற்பதுநின் னருளன்றே;

பல்லுயிரும் படைப்பதுநின் பண்பென்றே பகலினால்
வல்வினையின் வலைப்பட்டு வருத்தங்கூ ருயிர்தம்மை
நல்வினையே பயில்வித்து நடுக்கஞ்செய் பகைநீக்கி
யல்லல்வா யழுந்தாம லகற்றுவது மருளன்றே;

அழிப்பதுநின் றொழிலென்றே யறைந்தாலு முயிரெல்லா
மொழித்தவற்று ளுணர்வுகளை யொருவாம லுடனிறுத்திப்
பழிப்பின்றிப் பல்காலு மிப்பரிசே பயிற்றுதலி
னழிப்பதுவு மில்லையா லாங்கதுவு மருளன்றே;

வேள்வி யாற்றி விதிவழி யொழுகிய
தாழ்வி லந்தணர் தம்வினை யாயினை;

வினையி னீங்கி விழுத்தவஞ் செய்யு
முனைவர் தமக்கு முத்தி யாயினை;

இலனென விகழ்ந்தோர்க் குளையு மாயினை;
உளனென வுணர்ந்தோர்க் குளையு மாயினை;
அருவுரு வென்போர்க் கவையு மாயினை;
பொருவற விளங்கிப் போத மாயினை;

பானிற வண்ணனீ;
பனிமதிக் கடவுணீ;
நீனிற வுருவுநீ;
நிறமிகு கனலிநீ;
அறுமுக வொருவனீ;
ஆனிழற் கடவுணீ;
பெறுதிரு வுருவுநீ;
பெட்பன பிறவுநீ;

மண்ணுநீ;
விண்ணுநீ;
மலையுநீ;
கடலுநீ;
எண்ணுநீ;
எழுத்துநீ;
இரவுநீ;
பகலுநீ;
பண்ணுநீ;
பாவுநீ;
பாட்டுநீ;
தொடருநீ;
அண்ணனீ;
அமலனீ;
அருளுநீ;
பொருளுநீ;

ஆங்க,

இனையை யாகிய விறைவநின் னடியிணை
சென்னியின் வாங்கிப் பன்னாள் பரவுதும்
மலர்தலை யுலகின் மன்னுயிர்க் கெல்லா
நிலவிய பிறவியை நீத்தல் வேண்டி
முற்றிய பற்றொடு செற்ற நீக்கி
முனிமை யாக்கிய மூவா முத்தியை
மயலற வளித்தநின் மலரடி
யரிய வன்றா லுரிதினிற் பெறவே."

இஃது எட்டடித் தரவும், தரவின் பாகம்பற்றிய நான்கடித் தாழிசை மூன்றும், ஈரடி யிரண்டும், ஓரடி நான்கும், இருசீ ரெட்டும், ஒருசீர் பதினாறுமாகிய நால்வகையெண்ணுந் தனிச்சொல்லும், எட்டடிச் சுரிதகமும் பெற்ற தலையளவு வண்ணகப் பெருந்தேவபாணி.

"பலியுருவிற் கேலாத படைமழுவாள் வலனேந்திப்
புலியுரிமேற் பைந்தலைதாழ் பூங்கச்சை விரித்தமைத்துக்
கண்கவருந் திருமேனி வெண்ணூலின் கவின்பகைப்பத்
தண்கமழ்பூந் தாரிதழி தலைமலிந்து பிறைதயங்க
மொழிவலத்தான் மயங்காதே முறுவலாற் றோலாதே
விழிவலத்தா னுருவழித்தோன் வேடங்கண் டுணர்வழியாக்
கலிகெழு கடற்கச்சிக் கமழிளந் தேமாவி
னொலிதளிரு முலைச்சுவடு முடன்சிறப்ப வுலவுங்கால்

நீறேறுந் திருமேனி நெடும்பகலே நிலவெறிக்க
வேறேறிக் கடைதோறு மிடுபலிக்கு வருதிரா
லேறேறி யிடுபலிக்கு வரும்பொழுது மிடைபிரியாக்
கூறேறும் பசும்பாகங் கொள்ளுமோ கொள்ளாதோ;

பல்லேற்ற பரிகலத்துப் பலியேற்றன் மேலிட்டு
வல்லேற்ற முலைமகளிர் மனமேற்ப வருதிரால்
வல்லேற்ற முலைமகளிர் மனமேற்ப நீர்வருங்காற்
கொல்லேற்றுக் கறுகிடலுங் கொள்ளுமோ கொள்ளாதோ;

நாணாக மடந்தையர்பாற் பலிக்கென்று நடந்தக்காற்
பூணாகந் தழீஇக்கொளினும் பொங்காது போலுமாற்
பூணாகந் தழீஇக்கொளினும் புகையுயிர்த்துப் பொங்காத
கோணாகம் யாந்தருபால் குடிக்குமோ குடியாதோ;

எரிகல னிமைக்கு மிடவயிற் றொடிக்கைப்
பரிகல னேந்தும் பரிசிறந் ததுகொல்;

உமையவள் விலக்கவு மொலிகட னஞ்ச
மிமையவர் தம்மை யிரந்துண் டதுகொல்;

இடையேழு பொழில்கட்கு மிமைப்பளவிற் கொல்லேறே
கடைதோறு மதுநிற்பக் கற்பித்த வாறெவன்கொல்;

இரப்புநீ வேட்டதுகேட் டிமையவரென் பட்டனரே
பரப்புநீர்க் கங்கையோர் படர்சடையிற் கரந்ததே;

பூண்டன வென்பு;
புனைவது தும்பை;
ஆண்டன பூதம்;
அறைவன வேதம்;
இசைப்பன பல்பேய்;
எழீஇயது வீணை;
அசைப்பன வேணி;
அதிர்வன பொற்கழல்;

எனவாங்கு,

எல்வளை மகளி ரிடுபலி நசைஇப்
பல்கடை திரிதருஞ் செல்வநிற் பரவுதுங்
கொடியணி யேனம் பொடியணிந்து கிடப்ப
வடதிசை வாகை சூடித் தென்றிசை
வென்றி வாய்த்த வன்றாள் வலவ
னிமிழிசை வேங்கடம் போலத் தமிழகத்து

நாவலொடு பெயரிய ஞாலங்
காவல் போற்றி வாழிய நெடிதே."

இஃது, ஒருசீர்ச் சின்னமொன்று மொழித் தல்லனவெல்லா முற்கூறிய வுதாரணம் போல வந்தது.

"ஆயிரங் கதிராழி யொருபுறந்தோன் றகலத்தான்
மாயிருந் திசைசூழ வருகின்ற வரவுணர்த்த
மனக்கமல மலரினையு மலர்த்துவான் றானாத
லினக்கமல முணர்த்துவன்போன் றெவ்வாயும் வாய்திறப்பக்
குடதிசையின் மறைவதூஉ மறையென்று கொள்ளாமைக்
கடவுளரே தம்முறங்காக் கண்மலரே கரிபோக
வாரிருளும் புலப்படுப்பா னவனேயென் றுலகறியப்
பாரகலத் திருள்பருகும் பருதியஞ் செல்வகேள்.

மண்டலத்தி னிடைநின்று வாங்குவார் வைப்பாராய்
விண்டலத்திற் கடவுளரை வெவ்வேறு வழிபடுவோ
ரோங்குலகம் முழுதுபொரத் திருவுருவி னொன்றாக்கி
யாங்கவரை வேறுவே றளித்தியென் றறியாரால்;

மின்னுருவத் தாரகைநீ வெளிப்பட்ட விடியல்வாய்
நின்னுருவத் தொடுங்குதலா னெடுவிசும்பிற் காணாதா
ரெம்மீனுங் காலைவா யிடைக்கரந்து மாலைவா
யம்மீனை வெளிப்படுப்பாய் நீயேயென் றறியாரால்;

தவாமதியந் தொறுநிறைந்த தண்கலைக டலைத்தோய்ந்
துவாமதிய நின்னொடுவந் தொன்றாகு மென்றுணர்வா
ரம்மதியி னின்னொளிபுக் கிருளகற்றாத் தவற்றாற்கொ
லம்மதியம் படைத்தாயு நீயேயென் றறியாரால்;

நீராகி நிலம்படைத்தனை;
நெருப்பாகி நீர்பயந்தனை;
ஊழியிற் காற்றெழுவினை;
ஒளிகாட்டி வெளிகாட்டினை;

கருவாயினை;
விடராயினை;
கதியாயினை;
விதியாயினை;
வருவாயினை;
அருவாயினை;
ஒன்றாயினை;
பலவாயினை;

எனவாங்கு,

விரிதிரைப் பெருங்கட லமிழ்தத் தன்ன
வொருமுதற் கடவுணிற் பரவுதுந் திருவொடு
சுற்றந் தழீஇக் குற்ற நீக்கித்
துன்பந் தொடரா /வின்ப மெய்திக்
கூற்றுத்தலை பனிக்கு மாற்றல் சான்று
கழிபெருஞ் சிறப்பின் வழிவழி பெருகி
நன்றறி புலவர் நாப்பண்
வென்றியொடு விளங்கி மிகுகம்யா மெனவே.''

இது, குறைந்த இருவகைச் சின்னமும் பெற்று ஒழிந்த எண்ணிடையிட் டவ்வாறே வந்தது.

"உறைபதியி னுடனயனை யுந்தியாற் படைத்தோயு
மறைகடல்சூழ் நிலமுதலா யனைத்துலகும் புரப்போயுந்
திருநிறமே கரிபோகத் திருமேகம் பயந்தோயு
மொருநிறமே நிறமாக வொள்ளொளியை யுயிர்த்தோயு
மறுவத்து மார்பென்ன மலர்மகளை வைத்தோயு
நிறத்தோடு நெஞ்சத்த நிலமடந்தை கணவனுநீ;

பின்னமா யொன்றாகும் பெருமாயை யியற்றுவா
யின்னமா யந்தெளிய வெமக்கருளி யிமையவர்க்கு
மன்னமாய் முன்னொருகா லறம்பயந்த வரனுநீ;

குறியாதும் பிழையாத குலமறையை முதன்மயங்கி
வெறியாகி மலரோற்கு வெளிப்படுத்து வேறுபடுத்
தறியாத மறையெமக்கு மறிவித்த வறிவனீ;

மாணாக மதிகொடுத்து வானவரை மயக்கியுங்
கோணாக மதிவாங்கிக் கொடுத்தருளி யடியவர்க்குக்
காணாத மதிகாட்டுங் கருணைகூர் காட்சியைநீ;

வானுநீ;
நிலனுநீ;
மதியுநீ;
விதியுநீ;
தேனுநீ;
அமிழ்துநீ;
திருவுநீ;
அருவுநீ;

அன்புநீ;
அருளுநீ;
ஆதிநீ;
அந்தநீ;
இன்பநீ;
துன்பநீ;
இன்மைநீ;
உண்மைநீ;

எனவாங்கு,

நால்வகை யுருவிற் பால்வே றாகிய
கால முதல்வநிற் பரவுது ஞாலத்து
நல்லவை நல்லவை யெல்லா நினாஅது
செல்வ நோக்கி னெய்திய வல்லிதிற்
துயரொடு தொல்வினை நீங்கிப்
பெயராச் சுற்றம் பெறுகம்யா மெனவே."

இது ஆறடித் தரவும், மூன்றடித் தாழிசை மூன்றும், ஒருசீர்ச் சின்னம் பதினாறும், தனிச்சொல்லும், ஆறடிச் சுரிதகமும் பெற்றுவந்த இடையளவு வண்ணகத் தேவபாணி.

"கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் றொழுதேத்தக்
கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளை
யழல்விழிச் சுழல்செங்க ணரிமாவாய் மலைந்தானைத்
தாரொடு முடிபிதிரத் தமனியப் பொடிபொங்க
வார்புன லிழிகுருதி யகலிட முடனனைப்பக்
கூருகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்;

முரசதிர் வியன்மதுரை முழுவதூஉந் தலைபனிப்பப்
புரைதொடித் திரடிண்டோட் போர்மலைந்த மறமல்ல
ரடியொடு முடியிறுப்புண் டயர்ந்தவர் நிலஞ்சேரப்
பொடியெழ வெங்களத்துப் புடைத்ததுநின் புகழாமோ;

கலியொலி வியனுலகங் கலந்துட னனிநடுங்க
வலியிய லவிராழி மாறெதிர்ந்த மருட்சோவு
மாணாதா ருடம்போடு மறம்பிதிர வெதிர்கலங்கச்
சேணுய ரிருவிசும்பிற் செகுத்ததுநின் சினமாமோ;

படுமணி யினநிரை பரந்துட னிரிந்தோடக்
கடுமுர ணெதிர்மலைந்த காரொலி யெழிலேறு
வெரிநொடு மருப்படர வீழ்ந்துதிறம் வேறாக
வெருமலி பெருந்தொழுவி னிறுத்ததுநின் னிகலாமோ;

இலங்கொளி மரகத மெழின்மிகு வியன்கடல்
வலம்புரித் தடக்கை மாஅ னின்னிறம்;

விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொன்னும்
பொருகளி றட்டோய் புரையு நின்னுடை;

கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை;
தண்சுட ருறுபகை தவிர்த்த வாழியை;
ஒலியிய லுவண மோங்கிய கொடியினை;
வலியுயர் சகட மாற்றிய வடியினை;

போரவுணர்க் கடந்தோய்நீ;
புணர்மருதம் பிளந்தோய்நீ;
நீரகல மளந்தோய்நீ;
நிழறிகழைம் படையோய்நீ;

ஊழிநீ;
உலகுநீ;
உருவுநீ;
அருவுநீ;
ஆழிநீ;
அருளுநீ;
அறமுநீ;
மறமுநீ;
என வாங்கு

அடுதிற லொருவநிற் பரவுது மெங்கோன்
றொடுகழற் கொடும்பூட் பகட்டெழின் மார்பிற்
கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்
புயலுறழ் தடக்கைச் செவ்வே லச்சுதன்
றொன்று முதிர்கட லுலக முழுதுட
னொன்றுபுரி திகிரி யுருட்டுவோ னெனவே."

இஃது, இருசீர் நான்கும் ஒருசீ ரெட்டும் பெற்று வந்தது. இதனுட் போரவுணர்க் கடந்தோய்நீ யென்பதனை முச்சீராக்கியும், ஊழிநீ யென்பதனை யிருசீராக்கியும் பின்னுள்ளோர் காட்டுதல் பொருந்தாமை யுணர்க. (416)

## சிவலிங்கனார்

**எண்ணிடை............யான.**

(இ-ள்) பேரெண், அளவெண், இடையெண், சிற்றெண் என்னும் எண்களுள் ஒன்றிரண்டு குறையினும் அவற்றிடையே தனிச்சொல் இன்றி வரின் குற்றம் இல்லை எ-று.

சின்னம் என்பது தனிச்சொல். இது ஒருவர் உரை (இளம்பூரணர்).

சின்னம் என்பது சிறப்பாகச் சிந்தடியான் வருவதைக் குறிக்கும் ஆதலின் அச் சிந்தடி(சின்னம்) வாராதபோது எண்உறுப்பு எண்களுள் ஒன்று இடையே வாரா தொழிதல் குற்றம் இன்று என்பது பேராசிரியர் நச்சினார்க்கினியர் உரை.

உதாரணம் அவரவர் உரைகளிற் காண்க.

**ஒருபோகின் வகை**

## 450. ஒருபோ கியற்கையும் இருவகைத் தாகும். (141)

## இலக்குவனார்

459. The nature of *orupōku* is of two kinds.

## இளம்பூரணர்

**450. ஒருபோ..................தாகும்.**

*என்-னின், ஒருபோகு பாகுபடுமா றுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஒருபோகென்னும் கலி இரண்டு வகைப்படும் என்றவாறு. (141)

## பேராசிரியர்

**459. ஒருபோ..........தாகும்.**

*இஃது, ஒத்தாழிசை இரண்டனுள் ஏனையொன்றனை வண்ணக வொத்தாழிசை ஒருபோகென இருவகைத் தென்றான்; அவற்றுள் ஒருபோகின் வகையுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஒருபோகும் இருவகைத்தாகும் என்றவாறு.

உம்மை, இறந்தது தழீஇய வெச்சவும்மை.[1]

இதனது பயம்: ஒருறுப்பு இழத்தலின் ஒருபோகாதல் ஒக்கு மாயினும் நிகழ்கின்ற உறுப்புத் தம்மின் வேறாதல் அறிவித்தலென்பது; அது முன்னர்ச் சொல்லுதும். (147)

## நச்சினார்க்கினியர்

**147. ஒருபோ...........................தாகும்.**

*இஃது, ஒத்தாழிசை யிரண்டனுள் ஏனையொன்றனை வண்ணகம், ஒருபோகென இருவகைத்தென்றார்; அவற்றுள் ஒருபோகும் இருவகைத்தாமென்கின்றது. உம்மை யிறந்தது தழீஇய எச்சவும்மை.*

---

1. ஒத்தாழிசை இரண்டு என்றதைத் தழுவியது.

(இ-ள்) ஒருபோகின் இயல்பும் இரண்டு கூறாம் எ-று.

இதன் பயன்: ஒருபோகின்றிக் கொச்சகம் அம்போதரங்கமென் றும் பெயர் வழங்கினு மமையும் என்றவாறாயிற்று. (147)

## சிவலிங்கனார்

ஒருபோகு..........தாகும்.

(இ-ள்) ஒருபோகு ஒத்தாழிசை இரண்டு வகைப்படும் எ-று.

வண்ணக வொத்தாழிசை விவரம் இதுவரை கூறப்பட்டு இதுமுதல் ஒருபோகு ஒத்தாழிசை கூறப்படும்.

**451. கொச்சக ஒருபோ கம்போ தரங்கமென்**
**றொப்ப நாடி உணர்தல் வேண்டும். (142)**

## இலக்குவனார்

460. They must be understood in classifying as *koccaka orupōku* and *ambōtharangam.*

## இளம்பூரணர்

**451. கொச்சக ஒருபோ.....................வேண்டும்.**

*என்-னின், என்பது மது.*

(இ-ள்) ஒருபோகென்னும் கலி கொச்சகவொருபோகு எனவும் அம்போதரங்க வொருபோகெனவும் பொருந்த நாடியறிதல் வேண்டும் என்றவாறு. (142)

## பேராசிரியர்

**460. கொச்சக வொருபோ.....................வேண்டும்.**

*இது, மேல்வகுக்கப்பட்ட இரண்டற்கும் பெயரும் முறையும் உணர்த்துகின்றது.*

(இ-ள்) கொச்சகவொருபோகும், அப்போதரங்க வொருபோகுமென இரண்டாக உணரப்படும் அவை என்றவாறு.

கொச்சகம் இழத்தலிற் கொச்சகவொருபோகாயிற்று 'வண்ணக மொருபோகு' (451) என்றவழி ஒன்றேயாகி நின்ற கொச்சகம் ஒருவழி

வாராமையின் அது கொச்சகவொருபோகாம்.[1] இனி, ஏனையொன்றெனப் பட்ட ஒன்றனுள் வண்ணகப் பகுதிக்குரிய எண்ணுறுப்பு ஒருவழி யின்றியெனப் பிறந்த அன்மொழித்தொகை. அம்போதரங்கவொருபோகு என்பதுமது; ஒருபோகென்பது பண்புத்தொகை. இடையீடில்லாத நிலத்தினை[2] ஒருபோகென்பவாகலின் அஃது ஒப்பினாகிய பெயர். ஒருபோகென்பதனைத் 'திரிகோட்டவேணி'[3] என்றது போலக் கொள்க. (148)

## நச்சினார்க்கினியர்

**148. கொச்சக............வேண்டும்.**

*இது, மேல் வகுத்த இரண்டற்கும் பெயரும் முறையுங் கூறுகின்றது.*

(இ-ள்) கொச்சக வொருபோகு, அம்போதரங்க வொருபோகு என்றிரண்டாகப் பெயர் கொடுத்துப் பொருந்த ஆராய்ந்துணரப்படு மவை எ-று.

கொச்சக வுடைபோலப் பெரும்பான்மையுந் திரண்டுவருவது கொச்சகமெனவும், பல வுறுப்புகளு முறையே சுருங்கியும், ஒரோவழிப் பெருகியும், முடுகியுங் கடைக்கண் விரிந்து நீர்த்தரங்கம் போறலின் அம்போதரங்க மெனவுங் கூறினார். இவையும் ஒத்தாழிசைப் பகுதியென்பார் போக்கிய வொத்தாழிசையானே ஒருபோகென்றா ரெனக் கொள்க. அம்போதரங்க வொருபோகென்பதும் அது.

ஒருபோகென்பது பண்புத்தொகைப்புறத் தன்மொழி. இடையீ டில்லா நிலத்தினை யொருபோகென்ப வாகலின் அது ஒப்பினாகிய பெயர். ஒருபோகென்றதனைத் 'திரிகோட்டவெளி' என்றதுபோலக் கொள்க. (148)

## சிவலிங்கனார்

**கொச்சகம்...........வேண்டும்.**

(இ-ள்) ஒருபோகின் வகையாகிய கொச்சக ஒருபோகினையும் அம்போதரங்க ஒரு போகினையும் பொருந்த ஆய்ந்து அறிதல் வேண்டும் எ-று.

---

1. வண்ணகம் ஒருபோகு என்றவிடத்தில் இரண்டற்கும் கொச்சகம் உண்டு என்பதுபட நின்றது. அது ஒருவழி வாராத பாடல் ஒருபோகு எனப்படும். அதாவது கொச்சக ஒருபோகு எனப்படும். கொச்சக ஒருபோகு என்பது கொச்சகம் ஒருவழிப் போதல் (இல்லையாதல்) எனப் பொருள்படும். அது கொச்சகம் ஒருவழிப் போதலையுடைய பாடலை யுணர்த்தலின் அன்மொழியாம்.

2. இடையீடில்லா நிலம் - பிறரது இடையில்லாத ஒருவர்க்கேயுரிய பரந்த நிலம்.

3. திரிகோட்ட வேணி - பாடம் விளங்கவில்லை.

கொச்சகவொருபோகு

**452. தரவின் றாகித் தாழிசை பெற்றும்**
**தாழிசை யின்றித் தரவுடைத் தாகியும்**
**எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியும்**
**அடக்கிய லின்றி அடிநிமிர்ந் தொழுகியும்**
**யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது**
**கொச்சக வொருபோ காகும் என்ப. (143)**

**இலக்குவனார்**

461. They say that *koccaka orupōku* is one which occurs in different forms and contents as having *thālisai* without *tharavu* having *tharavu* without *thālisai* having *en* in the middle *sinnam* being shortened having two *adakkiyals* the lines being lengthened.

**பி.இ.நா.**

**யா.வி. 86**

தரவே தரவிணை தாழிசை தாமும்
சிலவும் பலவும் சிறந்து மயங்கியும்
மற்றும் விகற்பம் பலவாய் வருநவும்
கொச்சகம் என்னும் குறியின வாகும்.

**யா.கா. 33**

தரவே தரவிணை தாழிசை தாமும் சிலபலவாய்
மரபே இயன்றும் மயங்கியும் வந்தன....................கொச்சகமே.

**இ.வி. 73**

தரவே தரவிணை தாழிசை சிலபல
மரபான் இயன்றவும் மயங்கிவந் தனவும்
அவ்வப் பெயரான் அமைந்த கொச்சகம்.

**தொன். 234**

கொச்சகக் கலிஐங் கூறு பாடென
தரவே தரவிணை தாழிசை சிலபல
சிலபிறழ்ந் துறழ்ந்தும் சிலமயங் கியும்ஆம்.

**மு.வீ.யா.செ. 38, 39 - 42**

தரவுகொச் சகம்ஒரு தரவொடு போதரும்
தரவிணைக் கொச்சகம் தான்இரு தரவோடு
தனிச்சொல் சுரிதகம் தழுவியும் வருமே.

தரவோடு தாழிசை மூன்று தனிச்சொல்
சுரிதகம் நான்கின் ஆகும்சிஃ றாழிசை.

தரவொன்று தாழிசை யாறு தனிச்சொல்
சுரிதகம் நான்கின் ஆம்பஃ றாழிசை.

மயங்கி வருவஃது மயங்கிசைக் கொச்சகம்
கலிப்பா என்பனார் கற்றுணர்ந் தோரே.

**வீர. 118**

நிலவும் தரவும் தரவிணையும் நின்ற தாழிசைகள்
சிலவும் பலவும் சிறந்தும் மயங்கியும் சீர்விகற்பம்
பலவும் வரினும்.............பெயர் கொச்சகமே.

## இளம்பூரணர்

**452. தரவின் றாகித்............என்ப.**

*என்-னின், நிறுத்தமுறையானே கொச்சகவொருபோகு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) தரவின்றாகித் தாழிசை பெற்றும் என்பது - தரவு முதலாயின உறுப்புகளுள், தரவின்றித் தாழிசை முதலிய வுறுப்புகள் பெற்றும் என்றவாறு.

'தாழிசை பெற்றும்' என்றதனால் தரவுதாமே வரினும் கொச்சக வொருபோகு ஆகுமென்று கொள்க.

தாழிசையின்றித் தரவுடைத்தாகியும் என்பது - தாழிசையின்றித் தரவு முதலியன உடைத்தாகியும் என்றவாறு.

'தரவுடைத்தாகியும்' என்றதனால் தாழிசைதானே வரினும் என்று கொள்க.

எண்ணிடை யிட்டுச் சின்னங்குன்றியும் என்பது - எண்ணாகிய உறுப்புகளை யிடையிட்டுத் தனிச்சொல் வாராதொழியினும் என்றவாறு.

'சின்னம்' என்றதனால் எண்ணின்கண் இடையெண், சிற்றெண் என்பன குறையினும் என்றுமாம்.

அடக்கிய லின்றி அடிநிமிர்ந்தொழுகியும் என்பது - சுரிதகமின்றித் தரவுதானே நிமிர்ந்தொழுகி முடியினும் என்றவாறு.

யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையது என்பது- ஒத்தாழிசையின் யாக்கப்பட்ட யாப்பினும் அதற்குரித்தாக ஓதப்பட்ட

கடவுள்வாழ்த்துப் பொருண்மையின்றிக் காமப்பொருளாக வரினும் என்றவாறு.

கொச்சக வொருபோகாகும் என்ப என்பது - இவ் வகையினாற் சொல்லப்பட்டன கொச்சக வொருபோகெனக் குறிபெறும் என்றவாறு.

எனவே, ஒத்தாழிசைக்கு உறுப்பாகியவற்றுள் ஒன்றும் இரண்டும் குறைந்து வருவன கொச்சகவொருபோகெனப் பெயர்பெறும் என்று கொள்க.

அவற்றுள் தரவின்றாகித் தாழிசை பெற்று வந்ததற்குச் செய்யுள்:-

"நிரைதிமில் களிறாகத் திரையொலி பறையாகக்
கரைசேர் புள்ளினத் தஞ்சிறை படையாக
அரைசுகால் கிளர்ந்தன்ன வுரவுநீர்ச் சேர்ப்பகேள்;

இது நான்கடியாகி வாராமையின் தாழிசை யாயிற்று.

கற்பித்தான் நெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான் விச்சைக்கண்
தப்பித்தான் பொருளேபோல் தமியவே தேயுமால்
ஒற்கத்துள் உதவியார்க் குதவாதான் மற்றவன்
எச்சத்துள் ஆயினுமஃ தெறியாது விடாதேகாண்:

கேளிர்கள் நெஞ்சழுங்கக் கெழுவுற்ற செல்வங்கள்
தாளிலான் குடியேபோல் தமியவே தேயுமாற்
சூள்வாய்த்த மனத்தவன் வினைபொய்ப்பின் மற்றவன்
வாள்வாய்நன் றாயினும்அஃ தெறியாது விடாதேகாண்;

இவை யிரண்டும் தாழிசை.

ஆங்கு,

தனிச்சொல்.

அனைத்தினிப் பெரும அதனிலை நினைத்துக்காண்
சினைஇய வேந்தன் எயிற்புறத் திறுத்த
வினைவரு பருவரல் போலத்
துனைவரு நெஞ்சமொடு வருத்தினள் பெரிதே." (கலி.149)

இது சுரிதகம்.

என வரும்.

தாழிசை தாமேயும் வரும்.

தாழிசையின்றித் தரவு முதலாயின வந்ததற்குச் செய்யுள்:

"செவ்விய தீவிய சொல்லிய வற்றொடு
பைய முயங்கிய அஞ்ஞான் றவையெல்லாம்
பொய்யாதல் யான்யாங் கறிகோமற் றைய
அகனகர் கொள்ளா அலர்தலைத் தந்து

பகல்முனி வெஞ்சுர முள்ளல் அறிந்தேன்
மகனல்ல மன்ற வினி;

இது தரவு.

செல்லினிச் சென்றுநீ செய்யும் வினைமுற்றி
அன்பற மாறியாம் உள்ளத் துறந்தவள்
பண்பு மறிதிரோ வென்று வருவாரை
என்திறம் யாதும் வினவல் வினவிற்
பகலின் விளங்குநின் செம்மல் சிதையத்
தவலருஞ் செய்வினை முற்றாமல் ஆண்டோர்
அவலம் படுதலும் உண்டு." (கலி.19)

இது சுரிதகம்.

தாழிசையுந் தனிச்சொல்லு மில்லை.

எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றியவதற்குச் செய்யுள்:

"மாமலர் முண்டகந் தில்லையோ டொருங்குடன்
கானல் அணிந்த உயர்மணல் எக்கர்மேற்
சீர்மிகு சிறப்பினோன் மரமுதற் கைசேர்த்த
நீர்மலி கரகம்போற் பழந்தூங்கு முடத்தாழைப்
பூமலர்ந் தவைபோலப் புள்அல்குந் துறைவகேள்;

இது தரவு.

ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குதவுதல்
போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை.
பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்
அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை
அறிவெனப் படுவது பேதையார் சொல்நோன்றல்
செறிவெனப் படுவது கூறியது மறாஅமை
நிறையெனப் படுவது மறைபிறர் அறியாமை
முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வௌவல்
பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்;

இவை எண்.

ஆங்கதை அறிந்தனிர் ஆயினென் தோழி
நன்னுதல் நலனுண்டு துறத்தல் கொண்க
தீம்பா லுண்பவர் கொள்கலம் வரைதல்
நின்தலை வருந்தியாள் துயரஞ்
சென்றனை களைமோ பூண்கநின் தேரே." (கலி.133)

இது சுரிதகம்.

அடக்கிய லின்றி யடிநிமிர்ந்தொழுகல் வருமாறு:

"பால்மருள் மருப்பின் உரல்புரை பாவடி
ஈர்நறுங் கமழ்கடாஅத் தினம்பிரி யொருத்தல்
ஆறுகடி கொள்ளும் வேறுபுலம் படர்ந்து

பொருள்வயிற் பிரிதல் வேண்டும் என்னும்
அருளில் சொல்லும் நீசொல் லினையே
நன்னர் நறுநுதல் நயந்தனை நீவி
நின்னிற் பிரியலென் அஞ்சலோம் பென்னும்
நன்னர் மொழியும் நீமொழிந் தனையே
அவற்றுள், யாவோ வாயின மாஅன் மகனே
கிழவர் இன்னோர் என்னாது பொருள்தான்
பழவினை மருங்கிற் பெயர்புபெயர் புறையும்
அன்ன பொருள்வயிற் பிரிவோய் நின்னின்
றிமைப்புவரை வாழாள் மடவோள்
அமைக்கவின் கொண்ட தோளிணை மறந்தே" (கலி.21)

(143)

என வரும்.

## பேராசிரியர்

**461. தரவின் றாகித்......................மென்ப.**

*இது, முறையானே கொச்சகவொருபோகுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) எண்ணிய இந் நாற்பகுதியான் வந்தும் அமையாது பின்னரும் யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடைத்தாகி வருவது கொச்சக வொருபோகாம் என்றவாறு.

'தரவின் றாகித் தாழிசை பெற்றும்' என்பது, தனக்கு இனமாகிய வண்ணகத்திற்கு ஓதிய தரவின்றித் தாழிசை பெற்றுமென்றவாறு. அவை பரணிப்பாட்டாகிய தேவபாணி முதலாயின வெனக் கொள்கவென் றார்க்கு அவை தாழிசையாயன்றி வாராமையின் தாழிசையாயு மென்றெழுஞ் சூத்திரமெனின், அங்ஙனங் கூறில் தரவொடு வருந் தாழிசையிலக்கணத்தவாம் இவையுமென் றஞ்சித் தரவொடுபட்ட தாழிசையன்றிப் புறத்துள்ளன வென்றற்கு அது விலக்கினானென்பது; எனவே, இவை ஒத்து மூன்றாதலும் ஒருபொருண்மேல் வருதலுந் தாழம்பட்ட ஓசையவேயாதலும் பயிலுமென்பதூஉஞ் சொல்லினா னாயிற்று. அங்ஙனஞ் சொல்லியவதனானே பரணியுளெல்லாம் இரண்டடியானே வருதலும் தாழம்பட்ட ஓசை விராய் வருதலும் முடுகிவருதலும் பெறுதும்.

இனி, தாழிசை மூன்றாகியவழி மூன்றடியானும் நான்கடியானும் வரும். இனி, பத்தும் பன்னிரண்டுமாகி ஒருபொருண்மேல் வரும் பதினான்கடியின் ஏறாது வருதலும், அங்ஙனம் வருங்கால் தாழ்ந்த ஓசை பெற்றும் பெறாதும் வருதலும், அவையும் இருசீர் முதலாக எண்சீரளவும் வருதலுமென் றின்னோரன்ன பகுதியெல்லாம் அவ் வரையறையின்றித் தழுவப்பட்டன.

அஃதேல், அவற்றைத் தாழிசை யென்ற தென்னையெனின், பெரும்பாலுந் தாழம்பட்ட ஓசைய வாகலினென்பது; என்றார்க்குத் தரவு விலக்கியதனான் எண்ணுஞ் சுரிதகமும் விலக்குண்ணாவாம் பிற வெனின், அற்றன்று; தாழிசைப்பேறு விதந்தோதவே ஒழிந்தன விலக்குண்ணுமென்பது. மற்றுத் தாழிசை பெறுவதி யாதோவெனின், கொச்சகவொருபோகெனப் பொதுவகையாற் செய்யுளெனக் கொள்க. அது நோக்கிப் போலும் பலவுமெண்ணி,

"யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது" (461)

என்று ஒருமை கூறுவானாயிற்றென்றுணர்க.[1] அஃதேல், இரண்டடியான் வ்ருந் தாழிசை பேரெண் ணாகாவோ வெனின் அதுவன்றே, 'முதற்றொடை பெருகினன்றி யெண்ணென லாகாமையின்' (457) என்பது. இவை வருமாறு:

"உளையாழி யோரேழு மொருசெலுவி னொடுங்குதலான்
விளையாட நீர்பெறா மீனுருவம் பராவுதுமே"

என்றாற்போலப் பரணிச் செய்யுளுட் பயின்று வருமென்பது.

இவ்வாறு பல தாழிசை தொடர்பொருளவாகலின், அவற்றைப் பல அடுக்கிவரினுந் தாழிசையாமெனவே, இதற்கு வாராவெனப்பட்ட கொச்சகந் தாழிசையின்றி வெண்பாவாகி வருமென்பது உய்த்துணரப் படும்; என்னை? வெண்பாவினான் வஞ்சி பரிபாடலுட் கொச்சகம் வருமென்றமையின். பஃறாழிசைக் கொச்சகமெனவும் அமையும். அவை சில வருவன சிஃறாழிசைக் கொச்சக மெனப்படும்; பிறவும் அன்ன.

மற்றுப் பரணியுட் புறத்திணை பலவும் விராய் வருதலின் அது தேவபாணியா மென்ற தென்னையெனின், அவையெல்லாங் காடுகெழு செல்விக்குப் பரணிநாட் கூழுந் துணங்கையுங் கொடுத்து விடுபடுவதோர் வழக்குப்பற்றி யதனுட் பாட்டுடைத் தலைவனைப் பெய்து சொல்லப் படுவனவாதலான் அவை யெல்லாவாற்றானுந் தேவபாணியேயாமென்பது; என்றார்க்கு, ஒரு தாழிசையோ பல தொடர்ந்தவழியோ கொச்சக வொருபோகாவதெனின் வரையறையின்மையின் இருவாற்றானு மாமென்பது. இனி, தாழிசை மூன்றடுக்கியவழி மூன்றடியான் வருமாறு:

"கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவ
னின்றுநம் மானுள் வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ;

பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவ
னீங்குநம் மானுள் வருமே லவன்வாயி
லாம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ;

---

1. வேற்றுமையுடையன என்னாது உடையது என ஒருமை கூறப்பட்டது.

கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவ
னெல்லிநம் மானுள் வருமே லவன்வாயின்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ" (சிலப்.ஆய்ச்சி.)

என வரும்.

இனி, நான்கடியான் வருதல் சிறுபான்மை; அவை வந்தவழிக் கண்டுகொள்க.

"தாழிசை யின்றித் தரவுடைத் தாயும்"(461) என்பது, மேற்கூறிய தாழிசையின்றித் தரவேபெற்று வருதலு மென்றவாறு. பொது வகையா னின்ற கொச்சகவொருபோகு இரண்டு தரவுடைத்தெனப்பட்டது. மேல் 'தரவின்றாகி' என்றதுபோல ஈண்டுந் தாழிசையின்றி யென்றதனால், தாழிசையொடுபட்ட தரவிலக்கணத்தில் திரிந்துவரும் இத் தரவெனக் கொள்க. அது தரவுகொச்சகமுந் தரவிணைக் கொச்சகமுமென இரண்டாய் வருதலும் நான்கும் ஆறும் எட்டுமாய் வருதல் கடப் பாடின்றென்பதூஉங் கொள்க.

'உடைத்து' எனப்பட்டது, தரவெனவே ஒழிந்த உறுப்பு விலக்குண்டன. 'ஆகியும்' என்ற மிகையான் இரண்டு வருதலே பெரும் பான்மையெனவும், தரவோடொக்கு மெனப்பட்ட சுரிதகம் பெரும் பான்மையும் பெறுஞான்று பெறுவது அதுவே யெனவுங் கொள்க. சுரிதகம் பெறுவன சுரிதகத் தரவிணையென்று வழங்குப. மேல் தனிச் சொற்கு வரையறையின்மையின் அது பெற்றும் பெறாதும் வருமென்பது. மற்றுத் தரவிலக்கணம் இழந்ததாயின் அதனைத் தரவென்று பயந்த தென்னையெனின், தாழம்பட்ட ஓசையின்றி அது வருதல் பெரும் பான்மை யென்றற்கென்பது; எனவே, யாண்டுந் தரவென்பது தாழம்பட்ட ஓசைக்கு ஒரு தலைமையின்றி வருமென்பது நேர்ந்தவாறாயிற்று; அது,

"நீறணிந்த திருமேனி நெருப்புருவங் கிளைத்ததுபோற்
கூறணிந்த குங்குமங்கொண் டொருமுலையோ குறிசெய்ய
வேறணிந்த சுவடெறிப்ப வேனிலாற் கெரிவிழித்த
வேறணிந்த வெல்கொடியோ யெவ்வுயிர்நிற் றவிர்ந்தனவே"

என்பது தரவுகொச்சகம்.

"பூணாக வென்பணிந்தான் பூதத்தான் வேதத்தான்
கோணாகக் கச்சையான் கோடேந்து கொல்லேற்றான்
மாணாக வெண்ணூலான் வாணுதலாள் பாகத்தா
னூணாரும் பிச்சையா னுண்ணாத நஞ்சுண்டான்
வானாறு தோய்ந்த சடையான் மழுவலத்தான்
யானார்வஞ் செய்யு மிறை;

எனவாங்குப் பாடி யிறைஞ்சுவோர்க் கெல்லாம்
வினைமாசு தீரும் விளக்காகு தோற்றத்
தனையோய் மறலிக்கு மச்சம் பயந்த

புனைபூங் கழற்கான்மேற் பூவொடு நீர்தூஉ
மனைமாண்ட பாக முளப்பட வாழ்த்தி
யெனைநாளு மேத்துது மெந்தையே நின்னை
நினையா தொழியற்க நெஞ்சு"

என்பது, தரவிணைக் கொச்சகம். இது சுரிதகம் பெற்று வருவனவும், தனிச்சொற் பெற்று வருவனவும் வந்தவழிக் கண்டுகொள்க.

மற்றுத் தேவபாணியல்லாத தொடர்பொருட் செய்யுட்கண் தர வின்றித் தாழிசை வந்ததென்றுமோ தாழிசையின்றித் தரவுடைத்தாய தென்றுமோவெனின், அவை,

"யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது" (461)

என்றதனானே ஒன்றற்கொன்று தரவெனப்பட்டுத் தரவு கொச்சக மாமென்பது; என்னை? ஆறும் எட்டுமெனப்பட்டு வாராமையானும் மூன்றடித் தாழிசையாய் வாராமையானுந் தாழிசை யெனப்படாமையின். அவை தம் பொருளொடு தாம் முடியாமையின் தரவுகொச்சகமாயின.

இனி, அத் தொடர்நிலையின் முதற்கண்நின்ற தேவபாணி தன் பொருளொடு தான் முடிதலின் அது விதந்தோதிய தரவுகொச்சகமாம்; என்னை? எருத்தென்பது உடம்பிற்கு முதலாகலினென்பது.

"எண்இடை யிட்டுச் சின்னங் குன்றியும்" (461)

என்பது, வண்ணகத்திற்கு ஓதிய எண்ணுஞ் சின்னமுமின்றி ஒழிந்ததாம். தரவு தாழிசை தனிச்சொற் சுரிதகமென்னும் நான்கு உறுப்புடையதுங் கொச்சக வொருபோகா மென்றவாறு. இதற்கு இல்லாத உறுப்பே கூறி, உள்ளது கூறிலன், அல்லாத உறுப்பினையெல்லாம் அவற்றானே நிற்றலை வேண்டியென்பது.

(உ-ம்)"ஆறறி யந்தணர்க் கருமறை பலபகர்ந்து
தேறுநீர் சடைக்கரந்து திரிபுரந் தீமடுத்துக்
கூறாமற் குறித்ததன்மேற் செல்லுஞ் கடுங்கூளி
மாறாப்போர் மணிமிடற் றெண்கையாய் கேளினி;

படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ
கொடுகொட்டி யாடுங்காற் கோடுய ரகலல்குல்
கொடிபுரை நுசுப்பினாள் கொண்டசீர் தருவாளோ;

மண்டமர் பலகடந்து மதுகையா னீறணிந்து
பண்டரங்க மாடுங்காற் பணையெழி லணைமென்றோள்
வண்டரற்றுங் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ;

கொலையுழுவைத் தோலசைஇக் கொன்றைத்தார் சுவல்புரளத்
தலையங்கை கொண்டுநீ காபால மாடுங்கான்
முலையணிந்த முறுவலாள் முற்பாணி தருவாளோ;

எனவாங்கு,

பாணியுந் தூக்குஞ் சீரு மென்றிவை
மாணிழை யரிவை காப்ப
வாணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி" (கலி.கடவுள்)

என வரும்.

இஃது, 'ஏனை யொன்று' எனப்பட்ட தேவபாணி ஒத்தாழிசை யாகலான் உறுப்பொன்றியும் முதனிலை யொத்தாழிசையாகாது; ஏனை ஒத்தாழிசையில் உறுப்பிழத்தல்பற்றி,

"ஒப்ப நாடி யுணர்தல் வேண்டும்" (460)

என்பதனாற், சின்ன எண் நிற்பவும், எண் இழந்ததெனப்பட்ட அம்போதரங்க வொருபோகுபோலக் கொச்சகமேயன்றி எண்ணுறுப்பு இழந்ததூஉங் கொச்சகவொருபோ கெனப்பட்ட ஒருபோகா மென்றா னென்பது.

"அடக்கிய லின்றி யடிநிமிர்ந் தொழுகியும்" (461)

என்பது அடக்கும் இயல்பிற்றல்லாத ஈற்றதாகி ஒரு தொடையான் அடிநிமிர்ந்தொழுகியு மென்றவாறு. 'ஒழுகும்' எனவே அற்றுவாராது ஒன்றேயாகி வருமென்பது. 'அடிநிமிரும்' என்றதனான், மேல் அடிவரையறுத்துச் சொல்லப்பட்ட தரவு தாழிசை முதலிய உறுப்பு இதற்கில்லை யென்றவாறாம். அடக்கியல் வாரத்தினை அடக்கும் இயல்பின் றெனவே இதற்கு வாரம் நேர்ந்தானாமாகலின், ஒழுகு மென்றதனோடு மாறுகொள்ளும் பிறவெனின், அங்ஙனம் படுமாயினும் ஒரு காரணம் நோக்கி அவ்வாறு நேர்ந்தானென்பது; என்னை? அடி நிமிர்ந்தொழுகுங்கால்,

"எழுசீ ரிறுதி யாசிரியங் கலியே" (388)

எனவும்,

"வெண்பா வியலினும் பண்புற முடியும்" (389)

எனவும் ஓதியவாற்றானே இறுதிநிற்ப ஏனையடியெல்லாங் கலியடியாகி ஒழுகி வாரம்பட்டு நிற்குமென்று கோடற்கென்பது; ஈதறியார், வெண்பா வியலாற் பண்புற முடிந்த கலியடி யுடையதனை வெண்கலி யென்ப; வெண்கலியாமாறு முன்னர்ச் சொல்லுதும்.

(உ-ம்)"மழைதுளைத்துப் புறப்பட்ட மதியமு ஞாயிறும்போ
லுழைமுழங்கு வலம்புரியுந் திகிரியு மொளிசிறப்பப்
பச்சென்ன வானிட்ட வில்லேபோற் பசுந்துழாய்
கச்சென்னக் கனல்கின்ற கதிர்முலைமேற் கவின்செய்ய
வம்மேகத் திடைப்பிறந்த நரையுருமே றதிசயிப்ப
மைம்மேனி மருங்கதிர நகத்திரியே வால்புடைப்ப
விண்டோயு மணிநீல வெற்பினிடை வேய்மிடைந்தாங்
கெண்டோளு மிடுநீழ லிளங்கிளிகள் களிகூரக்

கொதியாது கொதித்தெறிந்த கோட்டெருமைத் தலையின்மிசை
மிதியாத சீறடி மிதித் தன போற்றோன்றத்
தாங்கிய புகர்வாளுங் கேடகமுந் தனித்தனி
வாங்கிய கோளரவு மதியமும் போன்றிலங்க
மைதொடுத்த கடற்புறஞ்சூழ் மலையன்ன மணியல்குல்
கொய்துடுத்த பொற்றுகிலின் கொழுஞ்சோதி கொழுந்தோட்ட
நீனின்ற படிவத்தா னெடியோனை முதற்பயந்த
தாயென்று முதுமறை பரவினும்
யாயென் றல்ல தியாந்துணி யலமே"

என வரும். வெண்பாவினான் முடியுங் கொச்சகவொருபோகு தேவ பாணியாய் வந்தன கண்டுகொள்க.

"யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது" (461)

எனவே, யாப்பின் வேறுபடுவனவும் பொருளின் வேறுபடுவனவுமென இரண்டாம்.

அவற்றுள், யாப்பின் வேறுபடுதலென்பது மேற்சொல்லினவாறும், இனி வருகின்றவாறுமின்றி யாப்பிலக்கணத்தின் வேறுபடுதல். அவை இருசீர்முதலாக எண்சீர்காறும் வந்த அடி மேற்கூறியவாறன்றி நந்நான்கே பெற்று வருதலும், அவற்றுட் பிறவடி விராய் வருதலும் பாமயங்கி வருதலும், இரண்டும் மூன்றும் நான்கும் ஆகிய அடியுள் ஈற்றடி குறைதலும், குறையாதவழி இயலசைச்சீர் வருதலும், மூன்றடியாயிற் குறையாது வருதலும், நான்கடிச் செய்யுண் முடியவும் அடியிரண்டு மிகுதலும், இனவியலின் வேறுபடுதலும், கடவுட் டொடர்நிலைகள் பல தரவுந் தாழிசையுமாகி இடையிடைச் செய்வனவும், அடக்கியலின்றி அடிப்பட நிமிர்ந்தொழுகு மெனப்பட்ட அடக்கியலுடைத்தாகலும் என்றின்னோரன்ன பல பகுதியுங் கொள்ளப்படும். இப் பகுதியெல்லாம் பொருள் வேறுபட்டவழியும் நிகழுமென்பது, இரண்டனையும் உடன் வைத்தோதியதனாற் கொள்ளப்படும்; என்றார்க்கு, வரையறையின்மையிற் களம்பாடு பொருநர் கட்டுரையும், தச்சுவினை மாக்கள் சொற்றொடரும் ஏற்று இக்காலத்து உரைநிகழ்ந்தனவும், ஓலைப்பாயிரமும் முதலா யினவெல்லாங் கொச்சகமாதற்கு இழுக்கென்னையெனின், அவையே அடிவரையறையில்லன ஆறென்றவழி உரையெனப் பகுத்தோதார்க் கன்றே அது கடாவாவதென மறுக்க.

இவ்வாறு வந்த கொச்சகங்களை ஒரு வரையறைப்படுத்துப் பாத்தோறும் இனஞ்சேர்த்தலும், பண்ணிற்குத் திறம்போலப் பன்னிரு பகுதியவா மென்பார் உரைக்குமாறு: விருத்தந் துறை தாழிசையென மூன்றனையும் நான்கு செய்யுளோடும் உறழ்ந்துரைப்பப் பன்னிரண் டாமென்பது. மருட்பாவும் பரிபாடலுமோ வெனின், அவற்றுக்கு அஃது

ஆராய்ச்சியின்றெனவும் அவற்றை ஒப்பனவெல்லாம் ஒப்பென மொழிய அடங்குமென்பதூஉம் அவர் கருத்து. இனி, நூற்றைம்பது கலியும் எழுபது பரிபாடலுமெனச் சங்கத்தார் தொகுத்தவற்றுள் ஒன்றனையில்லையென்றார்; அஃது இக்காலத்தினும் வீழ்ந்ததின்மையின் அவரிலக்கணத்தினை வழுப்படுத்ததென்பது. இனி, விருத்தமும் துறையுந் தாழிசையுமன்றி ஒப்புந் திறனுமென்றாற்போல்வன சிலகூட்டி அறுவகைச் செய்யுளோடுறழ முப்பதாம்; இனி, அவற்றை விகற்பித்து நோக்க எண்ணிறந்த பகுதியவாம்; என்னை? சீரும், அடியும், தொடையும், பாவும் முதலாயவற்றோடு குறளடி முதலாயவற்றை வைத்துறழவும் அவ்வடி தம்மொடு தம்மைப் பரிமாற்றவுந் தம்மொடு பிறவற்றை மயக்கவும் பல்குமாகலின்.

"கொன்றை வேய்ந்த செல்வ னடியிணை
யென்று மேத்தித் தொழுவோம் யாமே" (கொன்றைவேந்தன்)

என்பது, இரண்டடியாகலின் வெண்பாவினுள் ஒரு சாரனவற்றுக்கும் கலியுள் ஒருசாரனவற்றுக்கும் இனமெனப்படும். இனி, சீருந்தளையும் நோக்க ஆசிரியத்திற்கு இனமெனப்படும். இங்ஙனம் பலவற்றுக்கு இனமாயினும் இரண்டடியானே ஒரு செய்யுள் வருவது வெண்பா வென்பது நோக்கி அதற்கினமாக்கி வெண்செந்துறை யென்ப. இரண்டடியும் ஒத்து வருதலானும், ஒழிந்த காரணங்களால் நேர்ந்த பாக்கட்கு இனமாகலை விலக்குதல் அரிதாகலானும், அங்ஙனம் இனஞ்சேர்த்துதற்கு வரையறையின்றென்பது. இனி, சந்தஞ் சிதைந் தனவும் புன்பொருளவாய் வருவனவுஞ் செய்யுளென்பார், அவற்றைத் தாழிசை யென்ப; அதற்குக் காரணமின்றென்பது; அல்லதூஉந் தாழ்ந்த ஓசையல்லாவொன்றைத் தாழிசையெனில் தரவுதாழிசைகளுள் தாழிசையுஞ் சந்தம் அழியல்வேண்டுமென்பது. இனி, விழுமிய பொருளல்லனவற்றைத் தாழிசை யென்றற்கு என்னை காரணமெனவும் மறுக்க; அல்லதூஉம்,

"கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவ
னின்றுநம் மானுள் வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ;

பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவ
னீங்குநம் மானுள் வருமே லவன்வாயி
லாம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ;

கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவ
னெல்லைநம் மானுள் வருமே லவன்வாயின்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ"

(சிலப்.ஆய்ச்சி)

என மூன்றும் மூன்றடியான் முடிந்ததனை ஆசிரியத்தாழிசையெனின், அதனுட் கிடந்த வெண்டளை அதற்கொன்றா தென்னுமென்பது; இனி, இதுவே நான்காகிவரிற் கலிவிருத்தமென்ப; அது,

"நெருப்புக் கிழித்து விழித்ததோர் நெற்றி
யுருப்பிற் பொடிபட் டுருவிழந்த மார
னருப்புக் கணையா னடப்பட்டார் மாதர்
விருப்புச்செய நின்னை விரும்புகின் றாரே"

என்றவழி, இது நான்கடியாசிரியத்திற்குத் தாழிசையாங்கால் இழுக் கென்னை யெனவும், வெண்டளை தட்டு வெண்டாழிசையாதற்கு இழுக் கென்னை யெனவும், கலித்தளையில்லது கலிப்பாவிற்கு இனமாயவாறு என்னையெனவுங் கூறி மறுக்க.

இனி, குறளடியானுஞ் சிந்தடியானும் வருவனவற்றை வஞ்சிப் பாவிற்கு இனமாமென்ப. சீரளவொப்பினும் அடி நான்காதலானும், வருஞ்சீர் இயற்சீராதலானும், பா வேறுபடுதலானும், அதற்கு இவை இனமாகா வென்பது. இனி, குறளடிச் செய்யுண் மூன்றுவரில் தாழிசையெனவும், சிந்தடிச்செய்யுண் மூன்று வாராவெனவும் கூறின், அதற்கும் ஓர் காரணங் கூறல் அரிதென்க. ஒழிந்தனவும் இவ்வாறே இனஞ்சேர்த்திற் பிறிதொரு காரணத்தாற் பிற பாவிற்கும் அவையே இனமாதல் கூட்டி மறுக்க; என்றார்க்கு, இங்ஙனம் ஒன்றற்கு இனஞ் சேர்த்தல் அரியனவற்றைக் கலிப்பாவென்ற தென்னையெனின், பெரும்பான்மையுங் கலிப்பாவிற்கேற்ற ஓசையவாகலின் அவை யெல்லாவற்றுக்கும் ஒரு பரிகாரங் கொடுத்துச் சூத்திரத்தினுள் அடக்கினான் இவ் வாசிரியன்,

"முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணி" (பாயிரம்)

என்பது. இது மேலைக்கொண்டும் அடிப்பட வந்த மரபு. இவையெல்லாம் நான்கடியான் வருதலே பெரும்பான்மையெனக் கொள்க. எனவே, சிறுபான்மை பாவைப் பாட்டும் அம்மனைப்பாட்டு முதலாயின நான்கடி யின் இகந்துவருவனவாயின.

இனி, அடக்கியலின்றி அடிநிமிர்ந்தொழுகியது ஒழித்து, ஒழிந்த கொச்சகவொருபோகு முப்பகுதியுந் தம் முறுப்புவகையானே அளவை கொள்ளப்படும். இப் பகுதி பலவாயினும் மரபுபட்டு வந்தவகையானே செய்யுள் செய்யப்படும்; இனி யவற்றுட் சில வருமாறு:

"நெய்யொடு தீயொக்கச்
செய்யானைச் சேர்வார்க்குப்
பொய்யாத வுள்ளமே
மெய்யாகல் வேண்டுமே"

எனக் குறளடி நான்காக வந்தது. இது குட்டம்பட்டு வாராதென்பது மேற்கூறப்பட்டது.

"மையணி கண்டனை வானோ
ரையனை யாயிரம் பேழ்வாய்ப்
பையர வம்பல பூணு
மெய்யனை மேயது வீடே"

என்பது, முச்சீரடியான் வந்த கொச்சகம்; இஃது, இயலசைச் சீராகி வந்தவழியுங் கண்டுகொள்க.

"பூண்ட பறையறையப் பூத மருள
நீண்ட சடையா னாடு மென்ப
மாண்ட சாயன் மலைமகள் காணவே காணவே" (யா.வி.ப.331)

என்பது, சிறுபான்மை மூன்றடியான் வந்து இடையடி குட்டம் பட்டது. இது கந்தருவமார்க்கத்தான் இடைமடக்கி நான்கடியாதலும் ஈற்றடி ஒருசீர் மிகுதலு முடைத்தென்பது.

"ஒரு வான்யா றொடுச டாடவிப்
பெரு நாகமே பூணும் பெருமா
னரு வாயினா னாயினு மன்பர்க்
குரு வாயினா னுள்ளத்தி னுள்ளே"

என்பது நிரையசைச்சீர் முதற்கண் வந்த அளவடி நான்கான் வந்தது; அசைச்சீரின்றி அளவடி நான்கான் வருவதும்,

"தாழிசை யின்றித் தரவுடைத் தாகியும்" (461)

என்றவழி, தரவுகொச்சகமா யடங்குமென்பது.

"வண்டணி கொண்ட மதுமலர்க் கொன்றை யினமாலை
கொண்டணி செஞ்சடைக் கோட்டிளந் திங்கள்போற்
பண்டணி யாகப் பலர்தொழுங் கங்கைநீர் வைத்தா
னுண்டணி கொண்டநஞ் சுண்பார்க் கமிழ்தாமே"

என நாற்சீரடி யிரண்டும் ஐஞ்சீரடி யிரண்டுமாய் வந்தது.

இனி,

"அறுசீ ரடியே யாசிரியத் தளையொடு
நெறிபெற்று வரூஉ நேரடி முன்னே" (376)

என்றதுபோல இலக்கணங்கள் கொச்சகவொருபோகிற்கே உரித்தாகவும் இன்னும் வேறுபட்டதாகவும் வரும்; அது,

"கல்லாலந் தண்ணிழற்கீழ்க் கல்வித் துறைபயந்த காமர் காட்சி
நல்லானை நல்லா ளொருபாக மாகிய ஞானத் தானை
யெல்லாரு மேத்தத் தகுவானை யெஞ்ஞான்றுஞ்
சொல்லாதார்க் கெல்லாந் துயரல்ல தில்லை தொழுமின் கண்டீர்"

என வரும்.

இவ்வாறே ஒழிந்தனவெல்லாம் பரிமாற்றுப்படுப்பப் பலவாகி வரும்; அவை வந்தவழிக் கண்டுகொள்க.

இனி, நான்கடியும் ஒத்தவழி மயங்கி வருமாறு:

"தடந்தாட் கொத்த தமனியச் சிலம்பு
படந்தாழ் கச்சைப் பாம்பொடு தழீஇ
வென்றாடு திருத்தாதை வியந்துகை துடிகொட்ட
நின்றாடு மழகளிற்றை நினைவாரே வினையிலரே"

என வரும்.

"புனைமலர்க் கடம்பின் பூந்தார்ச் சேந்த
னிணையடி பரவுதும் யாம்"

என்பது, இரண்டடியான் ஈற்றம குறைந்து வந்தது.

"கொன்றை வேய்ந்த செல்வ னடியிணை
யென்று மேத்தித் தொழுவோம் யாமே"

என்பது, இரண்டடியுள் ஈற்றடி குறையாது அடிதோறும் மயங்கச் சீர் இயலசையான் வந்தது. ஒழிந்த மூன்றடியும் நான்கடியும் ஈற்றடியும் குறைதலுங் குறையாதவழி இயலசைச்சீ ராதலுங் கண்டுகொள்க.

"வானுற நிமிர்ந்தனை வையக மளந்தனை
பான்மதி விடுத்தனை பல்லுயி ரோம்பினை
நீனிற வண்ணநின் னிறைகழ றொழுதனம்" (யா.வி.ப.264)

என்பது, மூன்றடியால் தரவு வாராமையின் யாப்பு வேறுபட்ட கொச்சக மாயிற்று.

"கடாமுங் குருதியுங் கால்வீழ்ந்த பச்சைப்
படாமும் புலித்தோலுஞ் சாத்தும் பரம
னிடாமுண்ட நெற்றியா னெஞ்ஞான்றுங் கங்கை
விடாமுண்ட வார்சடையான் வெண்ணீ றணிந்தோன்
மெய்யுறு நோயில்லை வேறோர் பிறப்பில்லை
யையுறு நெஞ்சில்லை யாகாத தொன்றில்லை"

என நான்கடியும் முடிந்தவழி இரண்டடி வேறுவந்த கொச்சகம். ஒழிந்தனவும் பிற வேறுபாட்டான் வருவனவு மெல்லாம் வந்தவழிக் கண்டுகொள்க. இச் சொல்லப்பட்டன வெல்லாந் தரவுகொச்சகத்தின்பாற் சார்த்திக்கொள்ளப்படுவன வென்ப; வேறும் உள; அவையும் அவ்வாறாத லறிந்துகொள்க.

மற்றங்ஙனங் கூறின் இரண்டடியான் வருவன தாழிசையாகலின்,

"கொன்றை வேய்ந்த செல்வ னடியிணை
யென்று மேத்தித் தொழுவோம் யாமே"

எனவும்,

"ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை" (முதுமொழிக்.)

எனவும் வருவன தாழிசையாம் பிறவெனின், தாழிசை இலக்கணஞ் சிதையவரினுந் தாழிசைக் கொச்சகமெனவே படுமன்றே? தரவிலக்கணம் அழிந்து தரவிரட்டித்துச் சுரிதகம் பெற்றதூஉந் தரவுகொச்சக மாயிற்றுப் போல வென்பது; அல்லதூஉம்,

"ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை"

என்பது, இரண்டடியின்றி முதுமொழி யாகலானும்,

"ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்"

என்பது, பலவற்றுக்கும் பொதுவாகலானும் அஃது இரண்டடி வரையறையுடைய பாட்டெனப்படாது.

"கொன்றை வேய்ந்த செல்வ னடியிணை"

என்பது, கந்தருவ மார்க்கமாதலின் ஈண்டை யிலக்கணமெல்லாம் பெறுதல் சிறுபான்மை யெனக் கொள்க.

இனி, பொருளினும் வேற்றுமையென்பது, முற்கூறிய வகையானும், மரபு வேற்றுமையானும் ஏற்றவகையான் வந்து பொருள் வேறுபடுதல்; அஃதாவது, தேவரை முன்னிலையாக்கி நிறீஇச் சொல்லாது படர்க்கை யெனச் சொல்லுதலும், மக்களை நாட்டி வெட்சிமுதற் பாடாண்டிணை யிறுதியாகிய புறப்பொருளான் வந்து அதனுக்குரித் தென்று கூறப்பட்ட காமப்பொருள் வேறுபடுதலினாலுமெனக் கொள்க.

ஏற்றவகையாற் பொருள் வேறுபாடு கொள்க வெனவே முன்னிலை படர்க்கையான் வரும் பொருள்வேறுபாடே இஃது ஓதிய நான்குமாமாறு வேறுபட்டவற்றுக்குமெல்லாம் பொதுவொழிந்த வெட்சிமுதற் பாடாண்டிணை யிறுதியாகிய பொருள் வேறுபாடு வரையறையுடையவென்பது; என்னை? எடுத்தோதிய நான்கனுள்,

"எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியும்
அடக்கிய லின்றி யடிநிமிர்ந் தொழுகியும்" (461)

வரும் பகுதியொழிந்து வருமாகலின்; இப் பொருள் வேறுபாடு பரணிச் செய்யுளுள் இடையிடை விரவிவரி னல்லது வேறு வாராதெனக் கொள்க. இவ்வாற்றாற் கொச்சகக் கலிப்பாவினை வரைந்தோதவே ஆசிரியப்பாவும், வெண்பாவும் ஒருபொருண்மேற் பல தொடர்ந்தவழி மூன்றும், ஐந்தும், ஏழும், ஒன்பதுமாகி வருதலும், பிறவாற்றான் வருதலும் வரையறையிலவாயின. தேவபாணியல்லாத தொடர்நிலைச் செய்யு ளெல்லாம் யாப்பு வேறுபாட்டோடு பொருள் வேறுபாடுமுடையவெனக் கொள்க. அவையெல்லாம் அவ்வச் செய்யுளுட் காணப்படும்.

> "புகலிரும் பனிச்சோலைப் பொன்மலைபோற் பொலிந்திலங்கி
> யகல்விசும்பிற் சுடர்மாட்டி யைம்பூத மகத்தடக்கி
> மண்ணக மிருணீங்க மன்னுயிர் படைத்தக்கா
> லண்ணலேற் றெழிலூர்தி யருமறை முதல்வனுந்
> தண்ணறுங் கமழ்துழாய்த் தாமரைக் கண்ணனும்
> வண்ணம்வே றுடம்பொன்றாய் வானவில் லனையரே"

எனப் படர்க்கையவாய்த் தெய்வம் பராஅதலிற் பொருள் வேறுபட்டது.

> "வெண்பலிச் சாந்த முழுமெய்யு மேற்பூசி
> யுண்பலிக் கூரூர் திரிவது மேலிட்டுக்
> கண்பலிக் கென்று புகுந்த கபாலிமுன்
> னென்பலித் தாளிவள் யாதுவாய் வாளே"

என்பது,

> "காமப் பகுதி கடவுளும் வரையார்" (83)

எனப்பட்ட பாடாண்டிணையாகலிற் பொருள் வேறுபட்டது.

> "கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்" (சிலப்.ஆய்ச்சி)

என்பதோவெனின், அது முல்லை நிலத்துக்குத் தெய்வமாகலானும், முல்லை நிலத்தார் தம் தெய்வத்தினை அவ்வாறு அன்புசெய்து முன்னிலைப் புறமொழியாகக் கூறுதலானும், அது கைக்கிளை யெனப் படாதென்பது; ஒழிந்தனவும் இவ்வாறு வருவன வந்தவழிக் கண்டு கொள்க.

மற்றிவற்றையெல்லாங் கொச்சகவொருபோகென்ற தென்னை? மற்றையுறுப்புப் பலவிழந்தனவாலெனின், அங்ஙனமாயினுங் கொச்சக வொருபோகென்னும் பொதுவிதி விலக்குண்ணாமையின் இது பொதுவகையா னெய்திய பெயரெல்லாம் அவற்றுக்கு மாகுமென்று எய்துவித்தானென்பது. இனி, கொச்சகவொருபோகென்னாது 'ஆகும்' என்றதனான், ஒருபோகென்னாது கொச்சகமென்றே வழங்கினும், அமையுஞ் சிறுபான்மையென்பது கொள்க. (149)

## நச்சினார்க்கினியர்

**149. தரவின் றாகித்........மென்ப.**

*இது, முறையே கொச்சகவொருபோகு கூறுகின்றது.*

(இ-ள்) தரவின் றாகித் தாழிசை பெற்றும் என்பது, தனக்கினமாகிய வண்ணகத்திற்கோதிய தரவின்றித் தாழிசையே பெற்றும், அவை பரணிப்பாட்டாகிய தேவபாணி முதலியன.

இது தரவோடு பட்ட தாழிசை யிலக்கணமின்றி வேறாய் வருமென்றற்குத் தரவின்றாகியெனத் தரவை விலக்கினார். எனவே, இவை யொத்து மூன்றாதலுந் தரவிற் சுருங்கி நான்கும் மூன்றும் அடிபெறுதலும், ஒருபொருண்மேல் வருதலும், தாழம்பட்ட ஓசையவே யாதலும், கடப்பாடின்[1] றென்றவாறாம். அங்ஙனங் கூறியவதனானே பரணியு ளெல்லா மீரடியானே வருதலும் தாழம்பட்டன ஓசையல்லன விராஅய் வருதலும், முடுகி வருதலும், இனித் தாழிசை மூன்றடுக்கித் தனியே வருவழி ஈரடி முதலிய பலவடியான் வருதலும், இனிப் பத்தும் பதினொான்றும் பன்னிரண்டுமாகி ஒருபொருண்மேல் வரும் பதிகப்பாட்டு நான்கடியின் ஏறாது வருதலும், அங்ஙனம் வருங்காற் றாழ்ந்தவோசை பெற்றும் பெறாதும் வருதலும், அவை யிருசீரெண் முதல் எண்சீரளவும் வருதலும் என்பது; இன்னோரன்ன பல பகுதியெல்லாம் வரையறை யின்றித் தழுவப்பட்டன. இவ் வேறுபாடெல்லா முளவேனுந் தாழம்பட்ட வோசை பெரும்பான்மைய வாதலிற் றாழிசை யென்றார்.

இங்ஙனந் தாழிசைப்பேறு விதந்தோதவே யொழிந்த வுறுப் பெல்லாம் விலக்குண்டமை பெற்றாம். தாழிசையுறுப்புப் பெறுவதியாதெனிற் கொச்சகவொருபோகெனப் பொதுவகையா னின்ற செய்யுளாம். அது நோக்கியாயிற்றுப் பலவுமெண்ணி வேற்றுமையுடைய தென் றொருமையாற் கூறியது.

முதற்றொடை பெருகிச் சுருங்குமா றெண்ணின்றித் தனியே யெண்ணலாகாமையானும், ஓசை வேறாதலானும், ஈரடித் தாழிசை பேரெண்ணாகா.

(எ-டு)"உளையாழி யோரேழு மொருசெலுவி னொடுங்குதலான்
விளையாட நீர்பெறா மீனுருவம் பரவுதுமே................"

என்றாற் போல்வன பரணிச்செய்யுளுள் பயின்றுவரும்.

இவ்வாறு பல தொடர்ந்துவரிற் பஃறாழிசைக் கொச்சகமென்றும், மூன்று தாழிசை வரிற் சிஃறாழிசைக் கொச்சகமென்றும் கூறவுமமையும்.

மற்றுப் பரணியாவது காடுகெழு செல்விக்குப் பரணிநாட் கூழுந் துணங்கையுங்[2] கொடுத்து வழிபடுவதோர் வழக்குப்பற்றியது. அது பாட்டுடைத் தலைவனைப் பெய்து கூறலிற் புறத்திணை பலவும் விராயிற்றேனுந் தேவபாணியேயாம்.

---

1. கடப்பாடு - கட்டாயம்
2. துணங்கைக் கூத்து

"கன்று குணிலாக் கனியுகுத்த மாயவ
னின்றுநம் மானுள் வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ;

பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவ
னீங்குநம் மானுள் வருமே லவன்வாயி
லாம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ;

கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவ
னெல்லைநம் மானுள் வருமே லவன்வாயின்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ" **(சிலப்.ஆய்ச்சி.399)**

இது படர்க்கைப் பரவலாய்[1], மூன்றடுக்கியவழி மூன்றடியான் வந்தது. இது கந்திருவ மார்க்கத்தா னிடைமடக்கி நான்கடியாமாறு முணர்க.

"யானைத்தோல் போர்த்துப் புலியி னுரியுடுத்துக்
கான வெருமைக் கருந்தலைமே னின்றாயால்
வானோர் வணங்க மறைமேன் மறையாகி
ஞானக் கொழுந்தாய் நடுக்கின்றி யேநிற்பாய்;

வரிவளைக்கை வாளேந்தி மாமயிடற் செற்றுக்
கரிய திரிகோட்டுக் கலைமிசைமே னின்றாயா
லரியரன்பூ மேலா னகமலர்மேன் மன்னும்
விரிகதி ரஞ்சோதி விளக்காகி யேநிற்பாய்;

சங்கமும் சக்கரமுந் தாமரைக் கையேந்திச்
செங்க ணரிமான் சினவிடைமே னின்றாயாற்
கங்கை முடிக்கணிந்த கண்ணுதலோன் பாகத்து
மங்கை யுருவாய் மறைபோற்ற வேநிற்பாய்"

**(சிலப்.வேட்டுவவரி)**

இவை முன்னிலைப் பரவலாய் மூன்றடுக்கி நான்கடியான் வந்தன.

பதிகப்பாட்டிற்கு ஈண்டுக் கூறிய வேறுபாடுகள் திருவாய்மொழித் திருப்பாட்டுத் திருவாசகம் என்கின்ற கொச்சகவொருபோகுகளிற் காண்க. அவை உலகவழக்கன்மையிற் காட்டா மாயினாம்.[2]

'ஆகி' யென்றதனான் ஒருபொருண்மேன் மூன்றடுக்கி வருதலுந் தேவபாணியன்றி யாப்பினும் வேறுபட்டு வருவனவற்றின் கூறாய் அங்ஙனம் மூன்றடுக்கி வாராது தொடர்ந்த பொருளாய் நான்குமுதற் பலவு மடுக்கி வருதலும், தனிச்சொற் பெற்று வருதலும், தாழம்பட்ட

1. கண்ணனை முன்னிலைப்படுத்தாமல் படர்க்கைப்படுத்திப் பரவலாக.
2. உலகவரைப்பற்றிய வழக்கன்மையின் கடவுளரைப்பற்றிய வழக்கானமையின்.

வோசையின்றி மூன்றடுக்கி வருதலும், சுட்டி யொருவர் பெயர்கொண்டு அவர்களையுந் தெய்வமென்றே பரவலும் அடுக்கிவந்து அடக்கியலான் முடிதலும். பிறவுங் கொள்க.

(எ-டு)“சுடரொடு திரிதரு முனிவரு மமரரு
மிடர்கெட வருளுநின் னிணையடி தொழுதே
மடல்வலி யெயினர்நின் னடிதொடு கடனிது
மிடறுகு குருதிகொள் விறறரு விலையே;

அணிமுடி யமரர்த மரசொடு பணிதரு
மணியுரு வினைநின மலரடி தொழுதேங்
கணநிரை பெறுவிற லெயினிடு கடனிது
நிணனுகு குருதிகொ ணிகரடு விலையே;

துடியொடு சிறுபறை வயிரொடு துவைசெய
வெடிபட வருபவ ரெயினர்க ளரையிரு
ளடுபுலி யனையவர் குமரிநி னடிதொடு
படுகட னிதுவுகு பலிமுக மடையே” (சிலப்.வேட்டுவவரி)

இவை மூன்றடுக்கி முடுகியலாய் வந்த தாழிசைக் கொச்சக வொருபோகு.

“என்றிவை சொல்லி யழுவாள் கணவன்றன்
பொன்றுஞ்சு மார்பம் பொருந்தத் தழீஇக்கொள்ள
நின்றா ளெழுந்து நிறைமதி வாண்முகங்
கன்றிய தென்றுகண் ணீர்கையின் மாற்றியபின்
னழுதேங்கி நிலத்தின்வீழ்ந் தாயிழையாள் தன்கணவன்
றொழுதகை திருந்தடியைத் துணைவளைக்கை யாற்பற்றப்
பழுதொழிந் தெழுந்திருந்தான் பல்லமரர் குழாத்துளா
னெழுதெழின் மலருண்க ணிருந்தைக்க வெனப்போனான்
மாயங்கொன் மற்றென்கொன் மருட்டியதோர் தெய்வங்கொல்
போயெங்கு நாடுகேன் பொருளுரையோ விதுவென்று
காய்சினந் தணிந்தன்றிக் கணவனைக் கைகூடேன்
றீவேந்தன் றனைக்கண்டு திறங்கேட்பல் யானென்றா
ளென்றா ளெழுந்தா ளிடருற்ற தீக்கனா
நின்றா ணினைந்தா ணெடுங்கயற்க ணீர்சோர
நின்றா ணினைந்தா ணெடுங்கயற்க ணீர்துடையாச்
சென்றா ளரசன் செழுங்கோயில் வாயில்வாய்”

(சிலப்.ஊர்சூழ்வரி)

இவை தொடர்ந்த பொருளாய் நான்கடுக்கின.

“சொன்னது, அரசுறை கோயி லணியார் ஞெகிழங்
கரையாமல் வாங்கிய கள்வனா மென்றே

கரையாமல் வாங்கிய கள்வனா மென்றே
குரைகழன் மாக்கள் கொலைகுறித் தாரே,எனப்
பொங்கி யெழுந்தாள் விழுந்தாள் பொழிகதிர்த்
திங்கள் முகிலோடுஞ் சேணிலங் கொண்டெனச்
செங்கண் சிவப்ப வழுதாடன் கேள்வனை
யெங்கணாஅ வென்னா வினைந்தேங்கி மாழ்குவாள்"

(சிலப்.துன்பமாலை)

இவை தனிச்சொற் பெற்றுத் தனிவந்தன.

"இளமா வெயிற்றி யிவைகாணின் னையர்
தலைநாளை வேட்டத்துத் தந்த நிரைகள்
கொல்லன் றுடியன் கொளைபுணர்சீர் வல்ல
நல்லியாழ்ப் பாணர்தம் முன்றில் நிறைந்தன;

முருந்தே ரிளநகாய் காணாய்நின் னையர்
கரந்தை யலறக் கடந்த நிரைகள்
கள்விலை யாட்டிநல் வேய்தெரி கானவன்
புள்வாய்ப்பச் சொன்ன கணிமுன்றில் நிறைந்தன;

கயமல ருண்கண்ணாய் காணாய்நின் னைய
ரயலூ ரலற வெறிந்தநல் லாக்க
ணயனின் மொழிநர் நரைமுது தாடி
யெயின ரெயிற்றியர் முன்றில் நிறைந்தன." (சிலப்.வேட்டுவரி)

இவை தாழிசை யோசையின்றி யடுக்கி வந்தன.

"கோவா மலையாரங் கோத்த கடலாரந்
தேவர்கோன் பூணாரந் தென்னர்கோன் மார்பினவே
தேவர்கோன் பூணாரம் பூண்டான் செழுந்துவரைக்
கோகுல மேய்த்துக் குருந்தொசித்தா வென்பரால்;

பொன்னிமயக் கோட்டுப் புலிபொறித்து மண்ணாண்டான்
மன்னன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன்
மன்னன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன்
பொன்னந் திகிரிப் பொருபடையா னென்பரால்;

முந்நீரி னுள்புக்கு மூவாக் கடம்பெறிந்தான்
மன்னர்கோன் சேரன் வளவஞ்சி வாழ்வேந்தன்
மன்னர்கோன் சேரன் வளவஞ்சி வாழ்வேந்தன்
கன்னவிறோ ளோச்சிக் கடல்கடைந்தா வென்பரால்"

(சிலப்.)

இவை அரசரைத் தெய்வமென்றே பரவியன.

குன்றக் குரவையுள் "சீர்கெழு செந்தில்" என்னுந் தாழிசை முதற் பலவடுக்கி வந்து பின்னர் "என்றியாம் பாடக்..........கேட்டு" என்று அடக்கியற் பொருள்பெற்று முடிந்தவாறு காண்க. இன்னுஞ் சிலப்பதிகாரத்துள் வரும் வேறுபாடெல்லாம் இவ் விலேசான் முடித்துக் கொள்க. 'தாழிசை யின்றித் தரவுடைத் தாகியு' மென்பது மேற்கூறிய தாழிசையின்றித் தரவே பெற்று வருதலும் எ-று.

ஈண்டுந் தரவோசை பெறுவது பொதுவாய்நின்ற கொச்சகவொரு போகென்னுஞ் செய்யுள், அது தாழிசையோடுபட்ட தரவிலக்கணத்தில் திரிந்து வருமென்றற்குத் தாழிசையின்றியென விலக்கினார். அது தொடர் நிலைச் செய்யுளாய்வருந் தேவபாணியுந் தரவிணைக் கொச்சகமாய் வருவது நான்கும், ஆறும், எட்டும் அடியாய் வருதல் கடப்பாடின் றென்பதூஉங் கொள்க. தரவென்னும் உறுப்பைச் செய்யுளுடைத் தெனவே யொழிந்த வுறுப்பு விலக்குண்டன.

'ஆகியு' மென்றதனால் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்றும் பெறாதும் வருதலும், பெரும்பான்மை யிரண்டிணைதலுங் கொள்க. அவை தனிச்சொல்லுஞ் சுரிதகமும் பெற்ற தரவுகொச்சகந் தரவிணைக் கொச்சகமெனப் பெயர் கூறப்படும். இதனால் தரவிலக்கண மிழிந்த தேனும் பெரும்பான்மை தாழம்பட்ட வோசைக் குரித்தன்றென்பது நேர்ந்தவாறாயிற்று.

"பூணாக வென்பணிந்தான் பூதத்தான் வேதத்தான்
கோணாகக் கச்சையான் கோடேந்து கொல்லேற்றான்
மாணாக வெண்ணூலான் வாணுதலோர் பாகங்கொண்
டூணாகும் பிச்சையா னுண்ணாத நஞ்சுண்டான்
வான்யாறு தாழ்ந்த சடையான் மழுவலத்தான்
யானார்வஞ் செய்யு மிறை;

எனவாங்குப் பாடி யிறைஞ்சுவோர்க் கெல்லாம்
வினைமாசு தீர விளக்காகுந் தோற்றத்
தனையோய் மறலிக்கு மச்சம் பயந்த
புனைபூங் கழற்கான்மேற் பூவோடு நீர்தூஉய்
மனைமாண்ட பாக முளப்பட வாழ்த்தி
யெனநாளு மேத்துது மெந்தையே நின்னை
நினையா தொழியற்க நெஞ்சு."

இது தரவிணைக் கொச்சகம்.

தனிச்சொல்லுஞ் சுரிதகமும் பெற்றன வந்துழிக் காண்க.

இதனானே தொடர்நிலைச் செய்யுளின் முதற்கணின்ற தேவபாணி தன் பொருளோடு தான் முடிந்தன தனித் தரவுகொச்சகமாம்.

(எ-டு)"உலக மூன்று மொருங்குட னேத்துமண்
டிலக மாய திறலறி வன்னடி
வழுவி னெஞ்சொடு வாலிதி னாற்றவுந்
தொழுவ றொல்வினை நீங்குக வென்றியான்." **(வளையாபதி)**

"மூவா முதலா வுலகம்மொரு மூன்று மேத்தத்
தாவாத வின்பந் தலையாயது தன்னி னெய்தி
யோவாது நின்றகுணத் தொண்ணிதிச் செல்வ னென்ப
தேவாதி தேவனவன் சேவடி சேர்து மன்றே"

**(சிந்தா.கடவுள்வாழ்த்து-1)**

என வரும். இவ் வளையாபதி முதலியவற்றுள் தேவபாணியல்லாத தொடர்பொருட் செய்யுள்களை,

"யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது"

என்றதால் தரவுகொச்சகமென்று கொள்க. அவை தம் பொருளோடு தாம் முடியாமையின்.

எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியும் என்பது, வண்ணகத்திற் கோதிய எண்ணுஞ் சின்னமு மின்றி ஒழிந்த தரவு தாழிசை தனிச்சொல் சுரிதகமென்னும் நான்குறுப்புடையதுங் கொச்சகவொருபோகாம் எ-று.

இதற்கு இல்லா ஆறுறுப்பையே கூறிற்று, உள்ளது நிற்றலை வேண்டி.

(எ-டு)"ஆறறி யந்தணர்க் கருமறை பலபகர்ந்து
தேறுநீர் சடைக்கரந்து திரிபுரந் தீமடுத்துக்
கூறாமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி
மாறாப்போர் மணிமிடற்ற வெண்ணகையாய் கேளினி;

படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ
கொடுகொட்டி யாடுங்காற் கோடுய ரகலல்குற்
கொடிபுரை நுசுப்பினாள் கொண்டசீர் தருவாளோ;

மண்டமர் பலகடந்து மதுகையா னீறணிந்து
பண்டரங்க மாடுங்காற் பணையெழி லணைமென்றோள்
வண்டரற்றுங் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ;

கொலையுழுவைத் தோலசைஇக் கொன்றைத்தார் சுவற்புரளத்
தலையங்கை கொண்டுநீ காபால மாடுங்கான்
முலையணிந்த முறுவலாள் முற்பாணி தருவாளோ;

எனவாங்கு,
பாணியுந் தூக்குஞ் சீரு மென்றிவை
மாணிழை யரிவை காப்ப
வாணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி."

**(கலி.கடவுள் வாழ்த்து)**

இது நான்குறுப்பான் வந்ததேனுந் தேவபாணியாய் வருதலின் முதனிலை யொத்தாழிசை யாகாது.

'ஏனை யொன்றே' யென்ற ஒத்தாழிசையே யாமாயினும் அவற்றிற்குரிய எண்ணுஞ் சின்னமும் இழத்தலிற் கொச்சகவொரு போகாயிற்று.

அடக்கிய லின்றி யடிநிமிர்ந் தொழுகியு மென்பது, அடக்கியல் தனித்து வருதலின்றி யவ் வடக்கியலோடு ஒரு செய்யுளாய் அடிபரந் தொழுகியும் அடக்குமியல் பின்றென்றது முற்கூறிய வுறுப்புகளைத் தனியே வந்து அடக்கி நிற்கும் இலக்கண மின்றியே வரும் எ-று.

எனவே,

"எழுசீ ரிறுதியா சிரியங் கலியே" (செய்.79)

"வெண்பா வியலினும் பண்புற முடியும்" (செய்.77)

என்ற விதியாற் பெற்ற இறுதி ஒரு தொடராய் இற்று நிற்றலும், 'அடிநிமிரும்' என்றதனான் முற்கூறியவற்றின் அடி வரையறையை யிகத்தலும், 'ஒழுகும்' என்றதனான் எழுசீ ரிறுதியல்லாத எல்லா வடியுங் கலியேயா யொழுகி வருதலும் பெற்றாம்.

(எ-டு)"மழைநுழைந்து புறப்பட்ட மதியமு ஞாயிறும்போ
லுழைவழங்கு வலம்புரியுந் திகிரியு மொளிசிறப்பப்
பச்சென்ன வானிட்ட வில்லேபோற் பசுந்துழாய்க்
கச்சென்னக் கனல்கின்ற கதிர்முலைமேற் கவின்செய்ய
வம்மேகத் திடைப்பிறந்த நரையுருமே றதிசயிப்ப
மைம்மேனி மருங்கதிர வரியேறு வால்புடைப்ப
விண்டோயு மணிநீல வெற்பிடை வேய்மிடைந்தாங்
கெண்டோளு மிடுநீழ லிளங்கிளிகள் களிகூரக்
கொதியாது கொதித்தெறிந்த கோட்டெருமைத் தலையின்மிசை
மிதியாத சீறடி மிதித்தன போற்றோன்றத்
தாங்கிய புகர்வாளுங் கேடகமுந் தனித்தனி
வாங்கிய கோளரவு மதியமும் போன்றிலங்க
மைதொடுத்த கடற்புறஞ்சூழ் மலையென்ன மணியல்குல்
கொய்துடுத்த பொற்றுகிலின் கொழுஞ்சோதிக் கொழுந்தோட்ட
நீனின்ற வடிவத்தா னெடியோனை முதற்பயந்த
தாயென்று முதுமறை பரவினும்
யாயென் றல்ல தியாந்துணி யலமே"

என வரும்.

தேவபாணியான் வெண்பாவியலான் முடிந்தது வந்துழிக் காண்க.

இக் கருத்தறியாதார் வெண்பாவியலாற் பண்புறமுடிந்த கலியடி யுடையதனை வெண்கலிப்பா வென்பர்.

யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையதென்பது, மேற்கூறியவாறும் இனி வருகின்றவாறுமன்றி யாப்பின் வேறுபடுதலும் பொருளின் வேறுபடுதலும் எ-று.

அவை இருசீர்முதல் எண்சீர்காறும் வந்து முற்கூறியவாறன்றி அடிக்கண் நந்நான்காய் வரும். சில பிறவடி விராயும் வருவனவும், பலவடி வந்தும் நான்கடி வந்தும் பாமயங்கி வருவனவும், இனி யீரடியான் வருவனவற்றுள் ஈற்றடி மிக்குங் குறைந்தும் குறையாதும்வந் தியலசைச் சீர்பெற்று வருவனவும், ஓசையும் பொருளு மினிதாகாது வருவனவும் அவ் விரண்டடிச் செய்யுண் முடிந்து நிற்கவும், இனி மூவடியான் வருவனவற்றுள் ஈற்றடி குறைந்தும் முதலடி மிக்கும் இடையடி குறைந்தும் இறுதியடி மிக்கும் மூன்றடியிற் குறையாதும் பிறவாறாயும் வருவனவும், இம் மூவடி யிற்றபின் ஈற்றடி யொன்றும் இரண்டும் மிக்கு வருவனவும், பிறவாய் வருவனவும், இனி நான்கடியாய் வருவனவற்றுண் முதலிடை கடையிற் குறைந்துவருவனவும் அம் முதலிடை கடைக் கண்ணே ஓரடியு மீரடியுஞ் சீர்மிக்கு வருவனவும், பிறவாறாய் வருவனவும், அந் நான்கடி யிற்றபின் ஈற்றடியொன்றும் இரண்டும் மிக்கு வருவனவும், இங்ஙனம் மிக்கு ஒருபொருண்மேன் மூன்றடுக்கி வருவனவும், பத்தடுக்கி வருவனவும், அளவியலின் வேறுபடுவனவும், இனி யைந்தடியான் வருவனவற்றுள் ஈற்றடி குறைந்து வருவனவும், அவ் வைந்தடி யிற்றபின் ஓரடியும் ஈரடியும் மிக்கு வருவனவும், முச்சீரான் இற்றுச் சிலசீர் மிக்கு வருவனவும், இனி ஆறு முதலிய வடிகளான் வருவனவும் இவ் விலக்கணமெல்லாம் பெற்று வருதலுங் கடவுட் பொருட்டொடர் நிலைகள்.-பல தரவுந் தாழிசையுமாகி யிடைமிடையச் செய்வனவும் அடக்கியலின்றி யடிநிமிர்ந்து அடக்கியல் பெற்று வருதலும் இன்னோரன்ன பல பகுதிகளுங் கொள்ளப்படும். பொருள் வேறுபடுமென்றலிற் புறப்பொருளான் வருவனவுங் கொள்க. இவற்றுட் சில கந்தருவமார்க்கத்தான் இடைமடக்கி வருவனவுங் கொள்க.

(எ-டு)"நெய்யொடு தீயொக்கச்
செய்யானைச் சேர்வார்க்குப்
பொய்யதா வுள்ளமே
மெய்யாதல் வேண்டும்."

இது குறளடி நான்கான் வந்தது. இது குட்டம்படாது.

"மையணி கண்டனை வானோ
ரையனை யாயிரம் பேழ்வாய்ப்
பையர வம்பல பூணு
மெய்யனை மேயது வீடே."

இது சிந்தடி நான்கான் வந்தது.

இவ்வாறு இயலசைச் சீரான் வருவது வந்துழிக் காண்க.

"நீறணிந்த திருமேனி நெருப்புருவங் கிளைத்ததுபோற்
கூறணிந்த குங்குமங்கொண் டொருமுலையோர் குறிசெய்ய
வேறணிந்த சுடரெறிப்ப வேனிலாற் கெரிவிழித்த
வேறணிந்த வெல்கொடியோ யெவ்வுயிர்நிற் றவிர்ந்தனவே"

"வென்றான் வினையின் றொகையாய் விரிந்து தன்க
ணொன்றாய்ப் பரந்த வுணர்வின் னொழியாது முற்றுஞ்
சென்றான் றிகழுஞ் சுடர்சூ ழொளிமூர்த்தி யாகி
நின்றா னடிக்கீழ்ப் பணிந்தார்வினை நீங்கி நின்றார்"

**(சூளா.துறவு-64)**

இது, கொச்சகம்போல அடுக்கிவாராது தாழம்பட்டவோசைத் தரவுகொச்சகம்.

"ஒரு வான்யா றோடுக டாடவிப்
வெரு நாகமே பூணும் பெருமா
னரு வானா னாயினு மன்பர்க்
குரு வாயினா னுள்ளத்தி னுள்ளே."

இது அளவடி நான்காய் நிரையசைச் சீராகிய சொற்கண் வந்து பிறவடி விராஅயிற்று. அசைச்சீரின்றி இங்ஙனம் வருவன தரவு கொச்சகமாம்..

"முழங்குதிரைக் கொற்கை வேந்தன்
முழுதுலக மேவல்செய மொழிசெய் கோமான்
வழங்குதிறல் வாண்மாறன் மாச்செழியன்
றாக்கரிய வைவேல் பாடிக்
கலங்கிநின் றாரெலாங் கருதலா காவண
மிலங்குவா ளிரண்டினா லிருகைவீ சிப்பெயர்ந்
தலங்கன்மா லையவிழ்ந் தாடவா டும்மிவள்
பொலங்கொள்பூந் தடங்கட்கே புரிந்துநின் றாரெலாம்
விலங்கியுள் ளந்தப விளிந்துவே றாபவே."

இது பிறபொருளான் அளவொவ்வாது பலவடி வந்து பாமயங்கிற்று.

"தடந்தாட் கொத்த தமனியச் சிலம்பு
படந்தாழ் கச்சைப் பாம்பொடு மிளிர
வென்றாடு திருத்தாதை வியந்துகை துடிகொட்ட
நின்றாடு மழகளிற்றை நினைவாரோ வினையிலரே."

இது நான்கடியு மொத்துப் பாமயங்கி வந்தது.

"கங்கை சூடிய கபாலிநின் னடியிணை
தங்கு நெஞ்சினர் தளர்வுறு பிறவியை நீப்பர்."

இது ஈரடியா யீற்றடி மிக்கது.

"புனைமலர்க் கடம்பின் பூந்தார்ச் சேந்த
நினையடி பரவுதும் யாம்."

இது ஈரடியா யீற்றடி குறைந்தது.

"கொன்றை வேய்ந்த செல்வ னடியிணை
யென்று மேத்தித் தொழுவோம் யாமே."

இது ஈற்றடி முற்குறையாது இயலசைச்சீ ரடிதோறும் வந்தது.

"அறுவர்க் கறுவரைப் பெற்றுங் கவுந்தி
மறுவறு பத்தினி போல்வைகி னீரே."

இது ஓசையும் பொருளு மினிதாக வந்தது.

"கொன்றைசேர் சடைமுடியோன் கொந்தழல்போன் மேனியோ
னொன்றிய பெண்களை யோவாதே யுள்ளுக
செல்கதி யின்றிச் சிவகதி சேர்வதோர்
நல்லறி வெய்துது நாமே."

இது, ஈரடி யிற்றதன்மே லீற்றடி யிரண்டு மிக்குவந்து ஒன்றுட் பட்டது.

"நண்பிதென்று தீய சொல்லார்
முன்புநின்று முனிவு செய்யா
ரன்பு வேண்டு பவர்."

இது மூன்றடியான் வந்து ஈற்றடி குறைந்து அசைச்சீரா னிற்றது.

"தாளாள ரல்லாதார் தாம்பல ராயக்கா லென்னா மென்னாம்,
யாளியைக் கண்டஞ்சி யானைதன் கோடிரண்டும்
பீலிபோற் சாய்ந்து விடும்பிலிற்றி யாங்கே."

இது முதலடி மிக்கது.

"பூண்ட பறையறையப் பூத மருள
நீண்ட சடையா னாடுமே
நீண்ட சடையா னாடு மென்ப
மாண்ட சாயன் மலைமகள் காணவே காணவே."

இது இடையடி குட்டம்பட்டு இறுதியடி மிக்கது. கந்தருவமார்க் கத்தான் இடைமடக்கி நான்கடியுமாம்.

"வானுற நிமிர்ந்தனை வையக மளந்தனை
பான்மதி விடுத்தனை பல்லுயி ரோம்பினை
நீனிற வண்ணநின் னறைகழல் தொழுதனம்."

இது மூன்றடியிற் குறையாதது.

"பிறையணிந்த சடைமுடியோன் பிஞ்ஞகன் பெம்மான்
கறையணிந்த கண்டத்தான் கையிலங்கு சூலத்

திறையணிந்த நெஞ்சினோர்க் கின்றாம் பிறவி;
இம்மைப் பிணியு மியலும் பசியொடு
தம்மைத் துறந்திடுந் தாவில்புக முளதாம்."

இது மூன்றடி யிற்றதன்மே லீரடி மிக்குவந்தது.

"சதுர்முக வொருவ நின்சர ணடைந்தே
முதிர்மிகு நீரு ளந்துமிவ் வங்க நாவாய்
திருவுறு நிலைமைத்தாய்ப் போதெனக் கூறி நிற்பா
ரதிர்வன ரிருகையு மாற்றுறக் கூப்பி நிற்பார்."

இது நான்கடியாய் முதலடி குறைந்தது.

"தனுவெழ வரிவையைத் தகுமணம் புணர்ப்பின்
முனிவுறு தொழிலினை மூளா
ணனிதவிர்த் திலர்க்கிடு நாடொறு நாடொறுங்
கனியென வினியண்முன் கலந்தமற் றவற்கே."

இது இரண்டாமடி குறைந்து வந்தது.

"கல்லாலந் தன்னிழற்கீழ்க் கல்வித் துறைபயந்த காமர் காட்சி
நல்லானை நல்லா ளொருபாக மாகிய ஞானத் தானை
யெல்லாரு மேத்தப் படுவானை யெஞ்ஞான்றுஞ்
சொல்லாதார்க் கெல்லாந் துயரல்ல
தில்லைத் தொழுமின் கண்டீர்."

இது ஈற்றயலடி குறைந்து, சீரடியாசிரியத்தான் நேரடி முன்னிறு மென்ற விலக்கணக் கொச்சகம் வந்தும் பாவின் வேறுபட்டதாம்.

"வண்டணிகொண்ட மதுமலர்க் கொன்றை யினமாலை
கொண்டணி செஞ்சடைக் கோட்டிளந் திங்கள்போலப்
பண்டணி யாகப் பலர்தொழுங் கங்கைநீர் வைத்தா
னுண்டணி கொண்டநஞ் சுண்பார்க் கமிழ்தா கும்மே."

இது அளவடி யிரண்டும் ஐஞ்சீரடி யிரண்டும் வந்தது.

"கண்டெழப் பாவை தனிக்கரம் பிடிப்ப ராயிற்
கொண்டவற் பேணிக் குடிக்கு விளக்காகும்
நெண்டெழி நெடுமனை தன்னை நீங்கிப்போய்.....
மற்றொரு குழகன் றன்னையே"

இது முதலடி மிக்கது.

"போதுறு முக்குடைப் பொன்னெயி லொருவன்
றாதுறு தாமரை யடியே
தாதுறு தாமரை யடியடைந் தாரெனிற்
றீதுறு தீவினை யிலரே."

இது சிலவடி குறைந் திடைமடக்கிப் பிறவாறாயிற்று. இவை யளவடியின் வேறுபட்டவாறுங் காண்க.

"கடாமுங் குருதியுங் கால்வீழ்த்த பச்சைப்
படாமும் புலித்தோலுஞ் சாத்தும் பரம
னிடாமுண்ட நெற்றியா னெஞ்ஞான்றுங் கங்கை
விடாமுண்ட வார்சடையான் வெண்ணீ றணிந்தான்
மெய்யுறு நோயில்லை வேறோர் பிறப்பில்லை,
யையுறு நெஞ்சில்லை யாகாத தொன்றில்லை."

"வேயே திரண்மென்றோள் வில்லே கொடும்புருவம்
வாயே வளர்பவள மாந்தளிரே மாமேனி
நோயே முலைசுமப்ப வென்றோர்க் கருகிருந்தா
ரேயே யிவளொருத்தி பேடியோ வென்றார்
எரிமணிப்பூண் மேகலையார் பேடியோ வென்றார்"

**(சிந்தா.652)**

இவை, நான்கடிச் செய்யு ளிற்றபின் ஈற்றடி யிரண்டும், ஒன்றும் மிக்கு வந்தன.

"மூவுலகு மீரடியான் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பியொடுங் கான்போந்து
சோவரணம் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே,
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே;

பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்
விரிகமல வுந்தியுடை விண்ணவனைக் கண்ணுந்
திருவடியுங் கையுங் கனிவாயுஞ் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்ன கண்ணே;

மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சங்
கடந்தானை நூற்றுவர்பா னாற்றிசையும் போற்றப்
படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே
நாராய ணாவென்னா நாவென்ன நாவே;" **(சிலப்.)**

இவை, படர்க்கைப் பரவலாய் ஒருபொருண்மேன் மூன்றடுக்கி நான்கடி யிற்றபின் ஓரடி மிக்குவந்தன.

இவ்வாறே பத்தடுக்கி யொருபொருண்மேற் பதிகப்பாட்டாய் வருவனவும் இதனா னமைக்க.

"வெறியுறு கமழ்கண்ணி வே......பின்"

இது சிந்தடியான் வந்து ஈற்றடி குட்டம்பட்டது.

"வாய்வதின் வந்த குரவையின் வந்தீண்டு
மாய மடமகளி ரெல்லீருங் கேட்டீமி
னாய மடமகளி ரெல்லீருங் கேட்டைக்க
பாய்திரை வேலிப் படுபொரு ணீயறிதி
காய்கதிர்ச் செல்வனே கள்வனோ வென்கணவன்
கள்வனோ வல்லன் கருங்கயற்கண் மாதரா
யொள்ளெரி யுண்ணுமிவ் வூரென்ற தொருகுரல்."

**(சிலப்.துன்பமாலை)**

இது, ஐந்தடிச் செய்யுண் முடிந்தபின் ஈரடி மிக்கது.

"கோழியுங் கூவின.....வாய்"

இது, ஐந்தடியான் வந்து ஈற்றடி முச்சீரான் இற்று அடி யீற்றின்கண் இருசீர் மிக்கது. திருவெம்பாவை யெட்டடியான் வந்திவ்வா றிற்றன.

இக்காலத்து ஒருபோகுகளில் தரவுந் தாழிசையும் இடைமிடைந்து வருமாறு காண்க. பிறவும் வந்துழிக் காண்க.

இவையெல்லாங் கொச்சகமாமென்று கூறுவர் புலவர் எ-று.

இனி யிவ்வாறு வந்த கொச்சகங்களை யெல்லா மொரு வரையறைப்படுத்துப் பாத்தோறு மினஞ்சேர்த்திப் பண்ணிற்குத் திறம்போலப் பின்னுள்ள ஆசிரிய ரடக்குவர்; அதனை அகத்தியமுந் தொல்காப்பியமும் உணர்ந்து அவர்தங் கருத்தறிந்த ஆசிரியர் அவ்வா றடக்காமைக்குக் காரணங் கூறுவர்.

அவர் கூறுமாறு:

"கொன்றை வேய்ந்த செல்வ னடியை
..........................................................நாமே"

ஈரடியான் வருதலின் வெண்செந்துறை யென்பார்க்கு ஒருசீர் குறைவின்றி வருதலின் வெண்பாவிற் கினமாகாது கலிப்பாவி னொருகூற்றிற் கினமாதலுஞ் சீரானுந் தளையானும் ஆசிரியத்திற் கினமாதலு முடைத்தென்று மறுப்பர். இனிச் சந்தஞ் சிதைந்து புன்பொருளாய் வருவனவற்றைத் தாழிசையெனிற் றாழம்பட்ட வோசையும் விழுமிய பொருளு மில்லனவற்றிற்கு இப் பெயர் கூறின், முற்கூறிய தாழிசைகட்குஞ் சந்தஞ் சிதைந்து புன்பொருளாய் வருதலுரித்துமாம். அதனான் அப் பெயராகாதெனவு மறுப்பர். "கன்று குணிலா" (சிலப்.ஆய்ச்சி.) இது வெண்டளையான் வருதலின் ஆசிரியத்திற்

கினமாகாதென மறுப்பர். இனி இது நான்கடியான் வருமேற் கலிவிருத்தமா மென்பார்க்கு,

"நெருப்புக் கிழித்து விழித்ததோர் நெற்றி
யுருப்பிற் பொடிபட் டுருவிழந்த காம
னருப்புக் கணையா னடப்பட்டார் மாதர்
விருப்புச் செயநின்னை விரும்புகின் றாரே"

என்றது காட்ட வெண்டளை தட்டலின் வெண்டாழிசைக்கு இழுக்கின்மையுங் கலித்தளையின்மையிற் கலிக்கு இனமாகாமையுங் கூறி மறுப்பர். இனிக் குறளடியானுஞ் சிந்தடியானும் வருவனவற்றைச் சீரளவான் வஞ்சிக்கினமென்பார்க்கு அவை நான்கடியான் வருதலானும், பா வேறுபடுதலானுஞ் சீர் இயற்சீராகலானும் ஆகாதென்ப. குறளடிச் செய்யுண் மூன்றுவரிற் றாழிசையெனவுஞ் சிந்தடிச் செய்யுண் மூன்று வாராவெனவுங் கூறின் அதற்கும் ஓர் காரணங்கூற லரிதென மறுப்பர்; பிறவு மிவ்வாறு ஒன்றற்கினமாயது ஒன்றற்கினமாயும் வருதலின் இனஞ்சேர்த்த லாகாதென மறுப்பர்.

இங்ஙனம் இனஞ்சேர்த்துதற் கரியவற்றைக் கலிப்பாவென அடக்கியது பெரும்பான்மை கலிக்கேற்ற வோசையே பெற்று வருதலின். இத் தொல்காப்பியம் "முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணி" (தொல். பாயிரம்) நூல் செய்தலின் எல்லாவற்றிற்குமொரு பரிகாரங்கொடுத்துக் கொச்சகத்துள் அடக்கினார். அது மேற்றொட்டு வந்த மரபு. இனிப் பொருள் வேறுபடுதலாவன; தேவரைப் படர்க்கையாக்கிக் கூறலுஞ் சுட்டி யொருவர்ப் பெயர்கொளப்படுதலும், புறப்பொருளொடு தொடர்தலும், முற்கூறிய பொருள்கள் பிறவாறு வருதலுமாம். இங்ஙனம் பொருள் வேறுபடுதலின் இதனுள் ஓதிய நான்கற்கும் யாப்பு வேறுபட்டவற்றிற்கும் பொது வெட்சி முதல் பாடாண்டிணை யீறாகிய பொருள் வேறுபாடு வரையறை என்னை? அவை முற்கூறிய இரண்டற்கும் உரித்தாகலின்; அது பெரும்பான்மை பரணிச் செய்யுட்கு இடைவிராய் வரும். இவ்வாறு கொச்சகத்தினை வரைந்தோதவே ஆசிரியமும் வெண்பாவும் ஒருபொருண்மேற் பல மூன்றும், ஐந்தும், ஏழும், ஒன்பதும், பத்துமாகி வருதலும் பிறவாறாய் வருதலும் வரையறை யிலவாயின. அவை ஐங்குறுநூறு, முத்தொள் ளாயிரம், கீழ்க்கணக்கு முதலியவற்றுள்ளும் பிறவற்றுள்ளுங் காண்க. தேவபாணியில்லாச் செய்யுளெல்லாம் யாப்பும் பொருளுஞ்சேர வேறுபடு மென் றுணர்க. அது முற்கூறியவற்றுட் காண்க.

"வெண்பலிச் சாந்த முழுமெய்யு மெய்பூசி
யுண்பலிக் கூரூர் திரிவது மேலிட்டுக்
கண்பலிக் கென்று புகுந்த கபாலிமு
னெண்பலித் தாளிவள் யாதுவாய் வாளே."

இது "காமப் பகுதி கடவுளும் வரையார்" (தொல்.புறத்.28) என்ற பாடாண்டிணையாகலின் பொருள் வேறுபட்டது.

"கன்று குணிலா" (சிலப்.ஆய்ச்சி.) என்பது அந் நிலத்திற்குரிய தெய்வத்தை அவர் பராவுதலிற் கைக்கிளையன்று.

இவை பலவுறுப் பிழந்தனவேனுங் கொச்சகவொருபோகென்னும் பொது விலக்குண்ணாமையிற் பொதுப்பெய ரெல்லாவற்றிற்கு மாகு மென்று எய்துவித்தார்.

'ஆகு'மென்றதனான் ஒருபோகெண்ணாது சிறுபான்மை கொச்சக மென்று வழங்குதலாமென்று கொள்க. (149)

**சிவலிங்கனார்**

**தரவின் றாகித்......................என்ப.**

(இ-ள்) கொச்சக ஒருபோகுவகை வருமாறு:

ஒத்தாழிசைக் கலிப்பாவுக்குரிய உறுப்புகளுள் தரவில்லாமல் தாழிசை முதலிய வுறுப்புகள் பெற்று வருவதும்,

தாழிசையில்லாமல் தரவு முதலிய வுறுப்புகள் பெற்றுவருவதும்,

எண்கள் இடைவந்து தனிச்சொல் இல்லாமல் வருவதும்,

சுரிதகம் இல்லாமல் மற்றை யுறுப்புகளுடன் அடிநிமிர்ந்து வருவதும்.

ஒத்தாழிசைக் கோதப்பட்ட யாப்பின் வேறுபடப் பலவாறு வருவதும்,

ஒத்தாழிசைக்குரிய கடவுள்வாழ்த்துப் பொருண்மையின்றிக் காமப் பொருளில் வருவதும்

என்னும் இவ் வேறுபாடுகளுடன் கொச்சக ஒருபோகு வரும் என்றவாறு.

**புறனடை**

## 453. ஒருபான் சிறுமை இரட்டியதன் உயர்பே. (144)

**இலக்குவனார்**

462. The minimum (of lines) is ten and the maximum is doubled.

**இளம்பூரணர்**

**453. ஒருபான்[1]..........................உயர்பே.**

1. ஒருபான் - ஒருபத்து

*என்-னின், மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட கொச்சகவொருபோகு பத்தடிச் சிறுமையாகவும் இருபதடிப் பெருமையாகவும் வரும் என்றவாறு. (144)

## பேராசிரியர்

**462. ஒருபான் சிறுமை..........னுயர்பே.**

*இஃது, அதிகாரத்தான் மேல்நின்ற நான்கனுள் (461) இறுதிநின்ற கொச்சகவொருபோகிற்கு அளவுணர்த்துகின்றது; ஒழிந்தவற்றுக்கெல்லாம் உள்ளுறுப்புப்பற்றி இரண்டளவை கூறி அங்ஙனங் கூறப்படாததற்கும் அவற்றோடு இனம்பற்றி ஈண்டை அளவு கூறினமையின்.*

(இ-ள்) பத்தடியிற் சுருங்காது இருபதடியி னேறாது வரும் அடக்கியலின்றி அடிநிமிர்ந்தொழுகு மெனப்பட்ட கொச்சகவொருபோகு என்றவாறு.

முன்னர் நால்வகையாற் பகுத்து நிறீஇ அதற்கிடையின்றி 'அது' என்று ஒருமையாற் சுட்டிக் கூறினமையானும், மேல் 'நிமிர்ந்தொழுகும்' என்றக்கால் அடி எத்துணையும் பலவாமென்று ஐயுறுதலை விலக்கல் வேண்டுவதாகலானும் 'ஏற்புழிக் கோடல்' (665) என்பதனானு மெல்லாம் அதுவே[1] கொள்ளப்பட்டது; அவற்றுக்குச் செய்யுள்:

"தடங்கடற் பூத்த தாமரை மலராகி
யடங்காத முரற்சியா னருமறை வண்டிசைப்ப
வாயிர வாராழி யவிரிதழின் வெளிப்பட்ட
சேயித ழெனத்தோன்றுஞ் செழும்பகலி னிரவகற்றிப்
படுபனிப் பகைநீங்கப் பருவத்து மழையானே
விடுமழை மறுத்திடினு மென்மலரின் மதுமழையா
னெடுநிலங் குளிர்கூர நீர்மைசா னிழனாறி
யண்டங்கள் பலபயந்த வயன்முதலா மிமையோரைக்
கொண்டங்கு வெளிப்படுத்த கொள்கையை யாகலி
னோங்குயர் பருதியஞ் செல்வநின்
னீங்கா வுள்ள நீங்கன்மா ரெமக்கே"

என்பது பத்தடியிற் சுருங்காது (இருபதடியி னேறாது) வரும்.

"அடக்கிய யின்றி யடிநிமிர்ந் தொழுகும்" (461)

எனப்பட்ட கொச்சகவொருபோகென்றவாறு. இருபதடியான் வருவது வந்தவழிக் கண்டுகொள்க. (150)

---

1. அதுவே - கொச்சகவொருபோகுவே

## நச்சினார்க்கினியர்

**150. ஒருபான் சிறுமை..............னுயர்பே.**

*இது, அதிகாரத்தானின்ற நான்கினுள் இறுதிநின்ற அடக்கியலின்றி யடிநிமிர்ந்த கொச்சக வொருபோகிற்கு அளவு கூறுகின்றது.*

(இ-ள்) ஒழிந்த கலிக்கெல்லாம் உள்ளுறுப்புப்பற்றி யளவு கூறினார், பத்தடியிற் சுருங்காது இருபதடியி னேறாது வரும் அடக்கியலின்றி அடிநிமிர்ந் தொழுகுமென்ற கொச்சக வொருபோகு எ-று.

இது முன்னடி நிமிர்ந்தொழுகு மென்றதற்கோர் வரையறை கூறி ஐயமகற்றியது. இஃதேற்புழிக்கோட லென்பதனானும் அதுவென்ற ஒருமையானுங் கொண்டது.

(எ-டு)"தடங்கடற் பூத்த தாமரை மலராகி
யடங்காத முரற்சியா னருமறை வண்டிசைப்ப
வாயிர வாராழி யவிரிதழின் வெளிப்பட்ட
சேயித ழெனத்தோன்றுஞ் செழும்பகலி னிரவகற்றிப்
படுமணிப் பகைநீங்கப் பருவத்து மழையானே
நெடுநிலங் குளிர்கூர நீர்மைசா னிழனாறி
யண்டங்கள் பலபயந்த வயன்முதலா மிமையோரைக்
கொண்டங்கு வெளிப்படுத்த கொள்கையை யாதலி
னோங்குயர் பருதியஞ் செல்வநின்
னீங்கா வுள்ள நீங்கன்மா ரெமக்கே."

இது, பத்தடியிற் சுருங்காது அடக்கியலின்றி யடிநிமிர்ந் தொழுகியது. மேல் இருபதடி வந்துழிக் காண்க. (150)

## சிவலிங்கனார்

**ஒருபான்.........உயர்பே.**

(இ-ள்) கொச்சக ஒருபோகுக்குச் சிறுமை பத்தடியாம்; உயர்வு இருபடியாம், எ-று.

### அம்போதரங்கவொருபோகு அடிவரையறை

**454. அம்போத ரங்கம் அறுபதிற் றடித்தே**
**செம்பால் வாரஞ் சிறுமைக் கெல்லை. (145)**

## இலக்குவனார்

463. *Ambōtharaṅgam* is of sixty lines. The minimum limit is having either half or half of half.

## இளம்பூரணர்

**454. அம்போத ரங்கம்......கெல்லை.**

*என்-னின், அம்போதரங்க வொருபோகுக்கு அடி வரையறை உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) அம்போதரங்க வொருபோகு அறுபதடி பெருமைக் கெல்லையாம்; நடுவாகிய நிலை சிறுமைக் கெல்லையாம் என்றவாறு.

செம்பால் வாரம் என்பது செம்பாதி எனவுமாம்;[1] முப்பதடிச் சிறுமை என்றவாறு. (145)

## பேராசிரியர்

**463. அம்போ தரங்க..........................கெல்லை.**

*மேனின்ற அதிகாரத்தான் இதுவுங் கடவுள் வாழ்த்துப் பொருட்டாகிய அம்போதரங்க வொருபோகிற்கு அடிவரையறை கூறுகின்றது.*

(இ-ள்) அம்போதரங்க வொருபோகுந் தன் உறுப்பெல்லாங் கூடி அறுபதடித்தாகியும், அதன் செம்பாலாகிய முப்பதடித்தாகியும், அதன் வாரமாகிய பதினைந்தடியாகியுஞ் சிற்றெல்லை பெறும் என்றவாறு.

எனவே, இது தலையள வம்போதரங்கவொருபோகும், இடையள வம்போதரங்கவொருபோகும், கடையள வம்போதரங்கவொருபோகுமென மூன்றற்குஞ் சிற்றெல்லை கூறியவாறாயிற்று.

அவற்றுக்குப் பேரெல்லை கூறுமா றென்னையெனின், அறுபதிற்றடித்தெனத் தலையளவிற்கு வேறுகூறி, அவ் வளவைப்பற்றி அதன் செம்பாலும் அதன் வாரமுமெனப் பாகஞ் செய்து வந்தானாகலாற் கடையள வம்போதரங்கத்திற்குச் சிற்றெல்லை பதினைந்தாம். கடையள வம்போதரங்கத்திற்குச் சிற்றெல்லை பதினைந்தாகியவழிப் பேரெல்லை முப்பதின்காறும் உயருமெனவும் இடையளவிற்குச் சிற்றெல்லை முப்பதாகியவழிப் பேரெல்லை அறுபதின்காறும் உயருமெனவும், தலையளவிற்குச் சிற்றெல்லை அறுபதாகியவழி அதனையும் இவ்வாறே இரட்டிப்ப அதன் பேரெல்லை நூற்றிருபதாமெனவும் கொள்ளவைத்தா னென்பது.[2] அங்ஙனம் நூற்றிருபதாங்கான் மேனின்ற அதிகாரத்தால்

---

1. பால் - பகுதி - செம்பால் - சரிபாதி - அறுபதுக்குச் சரிபாதி முப்பது. செம்பால் வாரம் - சரிபாதியாகிய பாதி - அதாவது செம்பாலாகிய வாரம் எனக் கொண்டார் இளம்பூரணர். பேராசிரியரும், நச்சினார்க்கினியரும் செம்பால் என்பதற்குச் சரிபாதி என்றும், வாரம் என்பதற்கு அதனிற் பாதி என்றும் கொண்டு முப்பதும் பதினைந்தும் என்பர். அவர் உரைகளிற் காண்க.

2. இதனை நச்சினார்க்கினியர் மறுப்பர்; காண்க.

தரவிற்கெல்லை இருபஃதாகவும், அதனோடொப்ப வருதலிலக் கணத்ததாகிய அடக்கியல் இருபதடியாகவும் நாற்பதடி பெறப்படும்.

இனி, சிற்றெண் பதினாறும் அராகவடி நான்குமாக இருபதடி பெறப்படுங் கொச்சகம் இருமூன்றாகிய பத்தடியின் இகவாது அறுபதடி பெறுமென்றவா றாயிற்று. இனி, பதினைந்தாங்கால் தரவு இரண்டடியும், கொச்சகம் மூன்றாகி ஆறடியும், அராகவடி ஒன்றும், சிற்றெண் நான்கும், அடக்கியல் இரண்டுமெனப் பதினைந்தடியாம். ஒழிந்த இடையளவிற்குந் தலையளவிற்கும் இவ்வாறே[1] வருமென்றறிந்து கொள்க. இவ் வுறுப்புகளை மேற்கூறுகின்றானாகலின் ஈண்டு அளவை கூறினானென்பது. கலிப்பாவினுள் உறுப்பிற்கெல்லாம் ஈண்டே வேறு வேறு அளவை கூறி வருகின்றானாகலின் இவற்றுக்கும் அவ்வாறே ஈண்டு அளவை கூறினான் அளவியனுட் கூறாதென்பது.

> "சூத்திரத் துட்பொரு ளின்றியும் யாப்புற
> வின்றி யமையா தியைபவை யெல்லா
> மொன்ற வுரைப்ப துரையெனப் படுமே" (658)

என்பதனான் இதனுள் ளுறுப்பிற்கு அடி வரையறை உய்த்துணர்ந்து காட்டினானா மென்பது. (151)

## நச்சினார்க்கினியர்

**151. அம்போ தரங்கம்...........கெல்லை.**

*இது, மேனின்ற அதிகாரத்தாற் கடவுள்வாழ்த்தாகிய அம்போதரங்க வொருபோகிற்கும் அடிவரையறை கூறுகின்றது.*

(இ-ள்) அம்போதரங்க வொருபோகு தன்னுறுப்பெல்லாங் கூடி யறுபதடித்தாய் ஒவ்வொரு பதத்திற்கும் இரண்டடியாகிய நூற்றிரு பதடியை யுடைத்தாயும் வரும். சிறுமைக் கெல்லை கூறுமிடத்து அவ் வறுபதிற் செம்பாகமாகிய முப்பதடியிற் பாகமாகிய பதினைந்தடியான் வரும் எ-று.

ஏகாரம் எதிர்மறை. அறுபதிற் செம்பால் முப்பதில் வாரம் பதினைந்தென்றுணர்க. எனவே, இடையள வறுபதும், தலையளவு அதனிரட்டியாகிய நூற்றிருபதும், கடையளவு பதினைந்துமாயிற்று.

இனி அறுபதும், முப்பதும், பதினைந்தும் எனச் சிற்றெல்லைக்கே தலையளவு, இடையளவு கூறிற்றெனக் கொண்டு இவற்றில் கடையளவாகிய சிற்றெல்லைக்குப் பேரெல்லை முப்பதும், இடையளவாகிய சிற்றெல்லைக்குப் பேரெல்லை யறுபதுமெனப் பொருளுரைக்கில்[2] தலையளவிற் சிற்றெல்லைக்கும் இடையளவிற்

1. இவ்வாறு பெருக்கி என்க.
2. உரைப்பவர் பேராசிரியர்

பேரெல்லைக்கும் வேறுபாடின்றியும் இடையளவிற் சிற்றெல்லைக்கும் கடையளவிற்கும் வேறுபாடின்றியும் நிற்குமென மறுக்க. அங்ஙனம் நூற்றிருபது தரவிற்கெல்லை மேனின்ற அதிகாரத்தான் இருபதாகவும் அதனோடொத்து வருவிலக்கணத்தவாகிய இருபதடியாகவும், நாற்பதடி பெறப்படும்; சிற்றெண் பதினாறும் அராகம் நான்குமாக இருபதடி பெறப்படும். கொச்சகம் இருமூன்றாகி ஒன்று பத்தடி பெற்று அறுபதடியாம்..

இனி, பதினைந்தடியான் வருவன நெடுங்கொச்சகம் இருமூன்றாகி ஆறும், அராகம் ஒன்றுஞ் சிற்றெண் நான்கும் அடக்கிய லிரண்டுமாகப் பதினைந்தடியாம். இடையளவிற்கும் இவ்வாறே வருமாறறிக.

மேலளவு கூறும்வழிக் கூறாது மேற்கூறுகின்ற பாவிற்கு ஈண்டளவு கூறினார் அதிகாரம்பற்றி. (151)

## சிவலிங்கனார்

**அம்போதரங்.....................கெல்லை.**

(இ-ள்) அம்போதரங்க ஒருபோகு உயர்எல்லையாக அறுபது அடியுடையதாம். சிற்றெல்லை அதன் பாதியாகிய முப்பதடியாம், எ-று.

செம்பால் வாரம் என்பதற்குப் பாதியும் அதன் பாதியும் எனக் கொண்டு அறுபதடி ஒருபோகு தலையள வம்போதரங்க ஒருபோகு என்றும், அதன் பாதி முப்பதடி ஒருபோகு இடையள வம்போதரங்க ஒருபோகு என்றும், அதிற் பாதி பதினைந்தடி ஒருபோகு கடையள வம்போதரங்க ஒருபோகு என்றும் பெயர்பெறும் என்பர் பேராசிரியர். நச்சினார்க்கினியர் இவற்றுக்கு நூற்றிருபதும், அறுபதும், முப்பதும் என வுரைப்பர்.

### அம்போதரங்க வுறுப்பு

**455. எருத்தே கொச்சகம் அராகஞ் சிற்றெண்**
**அடக்கியல் வாரமொ டந்நிலைக் குரித்தே. (146)**

## இலக்குவனார்

464. *Eruththu, koccakam, arākam, sirren* and *adakkiyal vāram* are the parts of it.

## பி.இ.நா.

**யா.வி. 83**

முந்திய தாழிசைக்கு ஈறாய் முறைமுறை
ஒன்றினுக் கொன்று சுருங்கும் உறுப்பினது
அம்போ தரங்க ஒத்தாழி சைக்கலி.

**யா.கா. 31**

தரவொன்று தாழிசை மூன்று தனிச்சொல் சுரிதகமாய்
நிரல்ஒன்றின்............நீர்த்திரைபோல்
மரபொன்று நேரடி முச்சீர் குறள்நடு வேமடுப்பின்
................அம்போத ரங்கஒத் தாழிசையே.

**வீர. 117**

ஐந்துறுப்பு நண்ணுவது அம்போதரங்க ஒத்தாழிசை.

**தொன். 233**

தாழிசைக்கீழ் அம்போதரங்கம் சார அம்போ தரங்கமாம்.

**மு.வீ.யா.செ35**

...........தரவு தாழிசை அம்போ
தரங்கம் தனிச்சொல் சுரிதகம் என்னும்
ஐந்துறுப் பொடும்வரல் அம்போ தரங்கம்.

## இளம்பூரணர்

**455. எருத்தே கொச்சகம்............குரித்தே.**

*என்-னின், அம்போதரங்கத்திற்கு உறுப்பாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஈண்டு எருத்து என்பது தரவு. கொச்சகமும் அராகமும் மேற்சொல்லப்பட்டன. எண்ணினுட் பேரெண்ணிற் சிற்றெண் வரப்பெறுமாயினும் இனிச் சொல்லப்பட்ட உறுப்பு முறையான் வருதலும் மயங்கிவருதலுங் கொள்க.

பரிபாடற்கும் இவைதாமே உறுப்பாயின் அதனோ டிதனிடை வேறுபாடு என்னையெனின், அறுபதிற்றடியிற் குறைந்துவரின் முறை பிறழ்ந்து[1] வருமெனவும் ஒத்துவரின் அறுபதின் மிக்கு வருமெனவுங் கொள்ளப்படும்.

(உ-ம்)“கண்ணகன் இருவிசும்பிற் கதழ்பெயல் கலந்தேற்ற
தண்நறும் பிடவமுந் தவழ்கொடித் தளவமும்
வண்ணவண் தோன்றியும் வயங்கிணர்க் கொன்றையும்
அன்னவை பிறவும் பன்மலர் துதையத்
தழையுங் கோதையும் இழையும் என்றிவை
தைஇனர் மகிழ்ந்து திளைஇ விளையாடும்
மடமொழி யாயத் தவருள் இவள்யார்
உடம்போ டென்னுயிர் புக்கவ ளின்று;

இது தரவு.

1. உறுப்புகளின் வரிசை மாறுபடுதல்

ஓஒஇவள், பொருபுகல் நல்லேறு கொள்பவ ரல்லால்
திருமாமெய் தீண்டலர் என்று கருமமா
எல்லாருங் கேட்ப அறைந்தறைந் தெப்பொழுதுஞ்
சொல்லால் தரப்பட் டவள்;

சொல்லுக, பாணியேம் என்றார் அறைகென்றார் பாரித்தார்
மாணிழை யாறாகச் சாறு;

சாற்றுள், பெடையன்னார் கண்பூத்து நோக்கும்வா யெல்லாம்
மிடைபெறின் நேராத் தகைத்து;

இவை கொச்சகம்.

தகைவகை மிசைமிசைப் பாயியர் ஆர்த்துடன்
எதிரெதிர் சென்றார் பலர்;

கொலைமலி சிலைசெறி செயிரயர் சினஞ்சிறந்
துருத்தெழுந் தோடின்று மேல்;

இவை அராகம்.

எழுந்தது துகள்;
ஏற்றனர் மார்பு;
கவிழ்ந்தன மருப்புக்
கலங்கினர் பலர்;

இவை சிற்றெண்.

அவருள், மலர்மலி புகலெழ அலர்மலி மணிபுரை நிமிர்தோள்
யெருத்தோ டிமிலிடைத் தோன்றினன் தோன்றி
பிணைஇ வருத்தினான் மன்றஅவ் வேறு;

இது முடுகியலடி வந்த கொச்சகம்.

ஏறெவ்வங் காணா எழுந்தார் எவன்கொலோ
வேறுடை நல்லார் பகை;

மடவரே நல்லாயர் மக்கள் நெருநல்
அடலேற் றெருத்திறுத்தார்க் கண்டுமற் றின்று
முடலேறு கோட்சாற்று வார்;

இவையுங் கொச்சகம்.

ஆங்கினி,

தனிச்சொல்.

தண்ணுமைப் பாணி தளரா தெழூஉக
பண்ணமை யின்சீர்க் குரவையுட் டெண்கண்ணித்
திண்தோள் திறலொளி மாயப்போர் மாமேனி
அந்துவ ராடைப் பொதுவனோ டாய்ந்த

முறுவலாள் மென்றோள்பா ராட்டிச் சிறுகுடி
மன்றம் பரந்த துரை." (கலி.102)

இது சுரிதகம்.

பிறவும் இந் நிகரன கொள்க.

யாப்பினும் பொருளினும் வேறுபட்ட கொச்சகவொருபோகை அதன்பி னோதினமையால் இதற்கும்[1] காமப்பொருளே பெறப்பட்டது. (146)

## பேராசிரியர்

**464. எருத்தே கொச்சக.............குரித்தே.**

*இது, முன்னர்க் கூறிய அம்போதரங்கவுறுப்பு இவை ஐந்துமெனக் கூறியவாறு.*

(இ-ள்) தரவும், கொச்சகமும், அராகமும், சிற்றெண்ணும், அடக்கியல் வாரமுமென ஐந்துறுப்புடையது அம்போதரங்க வொருபோகு என்றவாறு.

தரவெனினும் எருத்தெனினு மொக்கும்.

இனி, கொச்சகமென்பது, ஒப்பினாகிய பெயர்; என்னை? பல கோடுபட வடுக்கியுடுக்கும் உடையினைக் கொச்சக மென்ப; அதுபோலச் சிறியவும், பெரியவும் விராயடுக்கியும் தம்மு ளொப்ப வடுக்கியும் செய்யப்படும் பாட்டுகளைக் கொச்சகமென்றா னாகலினென்பது. இக்காலத்தார் (பக்.1137) அதனைப் பெண்டிர்க்குரிய உடையுறுப்பாக்கியுங் கொய்சகமென்று சிதைத்தும் வழங்குப. இவை வெண்பாவாகல் பெரும்பான்மை; வழிமுறை சுருங்கியும் வரையறை யெண்ணுப்பெறும் எண்போலாது பாவினுந் தளையினும் வேறுபட்டுப் பலவாகியும் வருங் கொச்சகமென்பது.

அராகமென்பது அறாது கடுகிச்சேறல்; பிறிதொன்று பெய்து ஆற்றவேண்டுந்துணைச் செய்யதாகிய பொன்னினை அராகித்ததென்ப வாகலின்[2] அதுவும் ஒப்பினாகிய பெயராயிற்று; என்னை? மாத்திரை நீண்டும் துணிந்தும் வாராது குற்றெழுத்துப் பயின்று வந்து நடை பெறுதலின்.

சிற்றெண் என்பது, நால்வகை யெண்ணினும் இறுதி யெண் ணானமையின் அப் பெயர்த்தாயிற்று.

---

1. அம்போதரங்க ஒருபோகு

2. பொடிவைத்துச் செப்பம் செய்து அரத்தால் தேய்த்து வேண்டும் அளவில் செம்மையாகச் செய்யப்பட்ட பொன்னணியினை அராவியது என்பர் ஆகலின், அராவுதலை ராவுதல் என வழங்குவர்.

அறாது கடுகிச்சேறல் அராகம் எனின், ரகர நகர வேறுபாடுண்மையின் காரணப் பொருள் சிறவாது. அராவிய பொன் சுருங்குதுபோல் மாத்திரை நீண்டுவாராது குற்றெழுத்துப் பயின்று சுருங்கிய ஒலியுடையதாதலின் அராகம் எனின் நன்று. (சிவ)

அவ் வுறுப்புகளிற் கூறிய பொருளை அடக்குமியல்பிற்று வாரமாகலின் அதனை அடக்கியல் வாரமென்றான்; அதற்குச் செய்யுள்:

“செஞ்சுடர் வடமேரு விருமருங்கீந் திரிகின்ற
வெஞ்சுடரு மதியமும்போல் வேலொடுகே டகஞ்சுழல
மாயிரு மணிப்பீலி மயிலெருத்திற் றோன்றுங்காற்
சேயொளி கடற்பிறந்த செந்தீயிற் சிறந்தெறிப்ப
மறுவருந்தம் மனத்துவகைக் கலுழ்ச்சியான் வளர்த்தெடுத்த
வறுவருந்தம் முலைசுரந் தகடிருந்தா றமுதூட்ட
வாருருவத் தெயின்மூன்று மொருங்கவித்தோன் வியப்பெய்த
வீருருவத் தொருபெருஞ்சூர் மருங்கறுத்த விகல்வெய்யோய்;

தரவு.

ஆங்க, வினையொழி காலத்து வெவ்வெயிற் கோலத்
தனைவருந் தத்த மறம்புரிந் தாங்கு
முனையடு கொற்றத்து முந்நான் குருவிற்
கனைகடல் சுட்டன கண்;

தேவரு மக்களுஞ் சீற்றத்தா னஞ்சாமைக்
காவல் புரியுங் கதிர்மதி போலுமே
மூவிரு தோன்றன் முகம்;

மடமகள் வள்ளி மணிக்கம் பலம்போல
விடையிடை சுற்றுத லின்றுந் தவிரா
தொடையமை தார்க்கடம்பன் றோள்;

அவ்வழி, அடியிணை சேரா தவுணர் நுங்கிப்
பொடிப்பொடி யாகிய போர்ப்பொடு மாய
விடியுமிழ் வானத் திடைநின்றுங் கூஉங்
கொடியணி கோழிக் குரல்;

விழுச்சீ ரமரர் விசும்பிடைத் தோன்றிப்
பழிச்சிநின் றார்த்தார் பலர்;

தாழிசை.

உருகெழு முருகிய முருமென வதிர்தொறு
மருகெழு சிறகொடு மணவரு மணிமயில்;

பெருகள வருமறை பெறுநெடு மொழியொடு
பொருகள வழியிசை புகல்வன சிலகுறள்;

அராகம்.

சிவந்தன திசை;
சிலம்பின மலை;
நிவந்தன தலை;
நிரம்பின குறை;

ஆர்த்தன மறை;
ஆடினர் பலர்;
போர்த்தன துகள்;
பொழிந்தன மலர்;

சிற்றெண்.

ஆங்கனந் தோற்றிய வடுபோர் வென்றியின்
வீங்கிருந் தொடித்தோள் விடலை நினக்கே
யாமறி யளவையிற் றமிழ்புனைந் தேத்துக
நின்னீ தக்க தாயினு நின்னெதிர்
நாணில மாகல் வேண்டும் யாணர்க்
கடம்புங் களிமயிற் பீலியுந் தடஞ்சுனை
நீரொடு நின்வயி னமர்ந்த
வாராப் புலமை வருகமா ரெமக்கே"

அடக்கியல்.

என்பது இடையள வம்போதரங்க வொருபோகு.

இவ் வுறுப்புகளின் அளவு வேறுவேறு கூறானாயினும் அவற்றுக்கு ஏற்றவாறு அறிந்து செய்யப்படும். இது நாற்பத்து நான்கடியான் வந்தது. ஒழிந்தனவும் இவ்வாறே வரும். இவையெல்லாம் இக்காலத்து வீழ்ந்தனபோலும்.

மற்றுக் கொச்சகவொருபோகினை முற்கூறி அதற்கு அளவை பிற்கூறினான், இதற்காயின் அளவை முற்கூறிய தென்னையெனின், அங்ஙனம் அளவைபெற்ற அம்போதரங்கவொருபோகின் அளவை, இனிக் கூறாது நின்ற கலிப்பா மூன்றற்கும் அளவென்ப தறிவித்தற்கென்பது; அஃதேல் இதனையும் அம்போதரங்கத்திற் களவென வரைந்தோதிய தென்னையெனின், அது தலை, இடை, கடையென மூன்றளவு பெறு மென்றற்கென்பது. இவ் வதிகாரத்தான் வருகின்றவற்றோடு இதற்கு வேற்றுமையிலக்கணம் ஒப்பன அறிந்துகொள்க. வருகின்ற கலிவெண் பாட்டிற்கு,

"வெள்ளடி யியலாற் றிரிபின்றி வரும்" (465)

என்றமையின் அதற்கு இவ் வளவை ஒவ்வாதென்பது. (152)

## நச்சினார்க்கினியர்

**152. எருத்தே கொச்சகம்............குரித்தே.**

*இது, முன்னர்க்கூறிய அம்போதரங்கவுறுப்பு இவை ஐந்துமெனக் கூறியவாறு.*

(இ-ள்) தரவுங் கொச்சகமும் அராகமுஞ் சிற்றெண்ணும் அடக்கியல் வாரமுமென ஐந்துறுப்புடையது அம்போதரங்க வொருபோகு எ-று.

தரவெனினும் எருத்தமெனினும் ஒக்கும்.

பல கோடுபட அடுக்கியுடுக்கும் உடையினைக் கொச்சகமென்ப வாகலின், அதுபோலச் சிறியவும் பெரியவும் விராய் அடுக்கியுந் தம்முளொப்ப வடுக்கியும் வருஞ் செய்யுளைக் கொச்சகமென்றார். இது ஒப்பினாகிய பெயர். இக்காலத்து இது மகளிர்க்குரியதாய்க் கொய்சக மென்று வழங்கிற்று. இது முறையே சுருங்கிவரும் எண்ணுப்போலாது அடியுஞ் சீருந் தளையும் வேறுபட்டு வருமென்றுணர்க.

வெண்பாவாகிற் பெரும்பான்மை. அராகமாயது அறாது கடுகிச் சேறல். பிறிதொன்று பெய்து ஆற்றவேண்டுந்துணைச் செய்யதாகிய பொன்னை அராகித்தது என்பவாகலின் இதுவும் ஒப்பினாகிய பெயர், மாத்திரை நீண்டுந் துணிந்தும் வாராது குற்றெழுத்துப் பயின்று உருண்டு வருதலின்.

சிற்றெண்ணாவது: நால்வகை யெண்ணினும் இறுதி நின்ற எண் வார முற்கூறிற்று.

(எ-டு)"செஞ்சுடர் வடமேரு விருமருங்குந் திரிகின்ற
வெஞ்சுடரு மதியமும்போல் வேலொடுகே டகஞ்சுழல
மாயிரு மணிப்பீலி மயிலெருத்திற் றோன்றுங்காற்
சேயொளி கடற்பிறந்த செந்தீச் சிறந்தெறிப்ப
மறுவருந்தம் மனத்துவகைக் கலுழ்ச்சியான் வளர்த்தெடுத்த
வறுவருந்தம் முலைசுரந்தாங் குகல்விசும்பு சிலதுவற்ற
வூருருவத் தெயின்மூன்று மொருங்கவித்தோன் வியப்பெய்த
ஈருருவத் தொருபெருஞ்சூர் மறுங்கறுத்த விகல்வெய்யோய்;

ஆங்க, வினையொழி காலத்து வெவ்வெயிற் கோலத்
தனைவருந் தத்த மறம்புரிந் தாங்கு
முனையடு கொற்றத்து முன்னான் குருவிற்
கனைகடல் சுட்டன கண்;

தேவரு மக்களுஞ் சீற்றத்தா னஞ்சாமைக்
காவல் புரியுஞ் கதிர்மதி போலு
மூவிரு தோன்றன் முகம்;

மடமகள் வள்ளி மணிக்கம் பலம்போ
லிடையிடை சுற்றுத லின்றுந் தவிரா
தொடையமை தார்க்கடம்பன் றோள்;

அவ்வழி, யடியிணை சேரா வவுணரை நுங்கிப்
பொடிப்பொடி யாகிப் பொருப்பொடு மாய
விடியுமிழ் வானத் திடைநின்று கூஉங்
கொடியணி கோழிக் குரல்;

விழுச்சீ ரமரர் விசும்பிடைத் தோன்றிப்
பழிச்சிநின் றார்த்தார் பலர்;

உருகெழு முருமிய வுருமென வதிர்தொறு
மருகெழு சிறகொடு மணவரு மணிமயில்;

பெருகிய வருமறை பெறுநெடு மொழியொடு
பொருகள வழியிசை புகல்வன சிறுகுறள்;

சிவந்தன திசை;
சிலம்பின மலை;
நிவந்தன தலை;
நிரம்பின குறை;
ஆர்த்தன மறை;
ஆடினர் பலர்;
போர்த்தன துகள்;
பொழிந்தனர் மலர்;

ஆங்கனந் தோன்றிய வடுபோர் வென்றியின்
வீங்கிருந் தொடித்தோள் விடலை நினக்கே
யாமறி யளவையிற் றமிழ்புனைந் தேத்துக
நின்னீ தக்க தாயினு நின்னெதிர்
நாணில மாக வேண்டும் யாணர்க்
கடம்புங் களிமயிற் பீலியுந் தடஞ்சுனை
நீரோடு நின்வயின் மாந்தர்
வாராப் புலமை வருகமா ரெமக்கே”

என்பது இடையளவு அம்போதரங்க வொருபோகு.

இவ் வுறுப்புகளின் அளவு கூறாமையின் ஏற்றவாறறிந்து கூறப் படும். இது நாற்பத்து நான்கடியான் வந்தது. இவை இக்காலத்து மிக வழங்காது.[1]

ஒருபோகு போலன்றி இதற்களவை முற்கூறியது அம்போதரங்க வொருபோகின் அளவே மேற்கூறுகின்ற மூன்று பாக்கட்கும் அளவென்றற்கு. இவ் வதிகாரத்தான் வருகின்றவற்றோடு இதற்குறுப்பிலக்கணம் ஏற்பன வறிந்துகொள்க; வெள்ளடியியலால் திரிவின்றி வருமென்றலின். அவ்வளவை மேல்வருகின்ற கலிவெண்பாட்டிற்கு இன்றென்றுணர்க.

(152)

1. வழங்கா என்றிருத்தல் வேண்டும்

**சிவலிங்கனார்**

**எருத்தே.............குரித்தே.**

(இ-ள்) தரவும், கொச்சகமும், அராகமும், சிற்றெண்ணும், சுரிதகமும் எனும் ஐந்துறுப்பும் அம்போதரங்க ஒருபோகுக்குரித்து, எ-று.

இதில் தனிச்சொல்லும் கொள்க. கொச்சகம் என்றது கொச்சக ஒருபோகின் வகைகளுள் ஏதேனும் ஒன்று. சுரிதகத்து முன் தனிச்சொல் வரும். முறை கூறியவாறே கொள்க.

**கலிவெண்பா**

**456. ஒருபொருள் நுதலிய் வெள்ளடி இயலால்**
**திரிபின்றி முடிவது[1] கலிவெண் பாட்டே. (147)**

**இலக்குவனார்**

465. *Kalivenbāttu* occurs having the lines of *venbā* dealing with one matter.

**பி.இ.நா.**

**யா.வி. 85**

தன்தளை ஓசை தழுவிநின்று ஈற்றடி
வெண்பா இயலது கலிவெண் பாட்டே.

**யா.கா. 32**

வான்தளை தட்டு இசைதன தாகியும் வெண்பா
இயைந்து.........
சிந்தடியால் இறுமாய்விடின் வெண்கலியே.

**வீர. 117**

இறுதிச் சிந்தாய்த் திண்ணிய நேரடி யால்வரும் வெண்கலி.

**தொன். 235**

வெண்கலிக்கு அளவடி பலதளை பலதொடை
மண்டியீற் றசைச்சீர் வந்துசிந் தடியாம்
கலிவெண் பாவெண் கலியென நடப்பினும்
வலிவெண் டளைதவா வரவும் பலதொடை
நேரிசை வெண்பா நேரவும் பெறுமே.

**மு.வீ.யா.செ.48**

கலித்தளை தட்டுக் கலியொலி விரவியும்
வெண்டளை தட்டு வெள்ளொலி தழுவியும்

1. வருவது - பேரா. நச். பாடம்

ஈற்றடி சிந்தடி யாய்வரல் வெண்கலிப்
பாவாம் எனப்பெயர் பகரப் படுமே.

இ.வி. 738

வேற்றுத்தளை தட்டும் வெண்பா இயைந்தும்
ஈற்றடி முச்சீ ராய்இறின் முறையே
வெண்கலிப் பாவும் கலிவெண் பாவும்.

## இளம்பூரணர்

**456. ஒருபொருள் நுதலிய..............................பாட்டே.**

*என்-னின், கலிவெண்பாவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஈற்றடியளவும் ஒருபொருளைக் குறித்து வெள்ளடியியலாற் றிரிபின்றி முடிவது கலிவெண்பாட்டாம் என்றவாறு.

கலிவெண்பாட்டெனினும் வெண்கலிப்பாட்டெனினும் ஒக்கும். வெள்ளடியியலா னென்றமையான் வெண்டளையான் வந்து ஈற்றடி முச்சீரான் வருவனவும் பிற தளையான் வந்து ஈற்றடி முச்சீரான் வருவனவுங் கொள்க.

(உ-ம்)"மரையா மரல்கவர மாரி வறப்ப
வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்தம்
உண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரங்
கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்றால்
என்னீர் அறியாதீர் போல இவைகூறின்
நின்னீர அல்ல நெடுந்தகாய் எம்மையும்
அன்பறச் சூழாதே ஆற்றிடை நும்மொடு
துன்பந் துணையாக நாடின் அதுவல்ல
தின்பமும் உண்டோ எமக்கு" (கலி.6)

என வரும்.

இது வெண்டளையான் வந்த வெண்கலிப்பா.

[1]அஃதேல் இது நெடுவெண்பாட்டிற்கு ஓதிய இலக்கணத்தான் வருதலிற் பஃறொடை வெண்பாவாம், வெண்கலிப்பா வென்ற தென்னையெனின், புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் எனவுங் கைக்கிளை பெருந்திணை யெனவுஞ் சொல்லப்பட்ட பொருளேழனுள்ளும் யாதானு மொருபொருளைக் குறித்து ஏனைக் கலிப்பாக்கள் போலத் தரவுந் தாழிசையுந் தனித்தனி பொருளாக்கிச்

1 இப் பகுதி மற்றையோர் கூறாதது.

சுரிதகத்தாற் றொகுத்துவரு நிலைமைத்தன்றித் திரிபின்றி முடிவதனைக் கலிவெண்பா வெனவும், புறப்பொருட்கண் வரும் வெண்பாக்களைப் பஃறொடை வெண்பா வெனவும், பரிபாடற்கு உறுப்பாய் வரும் பஃறொடை வெண்பாக்களைப் பரிபாடலெனவும், கொச்சகக் கலிப்பாவிற் குறுப்பாய் வரும் பஃறொடை வெண்பாவைக் கொச்சகக் கலிப்பா வெனவும் கூறுதல் இவ் வாசிரியர் கருத்தென்று கொள்க. அன்னதாதல் "நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே" (செய்யுளியல்,14) என யாப்பினாலே வேறுபடுத்தாராகிக் "கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுள்" எனப் பொருளானும் இனத்தானும் வேறுபடுத் தோதினமை யானுங் கொள்க.

"தீம்பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாம்
தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த
பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப்
பாங்கரு முல்லையுந் தாய பாட்டங்கால் தோழிநம்
புல்லினத் தாயர் மகளிரோ டெல்லாம்
ஒருங்கு விளையாட அவ்வழி வந்த
குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன்மற் றென்னை
முற்றிழை ஏஎர் மடநல்லாய் நீயாடுஞ்
சிற்றில் புனைகோ சிறிதென்றான் எல்லாநீ
பெற்றேம்யா மென்று பிறர்செய்த இல்லிருப்பாய்
கற்ற திலைமன்ற காணென்றேன் முற்றிழாய்
தாதுசூழ் கூந்தல் தகைபெறத் தைஇய
கோதை புனைகோ நினக்கென்றான் எல்லாநீ
ஏதிலார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப்
பேதையை மன்ற பெரிதென்றேன் மாதராய்
ஐய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேல்
தொய்யி லெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர்
செய்புற நோக்கி இருத்துமோ நீபெரிது
மையலை மாதோ விடுகென்றேன் தையலாய்
சொல்லிய வாறெல்லா மாறுமா றியான்பெயர்ப்ப
அல்லாந்தான் போலப் பெயர்ந்தான் அவனைநீ
யாயர் மகளி ரியல்புரைத் தெந்தையும்
யாயும் அறிய உரைத்தீயின் யானுற்ற
நோயுங் களைகுவை மன்" (கலி.111)

என்னும் முல்லைக்கலி அயற்றளையான்[1] வந்த கலிவெண்பா. (147)

## பேராசிரியர்

**465. ஒருபொரு ளுதலிய..............பாட்டே.**

*இது, நிறுத்தமுறையானே கலிவெண்பாவாமா றுணர்த்துதல் நுதலிற்று.*

---

1. தாய பாட்டங்கால் - நேரொன்றாசிரியத்தளை
என்னை முற்றிழை - மேற்படி

(இ-ள்) ஒரு பொருளைக் கருதி மற்றொரு பொருள்படவுஞ் சொற்றொடர்ந்து கிடப்பத் தொடுக்கப்பட்ட வெள்ளையடியால் திரிபின்றி வருவது கலிவெண்பாட்டாம் என்றவாறு.

'இயல்' என்றதனான், வெண்பாவிலக்கணஞ் சிதையாதவற்றுக்கே ஒருபொருள் நுதலவேண்டுவதெனவும், அவ்வாறன்றித் திரிந்து வருவனவெல்லாம் ஒருபொருள் நுதலாவென்னுங் கலிவெண்பாவா மெனவுங் கூறியவாறு. வெண்பா விலக்கணமென்பது, கட்டளையாகி வருதலும், தளைவகை யொன்றிவருதலும், பன்னிரண்டடியின் இகந்து வாராமையுமென இவையென்பது மேற்கூறினாம். அவ்வாறன்றித் திரிந்து வருங்கால் வாளாதே "அசையுஞ் சீரு மிசையொடு சேராதன" (323) பாவகை சிதைந்து கலித்தளையோசை எனப்படும்; அற்றன்றியுந் தனக்கோதிய் சீருந் தளையுஞ் சிதைந்தவழியும், பன்னிரண்டடியின் இகந்தவழியும், கலிவெண்பாவாதற்கு வரைந்துகூறல் வேண்டுவ தன்றென்பதூஉம், அவை ஒருபொருள் நுதலிவரினும் நுதலாதுவரினுங் கலிவெண்பாட்டா மெனவுங் கூறினானாம்; என்னை? ஒருபொருள் நுதலியதனைத் திரிபின்றி முடிந்த கலிவெண்பாட் டெனவே, ஒருபொருணுதலியும் நுதலாதும் ஈண்டுக் கூறிய வேறுபாட்டான் வருவன வெல்லாந் திரிபின்றி முடியாதாகலின் வெண்பாட்டென்பது[1] கொள்ள வைத்தமையி னென்பது.

இன்னுந் 'திரிபின்றி முடியும்' என்றதனானே ஒருபொருளன்றிப் பலவுறுப்புடைத்தாகித் திரிபுடையதூஉங் கலிவெண்பாட்டுளதென்று கொள்ளவைத்தானாம்; அது முன்னர்ச் சொல்லுதும்.

(உ-ம்)"அரும்பொருள் வேட்கையி னுள்ளந் துரப்பப்
பிரிந்துறை சூழாதி யைய விரும்பிநீ
யென்றோ ளெழுதிய தொய்யிலும் யாழநின்
மைந்துடை மார்பிற் சுணங்கு நினைத்துக்காண்
சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவா
தொழிந்தவ ரெல்லாரு முண்ணாதுஞ் செல்லா
ரிளமையுங் காமமு மோராங்குப் பெற்றார்
வளமை விழைதக்க துண்டோ வுளநா
ளொரோஒகை தம்முட் டழீஇ யொரோஒகை
யொன்றன்கூ றாடை யுடுப்பவரே யாயினு
மொன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை யரிதரோ
சென்ற விளமை தரற்கு" **(கலி.18)**

என்பது, பன்னிரண்டடியான் வந்து பல பொருணுதலி வந்தமைதலிற் கலிவெண்பாட்டாயிற்று. 'ஒருபொருள் நுதலிய' எனவே, சொல்லப்படும் பொருளின் வேறாகிக் கருதியுணரப்படும் பொருளுடைத்தென்பதும் பெற்றாம்; என்னை? இப் பாட்டினுட் பெண்டன்மைக் கேலாத நுண் பொருளினைத் தலைமக னெதிர்நின்று உணர்த்துவாள் செவ்வனஞ்

---

1. கலிவெண்பாட்டென்பது - என்றிருத்தல் வேண்டும்.

சொல்லாது தலைமகள் பண்டு கூறியன சிலவற்றை வாங்கிக்கொண்டு சொல்லி அவன் மறந்தானென்பது உணர்த்துகின்ற பொருண்மை கருதி உணரவைத்தமையின் அவ்வாறாயிற்று. ஒழிந்த பாக்களும் அவ்வாறு ஒருபொரு ளுதலுமாயினும் அங்ஙனம் நுதலிய பொருள்பற்றிச் செய்யுள் வேறுபடாமையின் ஆண்டாராய்ச்சி யின்றென்பது. வெண்பாவிற் குறித்த பொருளினை மறைத்துச் சொல்லாது (கலி.ப.22) செப்பிக் கூறல் வேண்டுமாகலானும்; இஃது அன்னதன்றி ஒருபொருளுதலித் துள்ளினமையானுங் கலிவெண்பாட்டெனப் பட்டதென்பது.

“மரையா மரல்கவர மாரி வறப்ப
வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்த
முண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரங்
கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்றா
லென்னீ ரறியாதீர் போல விவைகூறி
னின்னீர வல்ல நெடுந்தகா யெம்மையு
மன்பறச் சூழாதே யாற்றிடை நும்மொடு
துன்பந் துணையாக நாடி னதுவல்ல
தின்பமு முண்டோ வெமக்கு” (கலி.6)

என்பது, பதினோரடியான் ஒருபொரு ளுதலிவந்த கலிவெண்பாட்டு. நூற்றைம்பது கலியுள்ளுங் கலிவெண்பாட்டு எட்டாகலின் அவற்றுள் ஒருபொருளுதலி வருவன பிறவும் உள. அவை வல்லார்வாய்க் கேட்டுணர்க.

இனி, பன்னிரண்டடியின் இகந்து ஒருபொருளுதலாது வருமாறு:

“தீம்பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாந்
தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த
பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப் பாங்கரு
முல்லையுந் தாய பாட்டாங்காற் றோழிநம்
புல்லினத் தாயர் மகளிரோ டெல்லா
மொருங்கு விளையாட வவ்வழி வந்த
குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன்மற் றென்னை
முற்றிழை யேஎர் மடநல்லாய் நீயாடுஞ்
சிற்றில் புனைகோ சிறிதென்றா னெல்லாநீ
பெற்றேம்யா மென்று பிறர்செய்த வில்லிருப்பாய்
கற்ற திலைமன்ற காணென்றேன் முற்றிழாய்
தாதுசூழ் கூந்தற் றகைபெறத் தைஇய
கோதை புனைகோ நினக்கென்றா னெல்லாநீ
யேதிலார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப்
பேதையை மன்ற பெரிதென்றேன் மாதரா
யைய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேற்
றொய்யி லெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர்
செய்புற நோக்கி யிருத்துமோ நீபெரிது
மையலை மாதோ விடுகென்றேன் றையலாய்

சொல்லிய வாறெல்லா மாறுமா றியான்பெயர்ப்ப
வல்லாந்தான் போலப் பெயர்ந்தா னவனைநீ
யாயர் மகளி ரியல்புரைத் தெந்தையும்
யாயு மறிய வுரைத்தீயின் யானுற்ற
நோயுங் களைகுவை மன்" (கலி.11)

என வரும். பிறவும் அன்ன.

இனி, பாவகை சிதைந்தனவும் தளைவகை சிதைந்தனவும் வந்தவழிக் கண்டுகொள்க. இவையெல்லாங் காமப்பொருண் மேலனவாம். எனவே, கட்டளைவகையானும், தளைவகையொன்றியும் வரும் வெண்பாவாற் காமத்திற்கே உரியவெனப் படாவாயின; பிறவும் அன்ன.

இனி, அம்போதரங்கவொருபோகிற்கு இடையின்றிக் கலிவெண் பாட்டு வைத்தமையான்.

"வானூர் மதியம்"

போலும் ஒருசார்த் தேவபாணியுங் கலிவெண்பாட்டேயாம், ஒரு பொருணுதலிவரி னென்பது; இதனுள்,

"ஆட்சிய னாக வென்கோ"

என்பது வியங்கோளாயினும், அரசன் வாழ்க்கையும், அரங்கிற்கும் ஆடற்கும் இடையூறின்மையுஞ் சொல்லுவாயாகவென்று தெய்வத்தினை வினாஅய் வாய்ப்புள் வேண்டி நின்றமையின் அது குறித்துணரப்பட்டு ஒரு பொருணுதலியதாயிற்று. கந்திருவ மார்க்கத்து வரியுஞ் சிற்றிசையும் பேரிசையும் முதலாயினபோலச் செந்துறைப்பகுதிக்கே உரியவாகி வருவனவும், கூத்தநூலுள் வெண்டுறையும் அராகத்திற்கே யுரியவாகி வருவனவும் ஈண்டுக் கூறிய செய்யுள்போல் வேறு பாடப்பெறும் வழக்கியல் என்பது கருத்து. இக் கருத்தானே அவற்றை இப்பொழுதும் இசைப்பாவென வேறு பெயர்கொடுத்து வழங்குப.

இனி, யாப்பிலக்கணத்திற்கு ஒப்பவே இசைநூலுட் சொல்லப் பட்ட செய்யுளும் உள; என்னை?

"வெண்பா வியலான் விரவுறுப் பின்றித்
தன்பா வகையொடு பொருந்திய பொருளே
யொன்றுவிளைந் திற்ற விறுதித் தாகும்"

என்றவழி, விரவுறுப்பின்றியென வேண்டா கூறி விரவுறுப்புடையது பொருளொன்று விளையாதென(வும்) விரவுறுப்பில்லது 'பொருளொன்று விளைந்து இற்ற இறுதித்தாகு' மெனவுங் கூறினமையின். எனவே, ஈண்டு ஒருபொருணுதலி வருமெனப்பட்ட கலிவெண்பாட்டுப் பொருள் வெளிப்படாதெனவும் விரவுறுப்புடையது வெண்பாவியலான் வெளிப்படத் தோன்றும் பொருட்டெனவும் நேர்ந்தானாம். அது நோக்கியன்றே, வருகின்ற சூத்திரத்து "வெண்பா வியலான் வெளிப்படத்

தோன்றும்'' (466) எனக் கலிவெண்பாட்டினையே கருதி ஓதுவானாயிற்று என்பது. (153)

## நச்சினார்க்கினியர்

**153. ஒருபொருள் நுதலிய..................பாட்டே..**

*இது, முறையே கலிவெண்பாக் கூறுகின்றது.*

(இ-ள்) ஒரு பொருளைக் கருதி வாராநிற்ப வேறுமொரு பொருளே படவுஞ் சொற்றொடர்ந்து கிடப்பத் தொடுக்கப்பட்ட வெள்ளையடியால் திரிவின்றி வருவது கலிவெண்பாட்டாம் எ-று.

இயலென்றதனாற் கட்டளையடியாய் வருதலுந் தனக்குரிய வெண்டளையான் வருதலும் பன்னீரடியான் வருதலும் பிறவுமாகிய இலக்கணஞ் சிதையாதனவற்றுக்கே ஒருபொருணுதலி வரவேண்டுவது. அவ்வாறன்றித் தீர்ந்து வருவன ஒருபொருணுதலாக் கலிவெண்பாவாம் எ-று.

அவ் விலக்கணத்திற் றிரிந்துஞ் சீருந் தளையுஞ் சிதைந்தும் அடியிகந்தும் பாவகை சிதைந்தும் ஒருபொருணுதலியும் வெண்பா வியலான் வந்தனவுங் கலியோசையாமென் றுணர்க. இதனான் ஒரு பொருணுதலியது கட்டளையாய்த் திரிவின்றி வருமெனவும், ஒரு பொருணுதலாதது சீர்வகையாய்த் திரிவுடைத்தாய் வருமெனவுங் கூறிற்றாம்.

(எ-டு)''அரும்பொருள் வேட்கையி னுள்ளந் துரப்பப்
பிரிந்துறை சூழாதி யைய விரும்பிநீ
யென்றோ ளெழுதிய தொய்யிலும் யாழநின்
மைந்துடை மார்பிற் சுணங்கு நினைத்துக்காண்
சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவா
தொழிந்தவ ரெல்லாரு முண்ணாதுஞ் செல்லா
ரிளமையுங் காமமு மோராங்குப் பெற்றார்
வளமை விழைதக்க துண்டோ வுளநா
ளொரோஒகை தம்முட் டழீஇ யொரோஒகை
யொன்றன்கூ றாடை யுடுப்பவரே யாயினு
மொன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை யரிதரோ
சென்ற விளமை தரற்கு.'' (கலி.18)

இது பன்னீரடியான் வந்து ஒருபொருணுதலிய கட்டளைக் கலிவெண்பா.

இதனுட் பெண்டன்மைக்கு ஏலா நுண்பொருளினைத் தலைவனெதிர் நின்றுணர்த்துவான் செவ்வன் கூறாது தலைவன் பண்டுகூறின சிலவற்றை வாங்கிக்கொண்டு கூறுங் கூற்று. நீ மறந்தாயென்பது யாம் உணரக் கூறுகின்றாள் இவளென்பதுபட

நின்றமையின் ஒருபொருணுதலிற்றாயிற்று. அது அகப்பொருளேயாமாறும் ஒழிந்த பாக்களும் அவ்வாறு வருமேனும் அங்ஙனம் நுதலிய பொருளான செய்யுள் வேறுபடாமையின் ஆண்டு ஆராய்ச்சியின்று. இது வெண்பாவிற் குறித்த பொருளை மறைத்துக் கூறாது செப்பிக் கூறல்வேண்டும். இஃதன்னதன்றிப் பொருள் வேறுபடுதலானுந் துள்ளிவருதலானுங் கலிவெண்பாட்டாயிற்று.

"மரையா மரல்கவர" (கலி.6)

என்னும் பாட்டுப் பதினோரடியான் ஒருபொருணுதலிற்று.

நூற்றைம்பது கலியுட் கலிவெண்பாட்டு எட்டு. அவற்றுள் ஒரு பொருணுதலி வருவனவற்றின் பொருள் வல்லார்வாய்க் கேட்டுணர்க. இன்னும் இயலென்றதனாற் பன்னீரடியி னிகந்து ஒருபொருணுதலி வருவனவும் அங்ஙனம் வந்து தளை விரவி வருவனவுங் கொள்க.

"சுடர்த்தொடீஇ கேளாய் தெருவினா மாடும்" (கலி.51)

என்னும் பாட்டு அடியிகந்து ஒருபொருணுதலியது.

"கயமல ருண்கண்ணாய் காணா யொருவன்
வயமா னடித்தேர்வான் போலத் தொடைமாண்ட
கண்ணியன் வில்லன் வருமென்னை நோக்குபு
முன்னத்திற் காட்டுத லல்லது தானுற்ற
நோயுரைக் கல்லான் பெயருமற் பன்னாளும்
பாயல் பெறேஎன் படர்கூர்ந் தவன்வயிற்
சேயேன்மன் யானுந் துயருழப்பே னாயிடைக்
கண்ணின்று கூறுத லாற்றா னவனாயிற்
பெண்ணெனன் றுரைத்த நமக்காயி னின்னதூஉங்
காணான் கழிதலு முண்டென் றொருநாளென்
றோணெகிழ் வுற்ற துயராற் றுணிதந்தோர்
நாணின்மை செய்தே னறுநுதால் ஏனல்
இனக்கிளி யாங்கடிந் தோம்பும் புனத்தய
லூசலூர்ந் தாட வொருஞான்று வந்தானை
ஐய சிறிதென்னை யூக்கி யெனக்கூறத்
தையால் நன்றென் றவனூக்கக் கைநெகிழ்பு
பொய்யாக வீழ்ந்தே னவன்மார்பின் வாயாச்செத்
தொய்யென வாங்கே யெடுத்தனன் கொண்டான்மேன்
மெய்யறியா தேன்போற் கிடந்தேன்மன் னாயிடை
மெய்யறிந் தேற்றெழுவே னாயின்மற் றொய்யென
வொண்குழாய் செல்கெனக் கூறி விடும்பண்பி
னங்க ணுடைய னவன்." (கலி.37)

இது தையா னன்றென்று என மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாமற் றோழி தலைவிக்குரைத்தது. இதுகேட்டுத் தலைவன் தன்னை நயந்தானென இவள் கருதினாள்போலுமெனத் தலைவி கருதுமாற்றாற் றோழி கூறியவாறும் இதனானே தலைவி யினிக் கரந்தொழுகி உடம்படுக்குமென்பதூஉம் ஒருபொருளாயிற்று.

இது 'அறக்கழி வுடையன' (தொல்.பொருள்.24) என்னும் பொருளியற் சூத்திரத்தில் வழுவமைத்தவாறுங் காண்க.

"தீம்பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாம்
தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த
பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப்
பாங்கரு முல்லையுந் தாய பாட்டங்கால் தோழிநம்
புல்லினத் தாயர் மகளிரோ டெல்லாம்
ஒருங்கு விளையாட அவ்வழி வந்த
குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன்மற் றென்னை
முற்றிழை ஏஎர் மடநல்லாய் நீயாடுஞ்
சிற்றில் புனைகோ சிறிதென்றான் எல்லாநீ
பெற்றேம்யா மென்று பிறர்செய்த இல்லிருப்பாய்
கற்ற திலைமன்ற காணென்றேன் முற்றிய
தாதுசூழ் கூந்தல் தகைபெறத் தைஇய
கோதை புனைகோ நினக்கென்றான் எல்லாநீ
ஏதிலார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப்
பேதையை மன்ற பெரிதென்றேன் ஆயிழா
யைய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேல்
தொய்யி லெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர்
செய்புற நோக்கி இருத்துமோ நீபெரிது
மையலை மாதோ விடுகென்றேன் தையலாய்
சொல்லிய வாறெல்லா மாறுமா றியான்பெயர்ப்ப
அல்லாந்தான் போலப் பெயர்ந்தான் அவனைநீ
யாயர் மகளி ரியல்புரைத் தெந்தையும்
யாயும் அறிய உரைத்தீயின் யானுற்ற
நோயுங் களைகுவை மன்." (கலி.111)

இது தளை விரவி ஐஞ்சீரடியும் வந்து ஒருபொருணுதலாதது.

"இடுமுள் நெடுவேலி" (கலி.12)

என்னும் பாட்டுத் தளை விரவி யவ்வாறு வந்தது.

பாவகை சிதைந்தன வந்துழிக் காண்க.

ஒன்றென முடித்தலாற் பொருள்வகை சிதைதலுங் கொள்க. அவ் விரண்டுஞ் சேரச் சிதைந்தன இக்காலத்தார் கூறுகின்ற உலாச் செய்யுளாம். இனி இக்காலத்தார் கூறும் மடற்செய்யுளும் பாவகை சிதைவின்றேனும் 'ஏறிய மடற்றிறம்' ஆகிய பெருந்திணைப் பொருளாகலின் அதனைக் கலிவெண்பாட்டென்று கோடும்.

மேலிற் சூத்திரத்தாற் கூறுங் கலிவெண்பாட்டுகளும் பெருந் திணையாயும் வருதலின் இதனை வெண்பாவெனில் தொல்காப் பியனார்..............கலிவெண்பாப் பெருந்திணைப் பொருளின் வாராதென்று கொள்க.

"வெண்பா விதியான் விரவுறுப் பின்றித்
தன்பா வகையொடு பொருந்திய பொருளே
யொன்றுவிளைந் திற்ற விறுதித் தாகும்"

என்று இசைநூலினும் இவ்வாறே ஓதிக் கொச்சகச் செய்யுளுமுள வென்றார்.

இதனுள் விரவுறுப்பின்றி யென வேண்டாது கூறிய்வதனால் விரவுறுப்புடையது வேறு பொருள் விளையாதெனவும் விரவுறுப்பில்லது வேறு பொருள் விளைத்து இறுமெனவும் அவ்வாறே விரவுறுப்பில்லாக் கலிவெண்பாட்டும் வேறுபொருள் விளைக்குமென ஈண்டுக் கூறி விரவுறுப்புடையது "வெண்பா வியலான் வெளிப்படத் தோன்று" மென்று மேலைச் சூத்திரத்தாற் கூறுகின்றார். (153)

## சிவலிங்கனார்

ஒருபொருள்.........................பாட்டே.

(இ-ள்) பாடல் முழுமையும் ஒருபொருளையே குறித்து வெண்பா வடி இலக்கணத்தோடு திரிவின்றி முடிவது கலிவெண்பாட்டாம், எ-று.

கலிவெண்பா ஒருபொருளை நுதலிவரும் என்பதும், ஒருபொருளே நுதலிவரினும் அடிபல நிமிர்ந்து வருதலின் இடையிடையே பல பொருளும் விரவிவரும் என்பதும், வெண்பாச்சீரும் தளையும் கொண்டேவரும் என்பதும், இறுதியடி முச்சீராம் என்பதும் அறிக.

தளை சீர்களால் மாறுபடின் ஈற்றடி முச்சீராய் அமையின் கலியோசை கொண்டதாயின் வெண்கலிப்பா என்க.

கொச்சகக்கலி

**457. தரவும் போக்கும் இடையிடை[1] மிடைந்தும்**
**ஐஞ்சீர் அடுக்கியும் ஆறுமெய் பெற்றும்**
**வெண்பா இயலான் வெளிப்படத் தோன்றும்**
**பாநிலை வகையே கொச்சகக் கலியென**
**நூல்நவில் புலவர் நுவன்றறைந் தனரே.[2] (148)**

## இலக்குவனார்

466. *Tharavu* and *pōkku* having occurred in the middle with the lines of five feet or six feet, it appears in the form of *veṇbā*.

---

1. பாட்டிடை - பேரா. நச். பாடம்

2. முதல் மூன்றடியும் ஒரு சூத்திரமாகவும் பின்னிரண்டடியும் ஒரு சூத்திரமாகவும் கொள்வர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.

## 467. The variations of this verse is called *koccakakkali* by poets who are well versed in grammar.

## இளம்பூரணர்

**457. தரவும் போக்கும்................................தனரே.**

*என்-னின், கொச்சகக்கலி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) தரவும் போக்கும் இடையிடை மிடைந்தும் என்பது - தரவாகிய உறுப்புஞ் சுரிதகமாகிய உறுப்பும் முதலுமுடிவும் வருதலின்றி இடையிடை வந்து தோன்றியு மென்றவாறு.

உம்மையால் இயற்கைவழாமற் றோன்றியு மென்று கொள்ளப்படும்.

ஐஞ்சீரடுக்கியும் என்பது - ஐஞ்சீரடி பலவந்தும் என்றவாறு.

உம்மையால் பெறாதுமென்று கொள்க.

ஆறுமெய்பெற்றும் என்பது - தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம், சொற்சீரடி, முடுகியலடி யென்னும் ஆறுறுப்பினையும் பெற்றும் என்றவாறு.

உம்மையால் பெறாதுமென்று கொள்க.

வெண்பாவியலான் வெளிப்படத் தோன்றும் பாநிலைவகை என்பது - மேற்சொல்லப்பட்ட வுறுப்புகளை யுடைத்தாகியும் இலதாகியும் வெண்பாவி னியல்பினாற் புலப்படத் தோன்றும் பாநிலைவகை யென்றவாறு.

புலப்படத் தோன்றுதலாவது ஏனையுறுப்புகளில் வெண்பா மிகுதல். இன்னும் அதனானே பிற பாவடிகளும் வந்து வெண்பா வியலான் முடிதலுங் கொள்க.

கொச்சகக்...........அறைந்தனரே என்பது - கொச்சகக் கலிப்பா வென்று இலக்கணமறிந்த புலவர் கூறினாரென்றவாறு.

ஆறுமெய் பெற்றும் என்பதற்கு அராகமென்னும் உறுப்பைக் கூட்டி முடுகியலென்னும் உறுப்பைக் கழித்து உரைப்பதும் ஒன்று.

**(உ-ம்)** குறிஞ்சிக் கலியுள்,

"காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்
தாமரைக் கண்புதைத் தஞ்சித் தளர்ந்ததனோ டொழுகலால்
நீள்நாக நறுந்தண்டார் தயங்கப்பாய்ந் தருளினாற்
பூணாக முறத்தழீஇப் போதந்தான் அகனகலம்

வருமுலை புணர்ந்தன என்பதனால் என்தோழி
அருமழை தரல்வேண்டில் தருகிற்கும் பெருமையளே;

இது தரவு.

இதனுள் இரண்டாமடி ஐஞ்சீரான் வந்தது.

அவனுந்தான், ஏனல் இதணத் தகிற்புகை யுண்டியங்கும்
வானூர் மதியம் வரைசேரின் அவ்வரைத்
தேனின் இறாலென ஏணி இழைத்திருக்குங்
கானகல் நாடன் மகன்;

இதனுள் முதற்கணின்றது கூன்.

சிறுகுடி யீரே சிறுகுடி யீரே
வள்ளிகீழ் வீழா வரைமிசைத் தேன்தொடா
கொல்லை குரல்வாங்கி ஈனா மலைவாழ்நர்
அல்ல புரிந்தொழுக லான்;

இதன் முதல் ஆசிரியவடி.

காந்தள் கடிகமழுங் கண்வாங் கிருஞ்சிலம்பின்
வாங்கமை மென்தோட் குறவர் மடமகளிர்
தாம்பிழையார் கேள்வர்த் தொழுதெழலால் தம்மையருந்
தாம்பிழையார் தாந்தொடுத்த கோல்;

இவை மூன்றுங் கொச்சகம்.

எனவாங்கு,

தனிச்சொல்,

அறத்தொடு நின்றேனைக் கண்டு திறம்பட
என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்;

இது வெள்ளைச் சுரிதகமாகி இடை வந்தது.

அவரும், தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்
தொருபக லெல்லாம் உருத்தெழுந் தாறி
இருவர்கட் குற்றமும் இல்லையால் என்று
தெருமந்து சாய்த்தார் தலை;

தெரியிழாய் நீயுநின் கேளும் புணர
வரையுறை தெய்வம் உவப்ப உவந்து
குரவை தழீஇயாம் ஆடக் குரவையுட்
கொண்டு நிலைபாடிக் காண்;

இவை யிரண்டுங் கொச்சகம்.

நல்லாய்,

தனிச்சொல்.

நன்னாள் தலைவரும் எல்லை நமர்மலைத்
தந்நாண்தாந் தாங்குவா ரென்னோற் றனர்கொல்;

இது பேரெண்.

புனவேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றில்
நனவிற் புணர்ச்சி நடக்குமாம் அன்றோ
நனவிற் புணர்ச்சி நடக்கலும் ஆங்கே
கனவிற் புணர்ச்சி கடிதுமாம் அன்றோ;

விண்டோய்கன் னாடனும் நீயும் வதுவையுட்
பண்டறியா தீர்போல் படர்கிற்பீர் மற்கொலோ
பண்டறியா தீர்போல் படர்ந்தீர் பழங்கேண்மை
கண்டறியா தேன்போற் கரக்கிற்பென் மற்கொலோ;

இவை யிரண்டுந் தாழிசை.

மைதவழ் வெற்பன் மணஅணி காணாமற்
கையாற் புதைபெறூஉங் கண்களும் கண்களோ;

இது பேரெண்.

என்னைமன், நின்கண்ணாற் காண்பென்மன் யான்
நெய்தல் இதழுண்கண், நின்கண்ணா கென்கண்மன;

இதுவுங் கொச்சகம்.

எனவாங்கு,

தனிச்சொல்.

நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇத்
தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவர் இனமாக
வேய்புரை மென்றோட் பசலையும் அம்பலும்
மாயப் புணர்ச்சியும் எல்லாம் உடனீங்கச்
சேயுயர் வெற்பனும் வந்தனன்
பூவெழில் உண்கணும் பொலிகமா இனியே." (கலி.39)

இது சுரிதகம்.

இதனுள் முதலடி அறுசீர் முடுகியல்; இரண்டாவது ஐஞ்சீர் முடுகியல்.

இவ்வாறு வருவன கொச்சகக் கலிப்பா வெனப்படும்.

ஒத்தாழிசைக்குத் தாழிசையாகிய உறுப்பு மிக்குவந்தாற் போலக் கொச்சகக்கலிக்கும் வெண்பாவாகிய உறுப்பு மிக்குவரும் என்று கொள்க.

இனி ஈண்டோதப்பட்ட உறுப்புகள் குறைந்தும், மயங்கியும் மிக்கும் வரப்பெறும். அவை கலித்தொகையுட் கண்டுகொள்க. (148)

## பேராசிரியர்

**466. தரவும் போக்கும்......................தோன்றும்.**

*இது, மேல் 'வெளிப்படு பொருட்டு' எனப்படும் வெண்கலி விரவுறுப்புடைமையின் அதனை வேறுகூறுகின்றது.*

(இ-ள்) தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்தும் என்பது, தரவிற்கும் போக்கிற்கும் இடையின்றிப் பாட்டாகிப் பயின்றுவருதலும் என்றவாறு; எனவே, தரவும் போக்கும் முன்னர் ஓதியவகையானே முன்னும் பின்னும் நிற்குமென்பதூஉம், சுரிதகமாயின் வெள்ளையும் அகவலுமாய்ப் பாவோடு வந்துழிப்போலத் தனிச்சொற் பெற்றும் பெறாதும் வருமென்பதூஉங் கொள்க. 'தரவும் போக்கும்' எனப் பாட்டிறுதி நின்ற போக்கினை முன்வைத்தான் அவை ஓரினத்தவாகலின்; என்னை? தரவிறுதி, சீரான் இறுமாறு போல வெள்ளைச் சுரிதகவிறுதியும் ஒரோவழிச் சீரானே இறுதலின். அது,

"தாதுதேர் வண்டின் கிளைபாடத் தைஇய
கோதை பரிபாடக் காண்கும்" (கலி.80)

என நான்கசையானு மின்றித் தேமாவா னிற்றது.

இனி, பாட்டினைப் போக்கின் பின் வைத்ததனாற் போக்குப்போல நாற்சீரான் இறுவனவும் அப் பாட்டுள் சிறுபான்மையென்பது; அது,

"கரந்தாங்கே யின்னாநோய் செய்யுமற் றிஃதோ
பரந்த சுணங்கிற் பணைத்தோளாள் பண்பு" (கலி.141)

என்றாற்போல வரும். இங்ஙனம் வைப்பவே, வருகின்ற 'ஐஞ்சீ ரடுக்கலும் ஆறுமெய் பெறுதலும்' (466) அவற்றுக்கன்றி ஏலாவாயின; அல்லதூஉம், இதனை இறுதிவைத்தான் இதனோடொக்குமென முற்கூறப்படுங் கொச்சகம், தரவும் போக்குமின்றிப் பாட்டு மிடைந்தே வருமென்பது இவ் வதிகாரத்தாற் கோடற்கென்பது. அது முன்னர்க் காட்டுதும்.

ஐஞ்சீரடுக்கியு மென்பது, வேறு நின்றதொரு சீரினை அளவடியுடன் அடுக்கிச் சொல்ல ஐஞ்சீராகியும் எ-று. ஆறுமெய் பெற்றும் என்பது, அவ்வாறே இருசீரடுக்க ஆறுசீர் பெற்றும் எ-று; 'மெய்' என்றதனான் அடுக்குஞ்சீர் முதலும் இறுதியும் வருமென்று கொள்க.

வெண்பா இயலான் வெளிப்படத் தோன்றுமென்பது - வெண்பா வென்னும் உறுப்பினியற்கை சிதையாமற் பொருள் புலப்படத் தோன்றும் என்றவாறு.

இயற்கை சிதையாமல் தோன்றுமெனவே கட்டளையும் கட்டளையல்லதும் எனப்பட்ட வெண்பா விலக்கணம் இரண்டுஞ் சிதையாமை வருமென்றானாம்; தரவும் போக்குமென நின்ற உம்மை எண்ணும்மை.

'பாட்டிடை மிடைந்து' என்பது முதலாக வந்த உம்மை மூன்றும் இறந்தததுதழீஇய எச்சவும்மை; என்னை? மேற்கூறிய தனிநிலை வெண்பாட்டே யன்றித் தரவுறுப்பாகவும் என்றமையின். இவ்வாறன்றி, அவ்வனைத்தும் எண்ணும்மை கொள்ளிள் உறுப்பினையே எண்ணல் வேண்டும்; அல்லாக்கால், வினையொடு பெயரெண்ணின் அதன் உறுப்பினையே எண்ணினானாகலா னென்பது; அல்லதூஉம், தரவும் போக்கும் முதல் வந்தும் இறுதி வந்துமென அவையும் தம் வினையான் எண்ணவும்படுமன்றோவென மறுக்க. அவற்றுக்குச் செய்யுள் கூறுங்கால் தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்து தோன்றும்; அதுவே ஐஞ்சீரடுக்குப் பெற்ற தொன்றும், அறுசீரடுக்குப் பெற்ற தொன்றும், அவை யிரண்டும் உடன்பெற்ற தொன்றுமென்றும் இங்ஙனம் விகற்பித்துக் கூறப்படுமென்பது. அவை கட்டளை வெண்பாவான் வருதலும் ஒழிந்த வெண்பாவான் வருதலுமென விகற்பிக்கப்படாவோவெனின், அவ் விகற்பம் அடிக்கல்லது பாவிற்கின்மையானும் ஈண்டுப் பா வேறுபடாமை யானும் அங்ஙனம் பகுத்ததனாற் பயந்ததென்னையென மறுக்க; வரலாறு:

" சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்
பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி யறனறிதல்
சான்றவர்க் கெல்லாங் கடனானா லிவ்விருந்த
சான்றீ ருமக்கொன் றறிவுறுப்பேன் மான்ற
துளியிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி
யொளியோ டுருவென்னைக் காட்டி யளியளென்
நெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டுந் துஞ்சே
னணியலங் காவிரைப் பூவோ டெருக்கின்
பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப
வோங்கிரும் பெண்ணை மடலூர்ந்தென் னெவ்வநோய்
தாங்குத றேற்றா விடும்பைக் குயிர்ப்பாக
வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது
பாடுவேன் பாய்மா நிறுத்து;

யாமத்து மெல்லையு மெவ்வத் திரையலைப்ப
மாமேலே னென்று மடல்புணையா நீந்துவேன்
றேமொழி மாத ருறாஅ துறீஇய
காமக் கடலகப் பட்டு;

உய்யா வருநோய்க் குயலாகு மைய
லுறீஇயா ளீத்தவிம் மா;

காணுந ரெள்ளக் கலங்கித் தலைவந்தெ
னாணெழின் முற்றி யுடைத்துள் ளழித்தரு
மாணிழை மாதரா ளேஎரெனக் காமன
தாணையால் வந்த படை;

காமக் கடும்பகையிற் றோன்றினேற் கேம
மெழினுத லீத்தவிம் மா;

அகையெரி யானாதென் னாருயி ரெஞ்சும்
வகையினா லுள்ளஞ் சுடுதரு மன்னோ
முகையே ரிலங்கெயிற் றின்னகை மாதர்
தகையாற் றலைக்கொண்ட நெஞ்சு;

அழன்மன்ற காம வருநோய் நிழன்மன்ற
நேரிழை யீத்தவிம் மா;

ஆங்கதை,

அறிந்தனி ராயிற் சான்றவிர் தான்றவ
மொரீஇத் துறக்கத்தின் வழீஇ யான்றோ
ருள்ளிடப் பட்ட வரசனைப் பெயர்த்தவ
ருயர்நிலை யுலக முறீஇ யாங்கென்
றுயர்நிலை தீர்த்த னுந்தலைக் கடனே" (கலி.139)

என்பது தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்த கலிவெண்பாட்டு ஆசிரியச் சுரிதகத்தான் வந்தது.

இனி, வெள்ளைச் சுரிதகத்தான் வந்தனவும் கண்டுகொள்க.

" கண்டவி ரெல்லாங் கதுமென வந்தாங்கே
பண்டறியா தீர்போல நோக்குவிர் கொண்டது
மாவென் றுணர்மின் மடலன்று மற்றிவை
பூவல்ல பூளை வுழிஞையோ டியாத்த
புனவரை யிட்ட வயங்குதார்ப் பீலி
பிடியமை நூலொடு பெய்ம்மணி கட்டி
யடர்பொன் னவிரேய்க்கு மாவிரங் கண்ணி
நெடியோன் மகனயந்து தந்தாங் கனைய
வடிய வடிந்த வனப்பினென் னெஞ்ச
மிடிய விடைக்கொள்ளுஞ் சாய லொருத்திக்
கடியுறை காட்டிய செல்வேன் மடியன்மி
னன்னே னொருவனேன் யான்;

என்னானும், பாடெனிற் பாடவும் வல்லேன் சிறிதாங்கே
யாடெனி லாடலு மாற்றுகேன் - பாடுகோ
வென்னு ளிடும்பை தணிக்கு மருந்தாக
நன்னுத லீத்தவிம் மா;

திங்க ளரவுறிற் றீர்க்கலா ராயினுந்
தங்காதல் காட்டுவர் சான்றவ ரின்சாய
லொண்டொடி நோய்நோக்கிற் பட்டவென் னெஞ்சநோய்
கண்டுங்கண் ணோடாதிவ் வூர்;

தாங்காச் சினத்தொடு காட்டி யுயிர்செகுக்கும்
பாம்பு மவைப்படி லுய்யுமாம் - பூங்கண்
வணர்ந்தொலி யைம்பாலாள் செய்தவிக் காம
முணர்ந்து முணராதிவ் வூர்;

வெஞ்சுழிப் பட்ட மகற்குக் கரைநின்றா
ரஞ்சலென் றாலு முயிர்ப்புண்டா - மஞ்சீர்ச்
செறிந்தேர் முறுவலாள் செய்தவிக் காம
மறிந்து மறியாதிவ் வூர்;
ஆங்க,
என்க ணிடும்பை யறீஇயினெ னுங்கட்
டெருளுற நோக்கித் தெரியுங்கா லின்ன
மருளுறு நோயொடு மம்ம ரகல
விருளுறு கூந்தலா ளென்னை
யருளுறச் செயினுமக் கறனுமா ரதுவே" **(கலி.140)**

என்பது தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்த கலிவெண்பாட்டு ஆசிரியச் சுரிதகத்தா லிற்றதாகலின், இதனுள்,

"என்னானும் பாடெனிற் பாடவும் வல்லேன் சிறிதாங்கே"

என்னும் அடி ஐஞ்சீரடுக்கினுள் வந்தது; என்னை?

"பாடெனிற் பாடவும் வல்லேன் சிறிதாங்கே
யாடெனி லாடலு மாற்றுகேன் பாடுகோ"

என்னும் அளவடி யிரண்டும் எதுகையால் அமைந்தவழி 'என்னானும்' என வேறு நின்ற சீரொடுங் கூடி ஐஞ்சீரடுக்கினமையின். இதனுள் 'ஆங்க' எனத் தனிச்சொல் வந்தது.

'காராரப் பெய்த' **(கலி.109)**

என்னும் முல்லைப்பாட்டு ஐஞ்சீரடுக்கி வெள்ளைச் சுரிதகத்தானிற்றது.

"அரிதினிற் றோன்றிய யாக்கை புரிபுதாம்
வேட்டவை செய்தாங்குக் காட்டிமற் றாங்கே
யறம்பொரு ளின்பமென் றம்மூன்றி னொன்றன்
றிறஞ்சேரார் செய்யுந் தொழில்க ளறைந்தன்
றணிநிலைப் பெண்ணை மடலூர்ந் தொருத்தி
யணிநலம் பாடி வரற்கு;

ஓரொருகா லுள்வழிய ளாகி நிறைமதி
நீரு ணிழற்போற் கொளற்கரியள் - போரு
ளடன்மாமே லாற்றுவே னென்னை மடன்மாமேன்
மன்றம் படர்வித் தவள்;

வாழிசான்றீர், பொய்தீ ருலக மெடுத்த கொடிமிசை
மையறு மண்டிலம் வேட்டனள் - வையம்
புரவூக்கு முள்ளத்தே னென்னை யிரவூக்கு
மின்னா விடும்பைசெய் தாள்;

அம்மசான்றீர், கரந்தாங்கே யின்னாநோய் செய்யுமற் றிஃதோ
பரந்த சுணங்கிற் பணைத்தோளாள் பண்பு;
இடியுமிழ் வானத் திரவிருள் போழுங்
கொடிமின்னுக் கொள்வேனென் றன்னவள் - வடிநாவின்
வல்லார்முற் சொல்வல்லே னென்னைப் பிறர்முன்னர்க்
கல்லாமை காட்டி யவள்; வாழிசான்றீர்;
என்றாங்கே,
வருந்தமா வூர்ந்து மறுகின்கட் பாடத்
திருந்திழைக் கொத்த கிளவிகேட் டாங்கே
பொருந்தாதார் போர்வல் வழுதிக் கருந்திறை
போலக் கொடுத்தார் தமர்" **(கலி.141)**

என்பதனுள் 'வாழி சான்றீர்', 'அம்ம சான்றீர்' என ஐஞ்சீரடுக்கியாங்கு அடுக்கிச் சொல்ல அறுசீராயின. இதற்கும் 'ஐஞ்சீர்' அடுக்கியும் என்றதுபோல, அறுசீரடுக்கியுமென்று அடுக்குதற்றொழில் கொள்ளப்படும்; ஈண்டு இரண்டளவடி தொடைப்படச் செய்தமையினென்க. இதனுள் ளும் 'என்றாங்கே' என்பது தனிச்சொல்.

"பரிவுண்ட புணர்ச்சியுட் புல்லாரா மாத்திரை
யருகுவித் தொருவரை யகற்றலிற் றெரிவார்கட்
செயநின்ற பண்ணினுட் செவிசுவை கொள்ளாது" **(கலி.142)**

என்பதனுள்,

"இனைந்துநொந் தழுதன ணினைந்துநீ டுயிர்த்தனள்"

எனவும் இயற்சீர் நிரையொன்றியும் பா வேறுபடாமையின் இதுவும் கலிவெண்பாட்டாயிற்றென்பது கொள்க.

இங்ஙனம் பா வேறுபடாமையினன்றே,

"உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅய் வாழியென் னெஞ்சு" **(குறள்.1200)**

என்பதனை வெண்பா என்பாமாயிற் றென்பது; இனி,

"எல்லிரா நல்கிய கேள்வ னிவன்மன்ற மெல்ல" **(கலி.142)**

என வெள்ளைச் சுரிதகத்துள் ஐஞ்சீரடியும் வந்தது. வெண்பாவிற்கு முன்னர்,

"வெண்டளை விரவியு மாசிரியம் விரவியு
மைஞ்சீ ரடியு முள" **(375)**

என்றானாகலின் மேற் கூனெனவும் சொற்சீரெனவுங் கூறப்பட்டனவே ஈண்டு ஐஞ்சீரடுக்கியும் ஆறுமெய் பெற்றுங் கூறுபட்டன என வுணர்க. இதற்கு ஐஞ்சீரும், அறுசீரும் விதந்தோதவே, மேற்சிறுபான்மை பொது வகையாற் கலிக்கு நேரப்பட்ட சொற்சீரடி ஒத்தாழிசைக்கும் முற்கூறிய கலிவெண்பாட்டிற்குமாயின் எஞ்ஞான்றும் வாராதென்பதூஉம், அதுதானும் இதற்கு வருங்கால் இருசீரின் இகந்துவாரா தென்பதூஉங் கூறினானாம். இங்ஙனஞ் சொற்சீரடி விலக்கவே அதற்கினமாகிய முடுகியலடியும் ஒத்தாழிசைக்கு வாராதென்பதாம். அது வெண்கலிக்கோ வெனின்,

"வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்" (466)

எனவே விலக்குண்டதன்றோ வென்க.

இனி, தரவிற்கும் போக்கிற்கும் பாட்டிற்கும் இவ்வளவைத் தென்பது அம்போதரங்கத்திற்கு ஓதிய வகையாற் கோடுமென்றமையின் அதற்கேற்றவகையான் வருவதன்றி வேறுவேறு வரையறையில வென்க. 'பாட்டிடை மிடையின்' என்றமையின், ஈண்டுப் பாட்டென்றது, கொச்சகத்திற்கே யுரித்தென்பது; மற்று,

"வெண்டளை தன்றளை யியற்றளை விரவியும்
வெண்பா வுடையது வெண்கலி யாகும்"'

எனத் தளைவிரவியும் வெண்பாச் சிதையாதவழிக் கலிவெண்பாட்டா மென்று ஓர் (உத்தரஞ்) சூத்திரஞ் செய்யாரோ பலவுறுப்பு வந்தவழியும் இது புறனடையாகவெனின், அற்றன்று;

"வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்" (466)

எனவே இவையெல்லாம் அடங்குதலின் அதுவேறு கூறானென்பது. இனி, பல வுறுப்பின்றி அவ்வாறு ஒரு பாட்டே வரின் அதனை வெண்கலி யென்பாரும் உளர். நூற்றைம்பது கலியுள்ளும் அன்னதோர் கலிவெண் பாட்டின்மையின் அது சான்றோர் செய்யுளொடு மாறுகோளாமென மறுக்க.

மற்று, 'பாட்டிடை மிடைந்து' (466) என்றவழி, பாட்டெனப் பட்டது, இடைநிலைப் பாட்டென்றுமோ கொச்சகமென்றுமோவெனின், எஞ்ஞான்றுந் தாழம்பட வாராமையின் இடைநிலைப் பாட்டென்னாம்; துள்ளலுஞ் செப்பலுமென்னும் இருவகைக் கொச்சகமும் ஒருங்கு வாராமையிற் கொச்சகமென்னாம். கொச்சகமென்னும் பொதுப் பெயரானும் அது கூறாராயினும்,

"வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்" (466)

என்றதனான் வெள்ளைக்கொச்சக மெனப்படும் அவையென்பது; அஃதேல், கொச்சகமென்று ஓதுகவெனின், அங்ஙனம் ஓதின் இது

கொச்சகக்கலியாமென்று கருதினுங் கருதற்க வென்பான் வாளாதே 'பாட்டு' என்றான். இதனாலும் பெற்றாம் இது கொச்சகக்கலி யல்லாமை. (154)

**467. பாநிலை வகையே...........தனரே.**

*இது, நிறுத்தமுறையானே அகநிலைக் கொச்சகக் கலியுணர்த்து கின்றது. 'பாநிலை வகை' என்பது, உம்மைத்தொகை; பாநிலையும் வகையுமென விரியும். பாநிலை யென்பது ஆறாம் வேற்றுமைத்தொகை.*

(இ-ள்) மேற் பாவிநின்ற வகையானே கொச்சகக் கலியாமென்று நூலாசிரியர் கூறித் துணிந்தனர் என்றவாறு.

அறைதலெனினும் துணித்தலெனினும் ஒக்கும்; என்னை? துணித்த கரும்பினை, "அறைக்கரும்பு" (பொருந.193) என்பவாகலின் 'பாநிலை' என்றது யாதனை நோக்கி யெனின், இது கொச்சகமாதலான் அதுவும் மேலே ஒருபோகெனக் கூறப்பட்ட கொச்சகப்பாநிலையெனக் கொள்க. அதனைத் துணித்தனரென்றதனால்,

"தரவின் றாகித் தாழிசை பெற்று" (461)

வருமென்ற கொச்சகத்தினை இதற்கு இயைபின்றாக முன்வைத்துச் சேட்படுத்தமையின் அஃதொன்றனையுந் துணித்து மாற்றி அல்லாத கொச்சகம் பாநின்ற வகையான் இவ் வகநிலைப் பாட்டுப்போல அகநிலைக் கொச்சகம் வாராவென்றானாம். 'வகை' என்றதனான், அதிகாரத்தானின்ற வெண்கலிப்பாவினது பாநிலையுங் கொள்ளப்படும். அஃதேல் அதனைப் பாநிலை யென்னாது 'வகை' என்பது எற்றுக் கெனின்,- வெண்கலிப்பா,

"தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்து

..........................................................................

வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்" (466)

என்றதனான் வெண்பாவிற் சிதையாது வருமென்று உறுத்துக் கூறினானென்பது; எனவே, பாவொழிந்த உறுப்பெல்லாம் பொரு ளுதலாது வெளிப்படத் தோன்றுங் கலிவெண்பாட்டின் உறுப்பு வகையான் வருதலும் உடைத்தென்றவாறு. அங்ஙனம் வருங்கால் இடை நின்ற கொச்சகங்களை,

"ஐஞ்சீ ரடுக்கலும்" (466)

என்ற கலிவெண்பாவிற்கு ஓதியவாறே கொள்க.

மற்று 'நூலறி புலவர்' என வேண்டியதென்னையெனின், தரவு இணைந்து வாராது யாப்பின் வேறுபட்டு ஒரு தரவே கொச்சகமாதலும், தரவிணைந்தவழிச் சுரிதகம் பெறுதலும், அவை தனிச்சொல்லுஞ் சுரிதகமும் உடன்பெறுதலுமெல்லாம் 'யாப்பின் வேறுபட்டன' என்றலும்

ஒத்தாழிசை மூன்றடுக்கினும் அவற்றின் வேறுபாடறிந்து கொச்சகமெனக் கோடலும், தேவபாணியாகாதவழிக் காமப்பொருளே பற்றி வாராது அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்கும்பற்றிப் பொருள் வேறுபட வருதலும் பா வேறுபட வருதலும்பற்றிக் கொச்சகக்கலி யென்று உணர்வோர் நூலறி புலவரெனவும் அல்லாதது புலனாகாதென்பது அறிவித்தற்குமெல்லாம் அறிவித்தற்கு,

"நூலறி புலவர் நுவன்றறைந் தனர்" (467)

என்றானென்பது. எனவே கொச்சகக்கலியுள் ஒருசாரனவற்றை இனமென்றும் வேண்டுவாருளராயின் அவை அவ்வப் பாவின் இனங்கட்கு இவ்வகையே கொச்சகமென வேறுபடு மென்றவாறாயிற்று.

(உ-ம்)"செவ்விய தீவிய சொல்லி யவற்றொடு

..........................................................................

மகனல்லை மன்ற வினி" (கலி.19)

எனவும்,

"செல்லினிச் சென்றுநீ செய்யும் வினைமுற்றி

..........................................................................

அவலம் படுதலு முண்டு" (கலி.19)

எனவும், தரவிரண்டு அடுக்குதலின் தரவிணைக் கொச்சகமெனப்படும். இது நூற்றைம்பது கலியுளொன்றாகலின் வெண்பாவாகியுந் தனித்துவரும். வருங்காற் கலிவெண்பாட் டென்றாயிற்று. ஒருபொருணுதலி இவ்வாறு வரினும் இஃதொக்கும். இது தாழிசையோடு கோடாத் தரவாகலின் வெண்பாவாகியும் வந்தது.

"மாமலர் முண்டகந் தில்லையோ டொருங்குடன்

..........................................................................

சென்றனை களைமோ பூண்கநின் றேரே" (கலி.133)

என்பது தனிச்சொல் லின்றி ஆசிரியச் சுரிதகம் பெற்ற தரவிணைக் கொச்சகம்.

"மின்னொளி ரவிரற லிடைபோழும் பெயலேபோல்

..........................................................................

யேழைத் தன்மையோ வில்லை தோழி" (கலி.55)

இது, தனிச்சொல்லும் ஆசிரியச் சுரிதகமும் பெற்ற தரவிணைக் கொச்சகம். இனி, பல அடுக்கிய பொருட்டொடராய் வருந் தரவு கொச்சகங்களும் பொருட்டொடர்நிலையுள் அறம்பொருளி ன்பம் விராய்வருந் தரவுகொச்சகங்களும் வந்தவழிக் காண்க.

"வெல்புகழ் மன்னவன் விளங்கிய வொழுக்கத்தான்" (கலி.118)

இது, தரவுந் தாழிசையும் போக்கும் முறையானே வந்ததாயினும்,

"அடைநிலைக் கிளவி தாழிசைப் பின்னர்
நடைநவின் றொழுகு மாங்கென் கிளவி" (447)

என்னும் இலக்கணஞ் சிதையத் தாழிசைகடோறுஞ் சொற்சீர் பல வருதலான் ஒத்தாழிசையெனப்படாது அதன் வகைத்தாய் எண்ணிடையிட்டுச் சின்னங்குன்றிய கொச்சகமென்பதூஉமாயிற்று.

"அருமூர்ந்த காட்சியா னறநோக்கா னயஞ்செய்யான்" (கலி.120)

"நயனும் வாய்மையு நன்னர் நடுவும்" (கலி.130)

என அடக்கியலின்றி அடிநிமிர்ந்தொழுகியது போலுங் கொச்சகம் வருங்கால் ஒத்தாழிசையும், வண்ணகமும் போலத் தனிச்சொற் பெற்றும் பெறாதும் வரும். நெய்தற்றிணைப் பாட்டுக்கும் இஃதொக்கும். அது வருமாறு:

"கொடியவுங் கோட்டவு நீரின்றி நிறம்பெறப்
பொடியழற் புறந்தந்த பூவாப்பூம் பொலங்கோதை"

என்னுங் கலியுள் (54) 'அதனான்' எனத் தனிச்சொற் பெற்று அடக்கியலில்லாச் சுரிதகத்தோடு அடிநிமிர்ந்தோடிற்று.

"பான்மருண் மருப்பி னுரல்புரை பாவடி
..........................................................................
அமைக்கவின் கொண்ட தோளிணை மறந்தே" (கலி.21)

என்னுங் கலிப்பாட்டுத் தனிச்சொல்லும் அடக்கியலுமின்றிச் சுரிதகம் பெற்று அடிநிமிர்ந் தொழுகிற்று.

"எஃகிடை தொட்டகார்க் கவின்பெற்ற வைம்பால்போல்"
(கலி.32)

என்னும் பாலைப்பாட்டும்,

"அகன்ஞாலம் விளக்குந்தன் பல்கதிர் வாயாக" (கலி.119)

என்னும் நெய்தற்றிணைப்பாட்டும் அங்ஙனமாமாறு கண்டுகொள்க.

இனி, யாப்பின் வேறுபட்ட கொச்சகவொருபோகோ டொப்பன வற்றுட் சில வருமாறு;

"மன்று பார்த்து
நின்று தாழைக்
கன்று பார்க்கு
மின்றும் வாரார்" (ப.1047)

என்பது, இருசீர் நான்கடித் தரவுகொச்சகம்.

"தஞ்சொல் வாய்மை தேற்றி
யஞ்ச லோம்பென் றகன்ற

வஞ்சர் வாரா ராயி
னெஞ்ச நில்லா தேதான்"

என்பது, முச்சீர் நான்கடித் தரவு கொச்சகம்.

"நீரலர் தூற்றத் துயிலா நெடுங்கங்குல்
வாரல ராகி யவரோ வலித்தமைந்தா
ராரலார் நாரைகா ளன்றில்கா னன்னங்கா
ளூரலர் தூற்றயா னுள்ள முகுவேனோ"

என்பது, நாற்சீர் நான்கடித் தரவுகொச்சகம்.

"கன்னி ஞாழல் கமழ்பூங் கானல் யான்கண்ட
பொன்னங் கொடியை யீன்றோ ரில்லை போலுமான்
மன்னன் காக்கும் மண்மேற் கூற்றம் வரவஞ்சி
யின்ன தொன்று படைத்த தாயினெவன் செய்கோ"

இஃது ஐஞ்சீர் நான்கடித் தரவுகொச்சகம்.

இனி, கோவையாக்கி எழுத்தெண்ணி அளவியற்படுத்துச் செப்பினும் அவையேயாம்.

"காண்பா னவாவினாற் காதலன் காதலிபின் னடவா நிற்ப
நாண்பால ளாதலா னன்னுதல் கேள்வன்பின் னடவா நிற்ப
வாண்பான்மை குன்றா வயில்வே லவன்றனக்கு மஞ்சொ லாட்கும்
பாண்பால வண்டினமும் பாட வருஞ்சுரமும் பதிபோன் றன்றே"
(ப-123)

என்பது அறுசீர் நாலடித் தரவுகொச்சகம். பிறவும் அன்ன.

"இலங்கொளி வெண்மருப்பி னிட்டகை தூங்கவோ ரேந்தல் யானை
கலங்கஞு ரெய்திக் கதூஉங் கவளங் கடைவாய் சோரச்
சிலம்பொழி குன்றென நின்றது செய்வ தெவன்கொ லன்னாய்"

இஃது அறுசீர் மூன்றடித் தரவுகொச்சகம்.

"தண்ணந் துறைவன் றார்மேற் போன
வண்ண வண்டு வாரா தற்றே
வண்ண வண்டு வாரா தாயிற்
கண்ணீர் நில்லா தேகாண்"

என்பது நான்காசிரிய வடியுள் இறுதியடி முச்சீரான் வந்து யாப்பு வேறுபட்டது.

"நிணங்கொள் புலாலுணங்க னின்றுபுள் ளோப்புத றலைக்கீ டாகக்
கணங்கொள் வண்டார்த் துலாங்கன்னி நறுஞாழம் கையி னேந்தி
மணங்கமழ் பூங்கானன் மன்னிமற் றாண்டோ
ரணங்குறையு மென்ப தறியே னறிவேனே லடையேன் மன்னோ"
(சிலப்.கானல்வரி.9)

என்பது இடையடி குறைந்து வந்தது. இஃது,

"அறுசீ ரடியே யாசிரியத் தளையொடு
நெறிபெற்று வரூஉ நேரடி முன்னே" (376)

என்றோதப்பட்டதாயினும் பாமயங்கிவரும் பகுதிபற்றி வேறு காட்டப் பட்டது.

"புன்னை நீழ னின்றார் யார்கொ
லன்னை காணின் வாழாள் தோழி"

எனவும்,

"மல்ல லூர விவ்வி லன்றாற்
பல்பூங் கோதை யில்"

எனவும், இவை இரண்டடியான் ஈற்றடி குறையாதுங் குறைந்தும் வந்தன. இன்னும் மேற்கூறிய கொச்சகவொருபோகின் பகுதியுள் ஒழிந்தனவும் இவ்வாற்றான் வருவனவெல்லாம் வந்தவழிக் கண்டுகொள்க.

இனி, 'வகை' என்றதனான் வெண்கலியுறுப்பு நிலையொத்துப் பா வேறுபடுங் கொச்சகம் வருமாறு:

"ஒன்று, இரப்பான்போ லெளிவந்துஞ் சொல்லு முலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்
...........................................................................
மற்றவன் மேஎவழி மேவாய் நெஞ்சே" (கலி.47)

என்பது தரவும், கொச்சகமும், சுரிதகமும் முறையானே வந்து ஆசிரியச் சுரிதகத்தான் இற்றது. இதனுள் 'ஒன்று' எனவும், 'அவனை' எனவும் சொற்சீருந் தனிச்சொல்லும் வந்தன. இப் பாட்டு மூன்றனுள் ஒன்று ஓரடிமிக்கு மற்றைய நான்கடியாயே வருதலின் மூன்றும் ஒரு பொருண்மேல் வரினும் நூலறிபுலவரான் ஒத்தாழிசை யெனப்படாக் கொச்சகமாயிற்று. பிறவும் இன்னோரன்னவற்றாற் கலியொடு இதனிடை வேறுபாடு தெரிந்து உணரப்படும், அஃதறியாதார்க்கு ஒன்றுபோலக் காட்டினுமென்பது,

"வேனி லுழந்த வறிதுயங் கோய்களிறு
...........................................................................
முன்னிய தேஎத்து முயன்றுசெய் பொருளே" (கலி.7)

என்னும் பாட்டுத் தரவும், போக்கும் பாட்டிடை மிடைந்து ஐஞ்சீரடுக்கி வந்தது. இதனுள் தரவடி நான்கும் வெண்பாவாயினும் அச் செய்யுண் முழுதும் வெண்பாவன்மையிற் கொச்சகமாயிற்று. இனி அறுசீரான் வருவனவும் வந்தவழிக் கண்டுகொள்க.

"காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்" (கலி.39)

என்னுங் கொச்சகக் கலியுள்,

"ஏன லிதணத் தகிற்புகை யுண்டியங்கும்
வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத்
தேனி னிறாலென வேணி யிழைத்திருக்குங்
கானக நாடன் மகன்"

என இடைநின்ற கொச்சகம் ஈற்றடி குறைந்தது.

"புனவேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றி
னனவிற் புணர்ச்சி நடக்குமா மன்றோ
நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே
கனவிற் புணர்ச்சி கடிதுமா மன்றோ"

எனக் கொச்சகம் ஈற்றடி குறையாது வந்தது. இவை இரண்டும் வெண்பா. இதனுள் ஒழிந்தபா மயங்கியவாறு கண்டுகொள்க.

"கொடுமிட னாஞ்சிலான் றார்போன் மராத்து" **(கலி.36)**

என்னும் பாட்டினுள்,

"பாஅய்ப் பாஅய்ப் பசந்தன்று நுதல்
சாஅய்ச் சாஅய் நெகிழ்ந்தன தோள்"

என முட்டடியின்றிக் குறைவுசீர்த்தாகிய சொற்சீரடி வந்தது.

"மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்" **(கலி.104)**

என்னும் முல்லைப் பாட்டினுள்,

"இரிபெழு பதிர்பதிர் பிகந்துடன் பலர்நீங்க
வரிபரி பிறுபிறுபு குடர்சோரக் குத்தித்தன்
கோடழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும்
வாடா வெகுளி யெழிலேறு கண்டை"

எனவும்,

"தாளெழு துளிபிணி யிசைதவிர் பின்றித் தலைச்சென்று"

எனவும் முடுகியலடி வந்தது.

இவற்றுளெல்லாஞ் சொற்சீரடி வந்தன. ஒழிந்த கொச்சகப் பகுதியும் இவ்வாறே வந்தவழிக் கண்டுகொள்க.

இனி, தரவும் போக்குமின்றிக் கொச்சகம் பல தொடர்ந்திற்றது வருமாறு:

"காலவை, சுடுபொன் வளைஇய வீரமை சுற்றொடு" **(கலி.85)**

என்னும் மருதக்கலி உறழ்பொருட்டன்மையிற் கொச்சகக்கலியாயிற்று. இவையெல்லாம் பாநிலை யெனப்பட்ட கொச்சகமாமெனின்,- அற்றன்று;

"அம்போ தரங்க மறுபதிற் றடித்து" (463)

என்றவழி அளவை முற்கூறிய மயக்கினான் இனி யெல்லாந் தன்னள

வெனப்படுமென்று புகுந்தமையின் இதற்குக் கொச்சகவொருபோகின் அளவை கொள்ளப்படாது பாநிலைவகைத் தென்னாமையின்; பிறவும் அன்ன.

இனி, கலிவெண்பாட்டெனக் கூறிய உறுப்புடைக் கலிவெண் பாட்டும், ஈண்டுப் பாநிலை யெனப்பட்ட கொச்சகப்பகுதியுமென இரண்டுங் கொச்சக வுறுப்புடைமையிற் கொச்சகக்கலியென ஒன்றேயாமென மேலைச் சூத்திரத்தோடு இதனை ஒன்றாக வகுப்ப; அற்றன்று; மேல் ஒரு பொருள் கரந்து வெளிப்படத் தோன்றின் ஒரு பொருணுதலியதுபோலக் கலிவெண்பாட் டாகாமைக்கும் வாளாது கலிப்பாவாதற்கும் காரணமென்னையெனின், பிறிதுமொரு பொருள் கூறுவது கலிவெண்பாட்டென்றதற்கு அடையின்றியே,

"வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்" (466)

கரந்த பொருட்டன்று இது என்றமையின் இதுவும் வெண்கலியாம்; அல்லதூஉம்,

"வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்" (466)

என வேறொரு பாவினை உறுப்பாகக் கூறுதன் மற்றொரு பாவிற்கு ஏதுவாகக் கூறுதலாமோவென மறுக்க. ஒருபொருணுதலிய வெண்பாட் டாயின் ஒத்தாழிசைக் கலிவெண்பாட்டென மற்றையவற்றோடு ஒத்த பரப்புடையதுபோல உடனோதானாகலின் இதுவும் அவ்வாறு பரப்புடைத்தாகல் வேண்டுமாகலானும் அஃதமையாதென்பது. இங்ஙனம் மயங்குவாரை நோக்கி யன்றே 'நூனவின் றோர்க்கே' இவ் வேறுபா டுணரலாவதென்று ஆசிரியன் ஓதுவனாயிற்றென்பது.

மற்றிதற்கு அளவை கொள்ளுமாறென்னை? மேற்கொச்சக வொருபோகின் அளவு இன்னதென்றிலனாலெனின் அற்றன்று; வண்ணகத்திற்கு ஓதிய உறுப்பு அமைய வாராமையின் அது கொச்சகமேயாமெனவும், எண்ணுஞ் சின்னமும் இழந்ததேபற்றி அதுவும் ஒருபோகேயாமெனவும்,

"அடக்கிய லின்றி யடிநிமிர்ந் தொழுகியது" (461)

வெண்பாவும் ஆசிரியமுமாகி இறுதலின் அடக்கியலில்லாச் சுரிதகம் பெற்றுத் தரவுபோல வருமெனவும், இவ்வாறன்றி ஒப்பழிய வருமெனவும் மேற்கூறினானன்றோ? அங்ஙனங் கூறவே, அவ் வுறுப்புகள் அவ்வவ் வளவின வென்பதூஉம், அங்ஙனம் வேறுபடுங்கால் அடிநிமிர்ந்தொழுகி யதன் இழிந்தவெல்லையின் ஒன்றிற்றென்பதூஉம் தெரிந்தானாம்; என்னை? அடிநிமிர்ந்தொழுகியதற்கு இழிந்த எல்லை பத்து அடி யென்றமையின்.

இனி, அடிநிமிர்ந்தொழுகியது ஒவ்வாமையின் அதற்கு அளவை இத்துணையென்று,

"ஒருபான் சிறுமை யிரட்டியத னுயர்வு" (462)

என விதந்தோதினான். இங்ஙனம் பல்வேறு வகைப்பட்ட அளவின் வேறுபட்டவற்றையும் யாப்பின் வேறுபட்டு வருமென்றான்; எனவே, ஈரடியானே தாழிசைக் கொச்சகம் வருமெனவும், அடிநிமிர்ந்தொழுகியதன் சிற்றெல்லையாகிய பத்தடியளவும் பாவைப்பாடலும் அம்மனைப்பாடலும் போலுந் தரவுகொச்சகம் வருமெனவும், அவையும் இரண்டடியின் இழியாவெனவும்,

"எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியது" (461)

வேறுபட்டு ஏழடியும் ஐந்தடியுமாகித் தரவுவரினும் வருமெனவும், எட்டடிப் பாகமாகிய நான்கடியின் உயரா தாழிசையெனவும், எல்லாம் ஆண்டே கொள்ளப்படுமாகலின் அவற்றுக்கு அளவை கூறியதிலனென்று கடா வருவதென்னையென மறுக்க. அஃதேல், தாழிசைக் கொச்சகமாகிய பரணிச் செய்யுளுந் தரவுகொச்சகமாகிய தொடர்நிலைச் செய்யுளும் முழுவதும் ஒன்றாக நோக்கியக்கால் உயர்ந்த எல்லை கூறாரோவெனின், அஃது அடிவரையறையின் ஒரு செய்யுளாக்கியே அளவை கூறினான், அவை கொச்சகமாயினுந் தரவுகொச்சகமெனப் பெயர் பெறுத லாயினென்பது; அஃதேல், அகநிலைக் கொச்சகத்திற்கும் அவையே அளவாம் பிறவெனின், அற்றன்று;

"அம்போ தரங்க மறுபதிற் றடித்து" (463)

என்ற வழி, அளவை முற்கூறிய மயக்கினான் இனிக்கூறும் உறுப்புடைக் கலிப்பாவிற் கெல்லாம் அதனளவெனப் படுமென்று புகுந்தமையின் இதற்குக் கொச்சக வொருபோகின் அளவை கொள்ளப்படாது. பாநிலை வகைத்தென்னாமையின் இவற்றைத் தொகைநிலையளவின் அடி யுடையவென்பது.

"தொகுநிலை யளவி னடியில" (472)

என்புழிச் சொல்லுதும். அஃதேல் 'பாநிலை வகையே கொச்சகக் கலி' என்றவழி, கொச்சகவொருபோகொடு ஒப்பது அளவொழித்தேயென்பதும் வரைந்தோதுக வெனின், இருவழி யொப்பனவும் உளவாகலின் அங்ஙனங் கூறினானென்பது. அவை இரண்டடி முதலாகப் பத்தடியளவும் வருவன தரவுகொச்சகமென மேற்காட்டிய செய்யுளுட் காணப்படும். (155)

## நச்சினார்க்கினியர்

**154. தரவும் போக்கும்..............................தோன்றும்.**

*இது, மேல் வெளிப்படு பொருட்டெனப்பட்ட கலிவெண்பா விரவுறுப்புடைமையின் வேறுவேறு கூறுகின்றது.*

(இ-ள்) தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்தும் - தரவிற்கும் போக்கிற்கும் இடையன பாட்டாகிப் பயின்றும், ஐஞ்சீர் அடுக்கியும் -

வேறு நின்றவொரு சீரினை அளவடியோடு அடக்கிக்கூற ஐஞ்சீராகியும், ஆறு மெய் பெற்று - அவ்வாறே இருசீரடுக்க ஆறுசீர் பெற்றும்,. வெண்பா இயலான் வெளிப்படத் தோன்றும் - வெண்பா எனப்பட்ட உறுப்பின் இயற்கை சிதையாமல் பொருள் புலப்படத் தோன்றும் எ-று.

எனவே, தரவும் போக்கும் முற்கூறியவாறே முன்னும் பின்னும் நிற்றலும் சுரிதகமாயின் அகவலும் வெள்ளையுமாகி வருதலும் அவை தனிச்சொற் பெற்றும் பெறாதும் நிற்றலுங் கொள்க. பாட்டிறுதி நிற்கும் போக்கினைத் தரவோடு முற்கூறியது, தரவிறுதி சீரானிறுமாறு போல வெள்ளைச் சுரிதகமும் ஓரோவழிச் சீரா னிறுமென்றற்கு.

(எ-டு)' நயந்தலை மாறுவர்' (கலி.80)

என்னும் மருதக்கலியுள்,

" ஐயவெங், காதிற் கனங்குழை வாங்கிப் பெயர்தொறும்
போதில் வறுங்கூந்தற் கொள்வதை நின்னையா
மேதிலார் கண்சாய நுந்தை வியன்மார்பிற்
றாதுதேர் வண்டின் கிளைபடத் தைஇய
கோதை வரிபாடக் காண்டும்"

எனத் தேமாவா னிற்றது.

இனிப் பாட்டினைப் போக்கின் பின் வைத்[illegible]னாற் போக்குப்போ னாற்சீரா னிறும்பாட்டும் வருஞ் சிறுபான்மையென்[illegible] கொள்க.

(எ-டு)"கரந்தாங்கே யின்னாநோய் செய்யுமற் றீதே
பரந்த சுணங்கிற் பணைத்தோளாள் பண்பு" (கலி.141)

என வரும். இங்ஙனம் வைப்பவே வருகின்ற ஐஞ்சீரடுக்கலும் ஆறுமெய் பெறுதலும் இப் பாட்டின்கணன்றி ஏலாவாயின. இத்னை ஈற்றுக்கண் வைத்ததனானே மேற்கூறுங் கொச்சகமுந் தரவும் போக்கு மின்றி இப் பாட்டு மிடைந்தும் வருமென்பதூஉம் இவ் வதிகாரத்தாற் கொள்க.

'மெய்' யென்றதனான் அடுக்குஞ்சீ ரதன் முதலினும் இறுதியினும் வருமென்று கொள்க. இயற்கை சிதையாமற் றோன்றுமெனவே கட்டளையும் கட்டளை யல்லதுமென்ற வெண்பாவிலக்கண மிரண்டுஞ் சிதையாமை வருமென்றாராம்.

'வெளிப்பட' வென்றதனாற் றளைவிரவி வருதலுங் கொள்க.

தரவும் போக்குமென்ற உம்மைகள் எண்ணும்மைகள். ஒழிந்த மூன்றும் இறந்தது தழீஇய எச்சவும்மை.

கலிவெண்பாட்டுத் தனிநிலையின்றி விரவுறுப்பாயும் வரு மென்றலின்.

" சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்

பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி யறனறிதல்
சான்றவர்க் கெல்லாங் கடனானா லிவ்விருந்த
சான்றீ ருமக்கொன் றறிவுறுப்பென் மான்ற
துளியிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி
யொளியோ டுருவென்னைக் காட்டி யளியளென்
னெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டுந் துஞ்சே
னணியலங் காவிரைப் பூவோ டெருக்கின்
பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப
வோங்கிரும் பெண்ணை மடலூர்ந்தென் னெவ்வநோய்
தாங்குத றேற்றா விடும்பைக் குயிர்ப்பாக
வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது
பாடுவேன் பாய்மா நிறுத்து;

யாமத்து மெல்லையு மெவ்வத் திரையலைப்ப
மாமேவி நின்று மடல்புணையா நீந்துவேன்
றேமொழி மாத ருறாஅ துறீஇய
காமக் கடலகப் பட்டு;

உய்யா வருநோய்க் குயவாகு மைய
லுறீஇயா ளீத்தவிம் மா;

காணுந ரெள்ளக் கலங்கித் தலைவந்தெ
னாணெழின் முற்றி யுடைத்துள் ளழித்தரு
மாணிழை மாதரா ளேஎரெனக் காமன
தாணையான் வந்த படை;

காமக் கடும்பகையிற் றோன்றினேற் கேம
மெழினுத லீத்தவிம் மா;

அகையெரி யானாதென் னாருயி ரெஞ்சும்
வகையினா லுள்ளஞ் சுடுதரு மன்னோ
முகையே ரிலங்கெயிற் றின்னகை மாதர்
தகையாற் றலைக்கொண்ட நோய்;

அழன்மன்ற காம வருநோய் நிழன்மன்ற
நேரிழை யீத்தவிம் மா;
ஆங்கதை,

அறிந்தனி ராயிற் சான்றவிர் தான்றவ
மொரீஇத் துறக்கத்தின் வழீஇ யான்றோ
ருள்ளிடப் பட்ட வரசனைப் பெயர்த்தவ
ருயர்நிலை யுலக முறீஇ யாங்கென்
றுயர்நிலை தீர்த்த னுந்தலைக் கடனே." **(கலி.139)**

இது, தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்த கலிவெண்பாட்

டாசிரியச் சுரிதகத்தான் வந்தது. இவ்வாறே வெள்ளைச் சுரிதகத்தான் வருவனவுங் கொள்க.

"கண்டவி ரெல்லாங் கதுமென வந்தாங்கே
பண்டறியா தீர்போல நோக்குவிர் கொண்டது
மாவென் றுணர்மின் மடலன்று மற்றிவை
பூவல்ல பூளை யுழிஞையோ டியாத்த
புனவரை யிட்ட மயங்குதார்ப் பீலி
பிடியமை நூலொடு பெய்ம்மணி கட்டி
யடர்பொன் னவிரேய்க்கு மாவிரங் கண்ணி
நெடியோன் மகனயந் துகந்தாங் கனைய
வடிய வடிந்த வனப்பினென் னெஞ்ச
மிடிய விடைக்கொள்ளுஞ் சாய லொருத்தி
கடியுறை காட்டிய செல்வேன் மடியன்மி
னன்னே னொருவனேன் யான்;

என்னானும், பாடெனிற் பாடவும் வல்லேன் சிறிதாங்கே
யாடெனி லாடலு மாற்றுகேன் - பாடுகோ
வென்னு ளிடும்பை தணிக்கு மருந்தாக
நன்னுத லீத்தவிம் மா;

திங்க ளரவுறிற் றீர்க்கலா ராயினுந்
தங்காதல் காட்டுவர் சான்றவ - ரின்சாய
லொண்டொடி நோய்நோக்கிற் பட்டவென் னெஞ்சநோய்
கண்டுங்கண் ணோடாதிவ் வூர்;

தாங்காச் சினத்தொடு காட்டி யுயிர்செகுக்கும்
பாம்பு மவைப்படி லுய்யுமாம் - பூங்கண்
வணர்ந்தொலி யைம்பாலான் செய்தவிக் காம
முணர்ந்து முணராதிவ் வூர்;
ஆங்க,

என்க ணிடும்பை யறியினோ னுங்கட்
டெருளுற நோக்கித் தெரியுங்கா லின்னு
மருளுறு நோயொடு மம்ம ரகல
விருளுறழ் கூந்தலா ளென்னை
யருளுறச் செயினுமக் கறனுமா ரதுவே." **(கலி.140)**

இது 'பாடெனி' லென்றும் 'ஆடெனி' லென்றும் எதுகையியைந்த அளவடி, 'என்னானும்' என வேறு நின்ற சீரோடுங் கூடி ஐஞ்சீரடுக்கிற்று. இதனுள் 'ஆங்க' எனத் தனிச்சொல் வந்தது.

"காரார‌ப் பெய்த" **(கலி.109)**

என்னும் முல்லைப்பாட்டுள்,

"இவள்தான், திருந்தாச் சுமட்டின ளேனைத் தோள்வீசி
வரிக்கூழ் வட்டி தழீஇ யரிக்குழை
யாடற் றகையள் கழுத்தினும் வாலிதி
னுண்ணிதாத் தோன்று நுசுப்பு.

என ஐஞ்சீரடுக்கியும்,

இவள்தான், வருந்தநோய் செய்திறப்பி னல்லான் மருந்தல்லள்
யார்க்கு மணங்காதல் சான்றாளென் றூர்ப்பெண்டிர்
மாங்காய் நறுங்கடி கூட்டுவேம் யாங்கு
மெழுநின் கிளையொடு போவென்று தத்தங்
கொழுநரைப் போகாமற் காத்து முழுநாளும்
வாயி லடைப்ப வரும்."

என ஐஞ்சீரடுக்கிய சுரிதகத்தானும் வந்தது.

"அரிதினிற் றோன்றிய யாக்கை புரிபுதாம்
வேட்டவை செய்தாங்கே காட்டிமற் றாங்கே
யறம்பொரு ளின்பமென் றம்மூன்றி னொன்றன்
றிறஞ்சேரார் செய்யுந் தொழில்க ளறைந்தன்
றணிநிலைப் பெண்ணை மடலூர்ந் தொருத்தி
யணிநலம் பாடி வரற்கு;

ஓரொருகா லுள்வழிய ளாகி நிறைமதி
நீரு ணிழற்போற் கொளற்கரியள் - போரு
ளடன்மாமே லாற்றுவே னென்னை மடன்மாமேன்
மன்றம் படர்வித் தவள்; வாழி சான்றீர்!

பொய்தீ ருலக மெடுத்த கொடிமிசை
மையறு மண்டலம் வேட்டனள் - வையம்
புரவூக்கு முள்ளத்தே னென்னை யிரவூக்கு
மின்னா விடும்பைசெய் தாள்; அம்ம சான்றீர்!

கரந்தாங்கே யின்னாநோய் செய்யுமற் றிஃதோ
பரந்த சுணங்கிற் பணைத்தோளாள் பண்பு;

இடியுமிழ் வானத் திரவிருள் போழுங்
கொடிமின்னுக் கொள்வேனென் றன்னள் - வடிநாவின்
வல்லாற்முற் சொல்வல்லே னென்னைப் பிறர்முன்னர்க்
கல்லாமை காட்டி யவள்;

வாழி சான்றீர்!
என்றாங்கே,
வருந்தமா வூர்ந்து மறுகின்கட் பாடத்
திருந்திழைக் கொத்த கிளவிகேட் டாங்கே
பொருந்தாதார் போர்வல் வழுதிக் கருந்திறை
போலக் கொடுத்தார் தமர்." (கலி.141)

இதனுள் 'வாழி சான்றீர்' 'அம்ம சான்றீர்' என ஈற்றுக்கண் வந்த சீர்களை முதலடிக்கட் பொருள் முடியுமாறு கூட்டி ஐஞ்சீரடுக்கியாங் கடுக்க அறுசீரா னவ்வாறு வந்ததாம். இதற்கும் அறுசீரடுக்கியும் எனக் கூட்டிப் பொருளுரைக்க. என்றாங்கு - தனிச்சொல்.

"புரிவுண்ட" (கலி.142) என்னும் நெய்தற்கலியுள் "புரிவுண்ட புணர்ச்சியுள்" எனக் கலித்தளையும் வந்து "புல்லாரா மாத்திரை, யருகுவித் தொருவரை யகற்றலிற் றெரிவார்கண்" எனவும், "இனைந்துநொந் தழுதன ணினைந்துநீ டுயிர்த்தனள்" எனவும் இயற்சீர் நிரையாயன்றியும் பாவேறுபட்டு "எல்லையு மிரவுங் கழிந்தவென் றெண்ணி யெல்லிரா, நல்கிய கேள்வ னிவன்மன்ற மெல்ல" என ஐஞ்சீரடி வந்த வெள்ளைச் சுரிதகமும் பெற்ற கலிவெண்பாட்டு.

முற்கூறிய சொற்சீரடியே ஈண்டு ஐஞ்சீரும் அறுசீருமா யடுக்கின என்றுணர்க. இதற்கு இசைச்சீர்களை விதந்தோதவே கலிக்கு நேர்ந்த சொற்சீரடி ஒத்தாழிசைக்கும் இதன்முற் கூறிய கலிவெண்பாட்டிற்கும் வாராவென் றுணர்க. இதற்கினமாகிய முடுகியலும் அவ் விரண்டிற்கும் வாராமை கொள்க. இவற்றிற்கு வரையறை அம்போதரங்கத்திற் கோதிய வரையறையே வேறின்றென வுணர்க.

இனிப் பலவுறுப்பின்றி அவ்வாறு ஒரு பாட்டே வரின் அதனை வெண்கலி யென்பாருமுளர். நூற்றைம்பது கலியுள் அவ்வாறு வருவன இன்மையின் அது சான்றோர் செய்யுளொடு மாறுகொள்ளுமென மறுக்க.

தாழம்படாமையின் இடைநிலைப்பாட் டென்னாதேயுந் துள்ளலுஞ் செப்பலும் என்று மிருவகைக் கொச்சகமும் ஒருங்கு வாராமையிற் கொச்சகமென்னும் பேர் கொடாது பாட்டென்றார்; அதனை வெண்பாவியலான் வெளிப்பட வருமெனவே வெள்ளைக் கொச்சகமெனப்படும் எ-று. (154)

**155. பாநிலை வகையே..........................தனரே.**

*இது, நிறுத்தமுறையே அகநிலைக் கொச்சகக்கலி கூறுகின்றது.*

(இ-ள்) மேற் பாவிநின்ற நிலைவகையான் கொச்சகக் கலியா மென்று நூலறிந்த ஆசிரியர் கூறித் துணிந்தனர் எ-று.

அறை - துணித்தல். "அறைக்கரும்பு" (பொருந.193) போல. பாநிலை யென்றது மேலொருபோகெனக் கூறிய கொச்சகப்பாநிலையை நோக்கிற்று. அதுவுங் கொச்சகமாதலின்.

'துணித்தன' ரென்றதனால் அதிகாரத்தாற் சேட்படக் கூறிய "தரவின் றாகித் தாழிசை பெற்றும்" (செய்.149) என்ற தொன்றனையுமே துணிந்து மாற்றியொழிந்தன பாவிநின்ற வகையான் இவ் வகநிலைக் கொச்சகமும் வருமென்றுணர்க. எனவே பரணிப்பாட்டுப்போல வெளிப்பட்டு அகநிலைக் கொச்சகம் வாராவென்றாராம்.

'வகை' யென்றதனான் அதிகாரத்தானின்ற கலிவெண்பாவினது பாநிலையுங் கொள்ளப்படும். அது கொள்ளுங்கால் முன்னிற் சூத்திரத்திற் கூறிய நிலையெல்லாங் கொள்ளப்படும். "ஒருபொருணுதலிய"(செய்.154) என்னுஞ் சூத்திரத்தினிலை கொள்ளலாகா தென்றுணர்க. எனவே, ஒருபொருணுதலாது வெளிப்படத் தோன்றுங் கலிப்பாட்டினுறுப் பொத்துத் தரவும் போக்கும் பாட்டும் இடைமிடைந்தும் பாட்டுக் கொச்சகமாயும் அவை ஐஞ்சீரும் அறுசீரு மடுக்கிவருதலு மெல்லாங் கொள்ளப்படும். இவ்வாறு வந்தன வெண்பாவிற் சிதைந்து ஓசையும் பொருளும் வேறாகலிற் கொச்சகமென்றார். தரவிணைந்து வாராது யாப்பின் வேறுபட்டு ஒரு தரவே வந்தாற் கொச்சகமென்றலுந் தரவிணைந்துழிச் சுரிதகம் பெறுதலும் வேறாகலிற் கொச்சகமென்றார்.

தரவிணைந்து தனிச்சொல்லுஞ் சுரிதகமு முடன்பெறுதலும் எல்லாம் யாப்பின் வேறுபட்ட கொச்சகமென்றலும், ஒத்தாழிசை மூன்றடுக்கிலு மவற்றின் வேறுபாடறிந்து கொச்சகமென்றலும், தேவபாணியாகாதவழிக் காமப்பொருள்பற்றி வாராது அறம், பொருள், இன்பம், வீடென்னு நான்கும்பற்றிப் பொருள் வேறுபட வந்தன கொச்சகமென்றலும், பாவேறுபட்டன கொச்சகமென்றலும் பிறவும் உணர்வோரே நூலறி புலவர்; அல்லாதார் நூலுணராரெனப் தறிவித்தற்கு "நூனவில் புலவ" ரென்றார்.

எனவே, கொச்சக்கலியுள் ஒருசாரனவற்றை இனமென்பார்க்கு அவை அவ்வப் பாக்களுள் வரின் இவ்வகையே கொச்சகமெனல் வேண்டும் அது பொருந்தாதென்றவாறாயிற்று.

(எ-டு)"செவ்விய தீவிய சொல்லி யவற்றொடு
பைய முயங்கிய வஞ்ஞான் றவையெல்லாம்
பொய்யாதல் யான்யாங் கறிகோமற் றைய
வகனகர் கொள்ளா வலர்தலைத் தந்து
பகன்முனி வெஞ்சுர முள்ள லறிந்தேன்
மகனல்லை மன்ற வினிது;
செல்வினைச் சென்றுநீ செய்யும் வினைமுற்றி

யன்பற மாறியா முள்ளத் துறந்தவள்
பண்பு மறிதிரோ வென்று வருவாரை
யென்றிறம் யாதும் வினவல் வினவிற்
பகலின் விளங்குநின் செம்மல் சிதையத்
தவலருஞ் செய்வினை முற்றாம லாண்டோ
ரவலம் படுதலு முண்டு." (கலி.19)

இது தரவிணைக் கொச்சகம்.

கொச்சகம் வெண்பாவாயும் வருதலானுந் தாழிசையோடு தொடராது வருதலானும் இவை கொச்சகமாயிற்று. ஒரு பொருணுதலி யிவ்வாறு வரினுங் கொச்சகமென்றுணர்க.

"மாமலர் முண்டகந் தில்லையோ டொருங்குடன்
கான லணிந்த வுயர்மண லெக்கர்மேற்
சீர்மிகு சிறப்பினோன் மரமுதற் றைசத்த
நீர்மலி கரகம்போற் பழந்தூங்கு முடத்தாழைப்
பூமலர்ந் தவைபோலப் புள்ளல்குந் துறைவகேள்;

ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குதவுதல்
போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுத
லன்பெனப் படுவது தன்கிளை செறாமை
யறிவெனப் படுவது பேதையார் சொன்னோன்றல்
செறிவெனப் படுவது கூறியது மறாமை
நிறைவெனப் படுவது மறைபிற ரறியாமை
முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வௌவல்
பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்

ஆங்கதை யறிந்தனி ராயினென் றோழி
நன்னுத னலனுண்டு துறத்தல் கொண்க
தீம்பா லுண்டோர் கொள்கலம் வரைதலி
னின்றலை வருந்தியாள் துயரஞ்
சென்றனை களைமோ பூண்கநின் றேரே." (கலி.133)

இது, தனிச்சொல்லின்றி யாசிரியச் சுரிதகம் பெற்ற தரவிணைக் கொச்சகம்.

"மின்னொளி ரவிரற லிடைபோழும் பெயலேபோற்
பொன்னகைத் தைவகிர் வகைநெறி வயங்கிட்டுப்
பொழிலிடை யிட்ட கமழ்நறும் பூங்கோதை
யின்னகை யிலங்கெயிற்றுத் தேமொழித் துவர்ச்செவ்வாய்
நன்னுதா னினக்கொன்று கூறுவாங் கேளினி;

நில்லென நிறுத்தா னிறுத்தே வந்து
நுதலு முகனுந் தோளுங் கண்ணு

மியலுஞ் சொல்லு நோக்குபு நினைஇ
யைதேய்ந் தன்று பிறையு மன்று
மைதீர்ந் தன்று மதியு மன்று
வேயமன் றன்று மலையு மன்று
பூவமன் றன்று சுனையு மன்று
மெல்ல வியலு மயிலு மன்று
சொல்லத் தளருங் கிளியு மன்று;
எனவாங்கு,
அனையன பலபா ராட்டிப் பையென
வலையர் போலச் சோர்பத னொற்றியென்
னெஞ்சு நெகிழ்ந்த செவ்வி காணூஉப்
புலையர் போலப் புன்க ணோக்கித்
தொழலுந் தொழுதான் தொடலுந் தொட்டான்
காழ்வரை நில்லாக் கடுங்களி றன்னோன்
றொழூஉந் தொடூஉமவன் றன்மை
யேழைத் தன்மையோ வில்லை தோழீ." (கலி.55)

இது, தனிச்சொல்லும் ஆசிரியச் சுரிதகமும் பெற்ற தரவிணை.

"வெல்புகழ் மன்னவன் விளங்கிய வொழுக்கத்தா
னல்லாற்றி னுயிர்காத்து நடுக்கறத் தான்செய்த
தொல்வினைப் பயன்துய்ப்பத் துறக்கம்வேட் டெழுந்தாற்போற்
பல்கதிர் ஞாயிறு பகலாற்றி மலைசேர
வானாது கலுழ்கொண்ட வுலகத்து மற்றவ
னேனையா னளிப்பான்போ லிகலிருண் மதிசீப்பக்
குடைநிழ லாண்டோற்கு மாளிய வருவாற்கு
மிடைநின்ற காலம்போ லிறுத்தந்தே மருண்மாலை;
மாலைநீ,
தூவறத் துறந்தாரை நினைத்தலிற் கயம்பூத்த
போதுபோற் குவிந்தவென் னெழினல மெள்ளுவா
யாய்சிறை வண்டார்ப்பச் சினைப்பூப்போற் றளைவிட்ட
காதலர்ப் புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய்;
மாலைநீ,
தையெனக் கோவலர் தனிக்குழ லிசைகேட்டுப்
பையென்ற நெஞ்சத்தேம் பக்கம்பா ராட்டுவாய்
செவ்வழியாழ் நரம்பன்ன கிள்வியார் பாராட்டும்
பொய்தீர்ந்த புணர்ச்சியுட் புதுநலங் கடிகல்லாய்;
மாலைநீ,
தகைமிக்க தாழ்சினைப் பதிசேர்ந்து புள்ளார்ப்பப்
பகைமிக்க நெஞ்சத்தேம் புன்மைபா ராட்டுவாய்
தகைமிக்க புணர்ச்சியார் தாழ்கொடி நறுமுல்லை
முகைமுகந் திறந்தன்ன முறுவலுங் கடிகல்லாய்;
எனவாங்கு,

மாலையு மலரு நோனா தெம்வயி
னெஞ்சமு மெஞ்சுமற் றில்ல வெஞ்சி
யுள்ளா தமைந்தோ ருள்ளு
முள்ளி லுள்ள முள்ளு ளுவந்தே." **(கலி.118)**

இது "நடைநவின் றொழுகு மாங்கென் கிளவி" (செய்.135) என்னு மிலக்கணஞ் சிதைய இடையிடைச் சொற்சீரடி பல வருதலின் ஒத்தாழிசையாகாது எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றிய கொச்சக மாயிற்று.

இனி,

"அகன்ஞாலம்..........மயங்கி யோரே" **(கலி.119)**

"எஃகிடை தொட்டகார்" **(கலி.32)**

இவையும் இவ்வாறே வந்தன.

இனி யாப்பின் வேறுபட வந்த "அருடீர்ந்த காட்சி" (கலி.120) "நயனும் வாய்மையும்" (கலி.130) என்பனவும் ஒக்கும்.

இனிப் பலவடுக்கிப் பொருட்டொடராய அறம், பொருள், இன்பம், வீடென்பன விராய்ப் பொருள் வேறுபடவருந் தரவுகொச்சகம் பின்னுள்ளோர் செய்த சிந்தாமணி முதலியனவாம்.

"கொடியவுங் கோட்டவு நீரின்றி நிறம்பெறப்
பொடியழற் புறந்தந்த பூவாப்பூம் பொலங்கோதை
தொடிசெறி யாப்பமை யரிமுன்கைப் பணைத்தோளா
யடியுறை யருளாமை யொத்ததோ நினக்கென
நரந்தநா றிருங்கூந்த லெஞ்சாது நனிபற்றிப்
பொலம்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை
நலம்பெறச் சுற்றிய குரலமை யொருகாழ்
விரன்முறைச் சுற்றி மோக்கலு மோந்தனன்
அறாஅவவிழ்ந் தன்னவென் மெல்விரற் போதுகொண்டு
செறாஅச் செங்கண் புதைய வைத்துப்
பறாஅக் குருகி னுயிர்த்தலு முயிர்த்தனன்
தொய்யி லிளமுலை யினியன தைவந்து
தொய்யலந் தடக்கையன் வீழ்பிடி யளிக்கு
மையல் யானையின் மருட்டலு மருட்டினன்;
அதனால்,
அல்லல் களைந்தனன் றோழி நன்னக
ரருங்கடி நீவாமை கூறி னன்றென
நின்னொடு சூழ்வ றோழி நயம்புரிந்
தின்னது செய்தா ளிவளென
மன்னா வுலகத்து மன்னுவது புரைமே." **(கலி.54)**

'அதனால்' எனத் தனிச்சொற் பெற்று அடக்கியலில்லாச் சுரிதகத் தோடு அடிநிமிர்ந்தோடிற்று.

"பான்மருண் மருப்பி னுரல்புரை பாவடி
யீர்நறுங் கமழ்கடாத் தினம்பிரி யொருத்த
லாறுகடி கொள்ளும் வேறுபுலம் படர்ந்து
பொருள்வயிற் பிரிதல் வேண்டு மென்னு
மருளில் சொல்லு நீசொல் லினையே
நன்னர் நறுநுத லயந்தனை நீவி
நின்னிற் பிரியலெ னஞ்சலோம் பென்னு
நன்னர் மொழியு நீமொழிந் தனையே
அவற்றுள், யாவோ வாயின மாஅன் மகனே
கிழவ ரின்னோ ரென்னாது பொருள்தான்
பழவினை மருங்கிற் பெயர்பு பெயர்புறையு
மன்ன பொருள்வயிற் பிரிவோய் நின்னின்
றிமைப்புவரை வாழாண் மடவோ
ளமைக்கவின் கொண்ட தோளிணை மறந்தே." (கலி.21)

'அவற்றுள்' என ஐஞ்சீரடி வந்து தனிச்சொல்லும் அடக்கியலு மின்றிச் சுரிதகம் பெற்று அடிநிமிர்ந் தோடிற்று.

"அகன்ஞாலம் விளக்கும்" (கலி.119)

கொச்சகவொருபோகொடு ஒப்பாமாறு.

"மன்று பார்த்து
நின்று தாயைக்
கன்று பார்க்கு
மின்றும் வாரார்."

இஃது இருசீர் நான்கடித் தரவுகொச்சகம்.

"தஞ்சொல் வாய்மை தேற்றி
யஞ்ச லோன்பென் றகன்ற
வஞ்சர் வாரா ராயி
னெஞ்ச நில்லா தேகாண்."

இது முச்சீர் நான்கடித் தரவுகொச்சகம்.

"நீரலர் தூற்றத் துயிலா நெடுங்கங்குல்
வாரல ராகி யவரோ வலித்தமைந்தார்
ஆரலார் நாரைகா ளன்றில்கா ளன்னங்காள்
ஊரலர் தூற்றயா னுள்ள முகுவேனோ."

இது நாற்சீர் நான்கடித் தரவுகொச்சகம்.

"கன்னி ஞாழற் கமழ்பூங் கானல் யான்கண்ட
பொன்னங் கொடியை யீன்றோ ரில்லை போலுமான்

மன்னன் காக்கு மண்மேற் கூற்றம் வரவஞ்சி
யன்ன தொன்று படைத்தா யாயி னெவன்செய்கோ."

இஃது ஐஞ்சீர் நான்கடியான் வந்தது.

இனி, "நூனவில் புலவ" ரென்றதனான் இதனைக் கோவையாக்கி யெழுத்தெண்ணி யளவியற்படுத்துச் செய்வனவுந் தரவுகொச்சகம். அவற்றுள் நேரெழுத்து வருவனவுங் கொச்சகமாம்.

(எ-டு)"திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக்
குரு..........................கின்றதே" **(திருச்சிற்-1)**

"போதோ விசும்போ..........................பதியே" **(திருச்சிற்-2)**

இவை பதினேழும் பதினாறுமாய் வந்த தரவுகொச்சகம்.

"குயலைச் சிலம்படிக் கொம்பினை...........பளிக்கறையே."
**(திருச்சிற்.30)**

"காரணி கற்பகங் கற்றவர் நற்றுணை பாணரொக்கல்
சீரணி..............................மூதியமே." **(திருச்சிற்.400)**

இவை யொரோவெழுத்து மிக்க தரவுகொச்சகம்.

"காண்பா னவாவினாற் காதலன் காதலிபின் னடவா நிற்ப
நாண்பால ளாகுதலா னன்னுதறன் கேள்வன்முன் னடவா நிற்ப
வாண்பான்மை குன்றா வயில்வே லவன்றனக்கு மஞ்சொ லாட்கும்
பாண்பால் வரிவண்டு பாடு மருஞ்சுரமும் மதிபோன் றன்றே."

இஃது அறுசீர் நான்கடித் தரவுகொச்சகம். பிறவுமன்ன.

"இலங்கொளி வெண்மருப்பி னிட்டகை தூங்கவோ ரேந்தல் யானை
கலங்கஞ ரெய்திக் கதூஉங் கவளங் கடைவாய் சோரச்
சிலம்பொழி குன்றென நின்றது செய்வ தெவன்கொ லன்னாய்."

இஃது அறுசீர் மூன்றடிக் கொச்சகம்.

"தண்ணந் துறைவன் றார்மேற் போன
வண்ண வண்டு வாரா தற்றே
வண்ண வண்டு வாரா தாயிற்
கண்ணியு நில்லாதே காண்."

இது நான்கடி யாசிரியத்துள் இறுதி முச்சீரான் வந்து யாப்பு வேறுபட்டது.

"நிணங்கொள் புலாலுணங்கு முன்றினின்று
புள்ளோப் புதல்தலைக் கீடாகக்
கணங்கொள் வண்டார்த் துலாங்கன்னி
நறுஞாழல் கையி னூன்றி

மணங்கமழ் பூங்கானன் மன்னிமற் றாண்டோ
ரணங்குறையு மென்ப தறியே
னறிவேனே லடையேன் மன்னோ." (சிலப்.கானல்.வரி)

இஃது ஈற்றயலடி குறைந்தது.

இதனைப் பாமயக்கத்துக்கும் ஏற்று நிற்றலின் ஈண்டுக் காட்டிற்று. "அறுசீ ரடியே" (செய்.64) என்னுஞ் சூத்திரத்திற் கூறிற்றேனுமென்பது.

இது, ஒருபொருண்மேன் மூன்றடுக்கி வருதலுங் கொள்க.

"கோடல் விண்டு கோப மூர்ந்த கொல்லைவாய்
மாடு நின்ற கொன்றை யேறி மௌவல் பூத்த பாங்கெலா
மாடு மஞ்ஞை யன்ன சாய லாய லஞ்சொன் மாதரா
யாடன் மைந்தர் தேரும் வந்து தோன்றுமே."

இது, நடுவீரடி மிக்கது.

"இரங்கு குயின்முழவா வின்னிசையாழ் தேனா
வரங்க மணிபொழிலா வாடும்போலு மிளவேனி
லரங்க மணிபொழிலா வாடுமாயின்
மரங்கொன் மணந்தகன்றார் நெஞ்சமென் செய்த திளவேனில்"

"வண்டுளர் பூந்தார் வளங்கொன்றைத் தாரன்றே"

"முத்தரும்பிப் பைம்பொன் மலர்ந்து முருகுயிர்க்குந்
தொத்தரும்பு கானற் றுறையேந்
துறைவந் தெமது தொன்னலமு நாணு
நிறைவளையும் வெளவி நிறையற்றா னஞ்சேர்ப்பன்."

இவை, அடியும் அசையுஞ் சீரு மிடைமடக்கிச் சிலவடி மறைந்தன. இவை யசையுஞ் சீரும் அடிமடக்கியும் வரும்.

"புன்னை நீழ னின்றார் யார்கொ
லன்னை காணின் வாழாளே தோழி."

"மல்ல லூரா விவ்வி லன்றாற்
பல்பூங் கோதை யில்."

இவை, ஈரடியா யீற்றடி குறையாதுங் குறைந்தும் வந்தன.

"கொய்தினை காத்துங் குளவி யடுக்கத்தெம்
பொய்தற் சிறுகுடி வாரனீ யைய நலம்வேண்டின்"

இது, ஈரடியா யீற்றடி மிக்கது. இதுவும் ஒருபொருண்மேன் மூன்றடுக்குதலுங் கொள்க.

இன்னும் முற்கூறிய கொச்சகவொருபோகின் பகுதியாய் வேறுபட்டு வருவன வந்துழிக் காண்க.

“வடிவுடை நெடுமுடி வானவர்க்கும் வெலற்கரிய
கடிபடு நறும்பைந்தார்க் காவலர்க்குங் காவலனாங்
கொடிபடு வரைமார்பிற் கோழியார் கோமானே;

துணைவளைத் தோளி யிவண்மெலியத் தொன்னலந்
தொடர்புண்டாங்
கிணைமலர்த்தா ரருளுமே லிதுவிதற்கோர் மாறென்று
துணைமலர்த் தடங்கண்ணார் துணையாகக் கருதாரே;

அதனால்,
செவ்வாய்ப் பேதை யிவடிறத்
தெவ்வா றாங்கொலி தெண்ணிய வாறே.”

இது, தனிச்சொல்லுஞ் சுரிதகமும் பெற்றுப் பொருள் வேறுபட்ட தரவிணை.

இனிக் கலிவெண்பா வுறுப்பொத்துப் பாவேறுபடுவன வருமாறு:

“ஒன்று,
இரப்பான்போ லிளிவந்துஞ் சொல்லு முலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்
வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போ
னல்லார்கட் டோன்று மடக்கமு முடையன்
இல்லோர் புன்க ணீகையிற் றணிக்க
வல்லான் போல்வதோர் வண்மையு முடையன்
அன்னா னொருவன்றன் னாண்டகை விட்டென்னைச்
சொல்லுஞ்சொற் கேட்டீ சுடரிழாய் பன்மாணும்

நின்னின்றி யமையலேன் யானென்னு மவனாயி
னன்னான்சொ னம்புண்டல் யார்க்குமிங் கரிதாயி
னென்னுற்ற பிறர்க்குமாங் குளகொல்லோ நறுநுதால்;

அறியாய்நீ வருந்துவல் யானென்னு மவனாயிற்
றமியரே துணிகிற்றல் பெண்டிர்க்கு மரிதாயி
னளியரோ வெம்போல வீங்கிவன் வலைப்பட்டார்;

வாழலேன் யானென்னு நீநீப்பி னவனாயி
னேழைய ரெனப்பலர் கூறுஞ்சொற் பழியாயிற்
சூழுங்கா ளினைப்பதொன் றறிகிலன் வருந்துவல்
சூழுங்கா னறுநுதா னும்முளே சூழ்குவம்;
அவன்,

நாணடப் பெயர்த்த னமக்குமாங் கொல்லாது
பேணின ரெனப்படுதல் பெண்மையு மன்றவன்

வெளவி முயங்கு மாத்திரை வாவெனக்
கூறுவேன் போலக் காட்டி
மற்றவன் மேஎவழி மேவாய் நெஞ்சே." (கலி.47)

இது, ஒன்றெனவும் அவனெனவுஞ் சொற்சீருந் தனிச்சொல்லும் வந்து இடைநிலைப்பாட்டினுள் ஒன்றோரடி மிக்கு ஒருபொருண்மேல் மூன்று வருதலின் ஒத்தாழிசையாகாது கொச்சகமாய்க் கலிவெண் பாட்டின் வேறாயிற்று.

"வேனி லுழந்த வறிதுயங் கோய்களிறு
வானீங்கு வைப்பின் வழங்காத்தேர் நீர்க்கவாங்
கானங் கடத்திரெனக் கேட்பின் யானொன்
றுசாவுகோ வைய சிறிது;

நீயே
செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழநின்
கைபுனை வல்வின் ஞாணுளர் தீயே;

இவட்கே,
செய்வுறு மண்டில மையாப் பதுபோன்
மையில் வாண்முகம் பசப்பூ ரும்மே;

நீயே,
வினைமாண் காழகம் வீங்கக் கட்டிப்
புனைமாண் மரீஇய வம்பு தெரிதியே;

இவட்கே,
சுனைமா ணீலங் காரெதிர் பவைபோ
னினைநோக் குண்க ணீர்நில் லாவே;

நீயே,
புலம்பிய லுள்ளமொடு பொருள்வயிற் செலீஇய
வலம்படு திகிரி வாய்நீ வுதியே;

இவட்கே,
யலங்கிதழ்க் கோடல் வீயுகு பவைபோ
லிலங்கே ரெல்வளை யிறையூ ரும்மே;

எனநின்,
சென்னவை யரவத்து மினையவை நீநீப்பிற்
றன்னலங் கடைகொள்ளப் படுதலின் மற்றிவ
ளின்னுயிர் தருதலு மாற்றுமோ
முன்னிய தேஎத்து முயன்றுசெய் பொருளே." (கலி.7)

இது கலிவெண்பாவிற் கோதிய வுறுப்புப் பெற்றதேனுந் தரவு வெண்பாவாய் ஒழிந்தன வெண்பாவன்மையிற் கொச்சகமாயிற்று.

"காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவா
டாமரைக்கண் புதைத்தஞ்சித் தளர்ந்ததனோ டொழுகலா

னீணாக நறுந்தண்டார் தயங்கப்பாய்ந் தருளினாற்
பூணாக முறத்தழீஇப் போதந்தா னகலகலம்
வருமுலை புணர்ந்தன வென்பதனா லென்றோழி
யருமழை தரல்வேண்டிற் றருகிற்கும் பெருமையளே;
அவனுந்தான்,
ஏன லிதணத் தகிற்புகை யுண்டியங்கும்
வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத்
தேனி னிறாலென வேணி யிழைத்திருக்குங்
கானக நாடன் மகன்;
சிறுகுடி யீரே சிறுகுடி யீரே
வள்ளி கீழ்விழா வரைமிசைத் தேன்றொடா
கொல்லை குரல்வாங்கி யீனா மலைவாழ்ந
ரல்ல புரிந்தொழுக லான்;
காந்தள் கடிகமழுங் கண்வாங் கிருஞ்சிலம்பின்
வாங்கமை மென்றோட் குறவர் மடமகளிர்
தாம்பிழையார் கேள்வர்த் தொழுதெழலாற் றன்னையருந்
தாம்பிழையார் தாந்தொடுத்த கோல்;
எனவாங்கு,
அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்;
அவரும்,
தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்
தொருபக லெல்லா முருத்தெழுந் தாறி
யிருவர்கட் குற்றமு மில்லையா லென்று
தெருமந்து சாய்த்தார் தலை;
நிரையிழாய் நீயுநின் கேளும் புணர
வரையுறை தெய்வ முவப்ப வுவந்து
குரவை தழீஇயா மாடக் குரவையுட்
கொண்டு நிலைபாடிக் காண்;
நல்லாய்,
நன்னா டலைவரு மெல்லை நமர்மலைத்
தந்நாண்டாந் தாங்குவா ரென்னோற் றனர்கொல்;
புனவேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றின்
நனவிற் புணர்ச்சி நடக்குமா மன்றோ
நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே
கனவிற் புணர்ச்சி கடிதுமா மன்றோ;
விண்டோய்கன் னாடனு நீயும் வதுவையுட்
பண்டறியா தீர்போற் படர்கிற்பீர் மற்கொலோ
பண்டறியா தீர்போற் படர்ந்தீர் பழங்கேண்மை
கண்டறியா தேன்போற் கரக்கிற்பென் மற்கொலோ;
மைதவழ் வெற்பன் மணவணி காணாமற்
கையாற் புதைபெறூஉங் கண்ணுங் கண்ணோ;

என்னைமன்,
நின்கண்ணாற் காண்பெண்மன் யான்;
நெய்த லிதழுண்கண்
ணின்கண்ணா கென்கண்மன;
எனவாங்கு,
நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇத்
தகைமிகு தொகைவகை..................வினியே." (கலி.39)

இதனுள் "ஏன லிதணத்து" என்பது முதலிய கொச்சகங்கள் வெண்பாவாய்ப் 'புனவேங்கை' முதலியன துள்ளலோசை விராய்த் தளையொன்றிய கொச்சகமாய் ஒழிந்த பாவு மயங்கிச் சுரிதகமும் முடுகி வருதலின் இது கொச்சகமாயிற்று.

"கொடுமிட னாஞ்சிலான்" (கலி.39)

என்னும் பாட்டுள்,

"பாஅய்ப் பாஅய்ப் பசந்தன்று நுதல்
சாஅய்ச் சாஅய் நெகிழ்ந்தன தோள்"

என முட்டடியின்றிக் குறைவு சீர்த்தாகிய சொற்சீரடி வருதலின் இதுவுங் கொச்சகமாயிற்று.

"மலிதிரை யூர்ந்து" (கலி.104)

என்னும் முல்லைப்பாட்டுள்,

"இரிபெழு பதிர்பதிர் பிகந்துடன் பலர்நீங்க"

"தாளெழு துணிபிணி யிசைதவிர் வின்றி"

எனவும் முடுகுதலிற் கொச்சகமாயிற்று. இவற்றுள் கலிவெண்பாப் போலச் சொற்சீரடியும் வந்தன. பிறவுமன்ன.

மேலைச் சூத்திரத்துள் இதற் கதிகாரம்பட இடைநிலைப் பாட்டினை ஈற்றின் வைத்தமையிற் றரவும் போக்குமின்றி யிடைநிலைப் பாட்டே வருதலுங் கொச்சகமாம்.

(எ-டு) "காலவை,
சுடுபொன் வளைஇய வீரமை சுற்றொடு
பொடியழற் புறந்தந்த செய்யுறு கிண்கிணி;
உடுத்தவை,
கைவினைப் பொலிந்த காசமை பொலங்காழ்மேன்
மையில் செந்துகிர்க் கோவை யவற்றின்மேற்
றைஇய பூந்துகி லைதுகழ லொருசிறை;
கையதை,
யலவன் கண்பெற வடங்கச் சுற்றிய
பலவுறு கண்ணுட் சிலகோ லவிர்தொடி;

பூண்டவை,
யெறியா வாளு மெற்றா மழுவுஞ்
செறியக் கட்டி யீரிடைத் தாழ்ந்த
பெய்புல மூதாய்ப் புகர்நிறத் துகிலின்
மையற விளங்கிய வானேற் றவிர்பூண்;
சூடின,
இருங்கடன் முத்தும் பன்மணி பிறவு
மொருங்குடன் கோத்த வுருளமை முக்காழ்மேற்
சுரும்பார் கண்ணிக்குச் சூழ்நூ லாக
வரும்பவிழ் நீலத் தாயிதழ் நாணச்
சுரும்பாற்றுப் படுத்த மணிமருண் மாலை;
ஆங்க,
அவ்வும் பிறவு மணிக்கணி யாகநின்
செய்வுறு திண்டேர்க் கொடுஞ்சினை கைப்பற்றிப்
பைப்பயத் தூங்குநின் மெல்விரற் சீறடி
நோதலு முண்டீங் கென்கை வந்தீ
செம்மா னின்பா லுண்ணிய பொய்போர்த்து
பாண்டலை யிட்ட பலவல் புலையனைத்
தூண்டிலா விட்டுத் துடக்கித்தாம் வேண்டியார்
நெஞ்சம் பிணித்த றொழிலாத் திரிதரு
நுந்தைபா லுண்டி சில;
நுந்தைவாய்,
மாயச்சூ டேறி மயங்குநோய் கைமிகப்
பூவெழி லுண்கண் பனிபரப்பக் கண்படா
ஞாயர்பா லுண்டி சில;
அன்னையோ,
யாயெம் மகனைப்பா ராட்டக் கதுமெனத்
தாம்வந்தார் தாம்பா லவரொடு தம்மை
வருகென்றார் யார்கொலோ வீங்கு;
என்பாலல்,
பாராட் டுவந்தோய் குடியுண் டீத்தை;
என்,
பாராட்டைப் பாலோ சில;
செருக்குறித் தாரை யுவகைக்கூத் தாட்டும்
வரிசைப்பெரும் பாட்டொ டெல்லாம் பருகீத்தைத்
தண்டுவென் ஞாயர்மாட்டைப் பால்" **(கலி.85)**

என இப் பாட்டு இடைநிலைப் பாட்டே முழுதும் வந்தது. இஃது உறழ்பொருட்டன்மையிற் கொச்சகம். இவை யெல்லாங் கலிவெண்பா வுறுப்பொத்துப் பாவேறுபட்ட கொச்சகம்.

"எருத்தே கொச்சகம்" (செய்.153) என்னும் சூத்திரத்தே அம்போத ரங்கத்திற்குக் கூறியவளவே மேல்வருகின்ற மூன்று பாக்கட்கும் அளவென்று கூறிப் போந்ததனான் அளவு முணர்க.

இனிக் கொச்சக வொருபோகுடன் மாட்டெறிதலின் அதனளவு இதற்கும் அளவாமெனின் ஆகா, வண்ணத்திற்கோதிய வுறுப்பமைய வாராதது கொச்சகமாதலின் அதற்கோதிய அளவே கொச்சக வொருபோகிற்கு அளவாயுஞ் சிறிது வேறுபட்டும் வரும். இது அங்ஙனம் வாராதென்று கொள்க. இதற்கு இரண்டடி முதற் பத்தடியளவும் வருவன தரவுகொச்சகமாமாறு உதாரணத்திற் காண்க. (155)

## சிவலிங்கனார்

**தரவும் போக்.................தனரே.**

(இ-ள்) பாநிலை வகையுள் கொச்சகக்கலி என்பது தரவும் சுரிதகமும் முறையாக இன்றி யிடையிடையே கலந்தும் யாதேனும் ஓரிடத்துப் பொருத்தமாக ஐந்து சீரடி வந்தும், தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம், சொற்சீரடி, முடுகியலடி எனும் ஆறு உறுப்புகள் பெற்றும் வரும் என்று நூல்பயில் புலவர் கூறினர், எ-று.

இது, கொச்சகக்கலியின் பொதுவிலக்கணம்.

(உ-ம்) "காமர் கடும்புனல்" (கலி.36)

### உறழ்கலி

**458. கூற்றும் மாற்றமும் இடையிடை மிடைந்தும்**
**போக்கின்[1] றாகல் உறழ்கலிக் கியல்பே. (149)**

## இலக்குவனார்

468. The nature of *uralkali* is the form of questions and answers being repeated in between without having *pōkku.*

## இளம்பூரணர்

**458. கூற்றும் மாற்றமும்[2]............................கியல்பே.**

*இது, உறழ்கலி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) உறழ்கலிப்பாவிற்கு இலக்கணங் கூற்றும் மாற்றமும்[2] விரவி வந்து சுரிதகமின்றி முடிதல் லென்றவாறு.

---

1 போக்கின்றால் - நச். பாடம்

2. கூற்றும் மாற்றமும் - ஒருவர் கூற்றும் அதற்கு மற்றொருவர் கூறும் பதிலும்

இதனைக் கொச்சகக்கலியின்பின் வைத்தமையான் அக் கொச்சக வுறுப்பினொப்பன இதற்கு உறுப்பாகக் கொள்ளப்படும்.

(உ-ம்)"யாரிவன் எங்கூந்தல் கொள்வான் இதுவுமோர்
ஊராண்மைக் கொத்த படிறுண்டைத் தெம்மனை
வாரல்நீ வந்தாங்கே மாறு;"

இது தலைமகள் கூற்று.

என்னிவை, ஒருயிர்ப் புள்ளின் இருதலை யுள்ளொன்று
போரெதிர்ந் தற்றாப் புலவல்நீ கூறினென்
ஆருயிர் நிற்குமா றியாது;

இது தலைமகன் கூற்று,

ஏஎ, தெளிந்தேம்யாங் காயாதி எல்லாம்வல் எல்லா
பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய்நொடித் தாங்கு
வருந்தல்நின் வஞ்ச முரைத்து;

இது தலைமகள் கூற்று.

மருந்தின்று, மன்னவன் சீறில் தவறுண்டோ நீநயந்த
இன்னகை தீதோ இலேன்;

இது தலைமகன் கூற்று.

மாண மறந்துள்ளா நாணிலிக் கிப்போர்
புறஞ்சாய்ந்து காண்டைப்பாய் நெஞ்சே உறழ்ந்திவனைப்
பொய்ப்ப விடேஎன் எனநெருங்கில் தப்பினேன்
என்றடி சேர்தலும் உண்டு." (கலி.89)

இப் பாட்டுச் சுரிதகமின்றி வந்தவாறு கண்டுகொள்க.

எற்றிற்கு? இறுதியின்கண் வந்தது சுரிதக மாகாதோவெனின், சுரிதகமாகாது, சுரிதகமாவது ஆதிப் பாட்டினும் இடைநிலைப் பாட்டினுமுள்ள பொருளைத் தொகுத்து முடிப்பது.[1] இஃது அன்ன தன்றென்க. (149)

## பேராசிரியர்

**468. கூற்று மாற்றமு...............கியல்பே.**

*இது, முறையானே உறழ்கலி யுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) ஒருவர் ஒன்று கூறுதற்கு மறுமாற்றம் மற்றொருவர் கூறிச் சென்று பின்னர் நின்றது உறழ்கலி என்றவாறு.

---

1. தரவுபாட்டிலும் இடைக்கண் உள்ள உறுப்புப்பாட்டிலும் உள்ள பொருள்களைத் தொகுத்துக் கூறும் முடிப்புரையமைவது.

'போக்கின்று' எனவே, தரவு பெறுதலும் பாட்டிடை மிடைதலும், ஐஞ்சீரடுக்கலும், ஆறுமெய் பெறுதலும், ஒழிந்த சொற்சீரடி பெறுதலும், பாமயங்கி வருதலும், அம்போதரங்கத்திற்கோதிய அளவை பெறுதலு மெல்லாம் வெண்கலிப் பாட்டிற்குப்போல மேனின்ற அதிகாரத்தாற் பெறப்படுவதாயிற்று. "போக்கின் றாக லியல்பு" எனவே, இயல்பின்றி விகாரவகையாற் சில போக்குடையவு மாமென்றானாம்; அதுவும்,

"பலபொருட் கேற்பி னல்லது கோடல்" (665)

என்பதனான், வெள்ளைச் சுரிதகம் ஒழித்து ஆசிரியச் சுரிதகமே கொள்ளப்படும்; என்னை? வெள்ளைக் கொச்சகம் பல வந்தவழி ஒன்றனைச் சுரிதகமென லாகாமையானும், அச் சுரிதகம் இரண்டும்,

"போக்கியல் வகையே வைப்பெனப் படும்" (448)

எனக் கூறப்பட்ட இலக்கணத்த வல்லவாயினும்,

"எழுசீ ரிறுதி யாசிரியங் கலியென" (388)

நின்றவழி அப் பாட்டு முடிந்து காட்டி நிற்றலானும், அதுவே கொண்டாஞ் சிறுபான்மையென்பது.

மற்றுத் தரவின்றி வருவனவும் உளவாலெனின், இதற்குத் தரவுமுதலாயின உறுப்பு விதந்தோதிய திலனாகலின் அஃது ஆராய்ச்சி யின்றென்பது; அற்றன்று; தரவும் போக்கும் உடன்கூறியவதனால், 'போக்கும் பாட்டிடை மிடைந்தும்' என்னும் அதிகாரம்பற்றி ஈண்டுப் போக்கு விலக்கினமையின் அது பொருந்தாது; மற்றென்னை கருதியதெனின், இதற்கு அதிகாரம்பட நிறீஇய கலிவெண்பாட்டு ஓதிய சூத்திரத்திற் பாட்டினை இடைகூறாது தரவும் போக்கும் உடன் கூறியதனாற் போக்கின் இலக்கணத்தனவும் பெறுமென்றானாம்; அதனானே ஈண்டு விலக்குண்ட போக்குப்போலச் சிறுபான்மை தரவின்றியும் வருமென்பது; இக் கருத்தினானன்றே, இதனைப் பாநிலையோடு கூறாது தரவுவகைப்படுங் கொச்சகத்தின் பின்னர் வைப்பானாயிற்றென்பது.

இனி, போக்குடையன தரவின்றி வாரா, அவை ஓரினமென்று ஓதப்பட்டமையினென்பது மற்றிதற்குப் போக்கின்மையும் இலக்கணமாகலின் அதுபற்றியும் பெயர்கொள்ளாமோ வெனின், போக்கின்மை சிறுபான்மை கொச்சகத்திற்கும் உரிமையின் அவ்வகை யுரியதோர் இலக்கணம்பற்றிப் பெயர் கூறானென்பது. மற்றிதனையுங் கொச்சகமென்றக்கால் இழுக்கென்னையெனின், நாடகச் செய்யுட்போல் வேறுவேறு துணிபொருளவாகிப் பல தொடர்ந்தமையிற் பெரிதும் வேறுபாடுடைமை நோக்கியும் இது பொருளதிகாரமாதலாற் பொருள் வேறுபாடுபற்றியும் வரலாற்று முறைமைபற்றியும் வேறு செய்யு ளென்றானென்பது; என்னை?

"மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை
மரவுவழிப் பட்ட சொல்லி னான" (645)

எனவும் மரபியலுள் ஓதுகின்றமையினென்பது. அல்லாக்காற் கைக்கிளையுஞ் செவியறிவுறூஉவும் வாயுறையும் புறநிலையுமென்னும் நான்கு மருட்பாவும் ஒன்றேயாகிய செல்லுமன்றோவென மறுக்க.

அவற்றுக்குச் செய்யுள்:

"அரிநீ ரவிழ்நீல மல்லி யனிச்சம்" (கலி.91)

என்னும் பாட்டினுள், தரவும் பாட்டும் உடைத்தாகிய பாட்டுத்தாம் ஐஞ்சீரடுக்கியும் ஆறுமெய் பெற்றும் வந்து போக்கின்றி நின்று முடிந்த தென்றார்க்கு,

"காணி னெகிழுமென் னெஞ்சாயி னென்னுற்றாய்
பேணாய்நீ பெட்பச் செயல்" (கலி.91)

என்பது, வெள்ளைச் சுரிதகமாகாதோவெனின், ஆகாதன்றே?

"போக்கியல் வகையே வைப்பெனப் படும்" (448)

என்ற இலக்கணத்தான் முற்கூறியவற்றையெல்லாந் தொகுத்து இதன்கண் வைத்திலாமையினென்பது; அல்லதூஉம், அவ்வாறு முடிதலேயன்றி இன்னும் ஒரு கொச்சகம் பெய்து சொல்லி உறழ்ந்தவழியும் அஃது ஏற்பதாகலான் அஃது ஒருதலையாக அமைந்ததெனப்படாது; என்னை?

"அன்னதே யாயினு மாகமற் றாயிழாய்
நின்னகை யுண்க முயங்குவாய் - நின்னெஞ்ச
மென்னொடு நின்ற தெனின்"

என்றாற்போலப் பின்னுமொன்று தலைமகன் உரைத்தற்கு இடம்பட்டு நின்றமையின் அது போக்கியல் வகைத்தாகிய வைப்பெனப்படாது என்க.

இனி, அவ்வாறன்றி ஆசிரியச் சுரிதகம் வந்தவழி அக் கலிப்பாட்டு முடிந்து காட்டுதலின் அதுவும் அடக்கியலன்றாயினும் அதனைச் சிறுபான்மை நேர்ந்தான் அது வழிநூலாகலின் முதனூல் பற்றியென்பது.

"நலமிக நந்திய நயவரு தடமென்றோள்" (கலி.113)

என்னும் முல்லைக்கலி போக்கிலக்கணமில்லாத ஆசிரியச் சுரிதகம் பெற்றுவந்த உறழ்கலியாயிற்று.

"வாரி நெறிப்பட் டிரும்புறந் தாஅழ்ந்த" (114)

என்னும் முல்லைப்பாட்டும்,

"சுணங்கணி வனமுலைச் சுடர்கொண்ட" (கலி.60)

என்னும் குறிஞ்சிப்பாட்டும் அது.

"ஒரூஉநீ யெங்கூந்தல் கொள்ளல்யா நின்னை
வெரூஉதுங் காணுங் கடை;
தெரியிழாய்,......................பனியானாப்
பாடில்கண் பாயல் கொள" **(கலி.87)**

என்பது தரவும் போக்குமின்றி வந்த உறழ்கலி. இவற்றுள் ஐஞ்சீரும், அறுசீரும் வந்தன. ஒழிந்த சொற்சீரடி வந்தன பிறவுங் கண்டுகொள்க. (156)

## நச்சினார்க்கினியர்

**156. கூற்றும் மாற்றமும்......................கியல்பே.**

*இது, முறையானே உறழ்கலி கூறுகின்றது.*

(இ-ள்) ஒருவர் ஒன்று கூறுதற்கு மறுமாற்றம் மற்றொருவர் கூறிச்சென்று பின்னர் அவற்றை யடக்குவதோர் சுரிதகமின்றி முடிவது உறழ்கலியாம் எ-று.

'போக்கின்' றெனவே ஒழிந்த வுறுப்புகளெல்லாங் கலிவெண் பாட்டிற்கு ஓதியவாறே வருமென்பதூஉம், பாமயங்கி வருமென்பதூஉம், அம்போதரங்கத்தினளவே யளவென்பதூஉம் மேனின்ற அதிகாரத்தாற் பெற்றாம். 'இயல்' பெனவே இயல்பன்றி விகாரவகையாற் சில போக்குடையவாதலும் அவைதாம் ஆசிரியமேயாகலும் சில தரவும் போக்குமின்றி வருதலுஞ் சிறுபான்மை கொள்க. போக்குடையன தரவின்றி வாராமையும் கொள்க.

வெள்ளைக் கொச்சகம் பலவந்து அவற்றுள் ஒன்றைச் சுரிதக மெனின் அதற்குப் போக்கியற் பொருண்மையின்மையான் அதனை நீக்கிப் போக்கியற் பொருண்மையின்றேனும் ஆசிரியம் வந்துழி அப் பாட்டிற்கோர் முடிவுகாட்டி நிற்றலின் ஆசிரியமே போக்கியலாமெனக் கொண்டாம்.

நாடகச் செய்யுட்போல வேறுவேறு துணிபொருளவாகிய பல தொடர்ந்த வேறுபாடு நோக்கியும் பொருள் வேறுபாடு நோக்கியும் வரலாற்று முறைமை நோக்கியும் அதற்குரியதோர் இலக்கணத்தால் உறழ்கலியென வேறோர் செய்யுளென்றார். கொச்சகத்தின் அடங்காமையின் "மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை', "மரபுவழிப் பட்ட சொல்லி னான" (மரபியல்,90) என மரபு கூறலின்.

(எ-டு)"அரிநீ ரவிழ்நீல மல்லி யனிச்சம்
புரிநெகிழ் முல்லை நறவோ டார்ந்த
தெரிமலர்க் கண்ணியுந் தாரு நயந்தார்
பொருமுரண் சீரச் சிதைந்து நெருநையி
னின்றுநன் றென்னை யணி;

அணைமென் றோளாய்
செய்யாத சொல்லிச் சினவுவ தீங்கெவ
னையத்தா லென்னைக் கதியாதி தீங்கின்மை
தெய்வத்தாற் கண்டீ தெளிக்கு; மற்றஃது
அறிவல்யா னின்கூ ளனைத்தாக நல்லார்
செறிதொடி யுற்ற வடுவுங் குறிபொய்த்தார்
கூருகிர் சாடிய மார்புங் குழைந்தநின்
றாருந் ததர்பட்ட சாந்தமுஞ் சேரி
யரிமத ருண்கண்ணா ரராக் கவவிற்
பரிசழிந் தியாழநின் மேனிகண் டியானுஞ்
செருவொழிந்தேன் சென்றீ யினி;
தெரியிழாய், தேற்றாய் சிவந்தனை காண்பாய்நீ தீதின்மை
யாற்றி னிறுப்பல் பணிந்து;
அன்னதே யாற்றல்காண்
வேறுபட்ட டாங்கே கலுழ்தி யகப்படின்
மாறுபட் டாங்கே மயங்குதி யாதொன்றுங்
கூறி யுணர்த்தலும் வேண்டாது மற்றுநீ
மாணா செயினு மறுத்தாங்கே நின்வயிற்
காணி னெகிழுமென் னெஞ்சாயி னென்னுற்றாய்
பேணாய்நீ பெட்பச் செயல்.'' (கலி.91)

இது தரவும் பாட்டுமுடைத்தாய் ஐஞ்சீரடுக்கியும் ஆறுமெய் பெற்றும் வந்து போக்கின்றி யுற்ற உறழ்கலி. முற்கூறிய பொருளைத் தொகுத்துக் கூறாமையி னிறுதிநின்ற ''பேணாய்நீ பெட்பச் செயல்'' என்றது வெள்ளைச் சுரிதகமாகாதாம். அது ''அன்னதே யாயினு மாகமற் றாயிழாய் நின்னகை யுண்க முயங்குவாய் நின்னெஞ்ச, மென்னொடு நின்ற தெனின்'' (கலி) எனப் பின்னுமொன்று தலைவன் கூறற்கும் உடம்பட்டு நிற்றலின். இவ்வாறன்றி ஆசிரியச் செய்யுளை முடித்துக் காட்டுதலின் அதனைச் சிறுபான்மை கொண்டார்.

''நலமிக நந்திய நயவரு தடமென்றோ
ளலமர லமருண்க ணந்நல்லாய் நீயுறீஇய
வுலமர லுயவுநோய்க் குய்யுமா றுரைத்துச்செல்;
பேரேமுற் றார்போல முன்னின்று விலக்குவா
யாரெல்லா நின்னை யறிந்ததூ மில்வழி
தளரியா லென்னறிதல் வேண்டிற் பகையஞ்சாப்
புல்லினத் தாயர் மகனேன் மற்றியான்;

ஒக்கும்,
புல்லினத் தாயனை நீயாயிற் குடஞ்சுட்டு
நல்லினத் தாய ரெமர்;

எல்லா,
நின்னொடு சொல்லி னேதமோ வில்லைமன்;
ஏதமன் றென்னை வருவான் விடு;

விடேன்,
உடம்பட்டு நீப்பார் கிளவி மடம்பட்டு

மெல்லிய வாத லறியினு மெல்லியா
னின்மொழிகொண் டியானோ விடுவேன்மற் றென்மொழிகொண்
டென்னெஞ்ச மேவல் செயின்;

நெஞ்சேவல் செய்யா தெனநின்றாய்க் கெஞ்சிய
காதல்கொள் காமங் கலக்குற வேதிலார்
பொய்ம்மொழி தேறுவ தென்;

தெளிந்தேன் றெரியிழாய் யான்;
பல்கால்யாங் கான்யாற் றவிர்மணற் றண்பொழி
லல்க லகலரை யாயமொ டாடி
முல்லை குருந்தொடு முச்சிவேய்ந் தெல்லை
யிரவுற்ற தின்னங் கழிப்பி யரவுற்
றுருமி னதிருங் குரல்போற் பொருமுர
ணல்லேறு நாகுட னின்றன
பல்லா னினநிரை நாமுடன் செலற்கே." **(கலி.113)**

இது, போக்கிலக்கண மில்வழி யாசிரியச் சுரிதகம் பெற்ற உறழ்கலி.

"வாரி நெறிப்பட்டு" **(கலி.114)**

என்னும் முல்லைப்பாட்டும்,

"சுணங்கணி வனமுலை" **(கலி.60)**

என்னுங் குறிஞ்சிப்பாட்டும் அது.

"ஒரூஉநீ யெங்கூந்தல் கொள்ளல்யா நின்னை
வெரூஉதுங் காணுங் கடை;

தெரியிழாய்,
செய்தவ றில்வழி யாங்குச் சினவுவாய்
மெய்பிரிந் தன்னவர் மாட்டு;

ஏடா,
நினக்குத் தவறுண்டோ நீவீடு பெற்றா
யிமைப்பி னிதழ்மறை பாங்கே கெடுதி
நிலைப்பா லறியினு நின்னொந்து நின்னைப்
புலப்பா ருடையர் தவறு;
அணைத்தோளாய்,
தீயாரைப் போலத் திறனின் றுடற்றுதி
காயுந் தவறிலேன் யான்;
மானோக்கி நீயழ நீத்தவ னானது
நாணில னாயி னலிதந் தவன்வயி
னூடுத லென்னோ வினி;

இனி,
யாதுமீக் கூற்ற நாமில மன்ற
தகையது கண்டைப்பாய் நெஞ்சே பனியானாப்
பாடில்கண் பாயல் கொள" **(கலி.87)**

இது, தரவும் போக்குமின்றி வந்த உறழ்கலி. இவற்றுள் ஐஞ்சீரும் அறுசீரும் வந்தன. சொற்சீரடி வந்தன வந்துழிக் காண்க, பிறவுமன்ன. (156)

## சிவலிங்கனார்

**கூற்றும்........................இயல்பே.**

(இ-ள்) உறழ்கலிக்கு இயல்பாவது, ஒருவர் ஒன்று கூறலும் அதற்கு மற்றொருவர் மறுமாற்றம் கூறுதலும் ஆகிய உறழ்ச்சிகள் பாவின் இடையிடையே கலந்து வருவதாம், எ-று.

இது, எல்லா வுறுப்பானும் வருதலும், சில குறைந்துவருதலும், ஒருகால் சுரிதகம் இல்லாது வருதலும் எனப் பலவாறு வரப்பெறும். உறழ்தல் தலைவன், தலைவி, தோழியரிடையே வரும். கலித்தொகையில் உதாரணம் காண்க.

### 12. அடியளவு

### ஆசிரியப்பாவடி

**459. ஆசிரியப் பாட்டின் அளவிற் கெல்லை**
**ஆயிர மாகும் இழிபுமூன் றடியே. (150)**

## இலக்குவனார்

469. The higher limit of *āsiriya* verse is **thousand** lines and lower limit three.

## பி.இ.நூ.

**யா.வி. 32**

சிறுமை மூவடி ஆசிரியத் தொடுவஞ்சி.

**யா.கா. 14**

மூன்று அகவற்கு இழிபு..............உரைப்போர்
உள்ளக் கருத்தின் அளவே பெருமை.

**மு.வீ.யா.ஒ. 20,23**

அகவற்கு ஒருமூன் றடிச்சிறு மையே
பெருமை உரைப்போன் பெற்றித் தாகும்.

**இ.வி. 746**

சிறுமை மூவடி ஆசிரியத் தொடுவஞ்சி.

## இளம்பூரணர்

**459 ஆசிரியப் பாட்டின்................றடியே.**

*என்-னின், ஆசிரியப்பாவிற்கு எல்லை கூறுதல் நுதலிற்று.*

**(இ-ள்)** ஆசிரியப்பாவின் அளவிற்கு எல்லையாவது, சுருங்கினது மூன்றடி; பெருமை ஆயிரமடியாக இடைப்பட்டன எல்லாவடியானும் வரப்பெறும் என்றவாறு.

சுருங்கின பாட்டிற்கு உதாரண மேற்காட்டப்பட்டன. பெரிய பாட்டுப் பத்துப்பாட்டினுள்ளும், சிலப்பதிகாரத்துள்ளும் மணிமேகலை யுள்ளுங் கண்டுகொள்க. 'ஆசிரிய நடைத்தே வஞ்சி' (செய்யுளியல்,104) என்றதனான் வஞ்சிப்பாவிற்கும் ஆயிரமடிப் பெருமையாகக் கொள்ளப்படும். (150)

## பேராசிரியர்

**469. ஆசிரியப் பாட்டி.......................றடியே.**

*இத்துணையும் பாவுறுப்புக் கூறி, இனி அப் பாவினுள்ளுறுப்பாகிய அடியளவை கூறுவானெழுந்தான், அம் முறையானே ஆசிரியப்பாவிற்கு அளவு கூறுகின்றானென்பது.*

**(இ-ள்)** ஆசிரியப்பாவின் பெருக்கத்திற்கு எல்லை ஆயிரம் அடி சுருக்கத்திற்கு எல்லை மூன்றடி என்றவாறு.

(எ-டு)"நீல மேனி வாலிழை பாகத்
தொருவ னிருதா ணிழற்கீழ்
மூவகை யுலகு முகிழ்த்தன முறையே" **(ஐங்குறு.கடவுள்)**

என்னும் ஆசிரியப்பா மூன்றடியால் வந்தது.

"மாயோன் மார்பி னாரம் போல" **(ப-878,996,1062)**

என்பது நான்கடியான் வந்தது.

"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட செவ்வியை ஆகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரல்
சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்கிவள்
பெருந்தே னிமைக்கு நாடனொடு நட்பே" **(குறுந்.18)**

என்பது ஐந்தடியான் வந்தது.

"தாமரை புரையும் காமர் சேவடி
பவழத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேய்க்கு முடுக்கை குன்றின்
நெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேற்

சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைக லெய்தின்றா லுலகே" (குறுந்.கடவுள்)

என்பது ஆறடியான் வந்தது.

"மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்
வளைநரல் பவ்வ முடுக்கை யாக
விசும்புமெய் யாகத் திசைகை யாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
வியன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வ னென்ப
தீதற விளங்கிய திகிரி யோனே" (நற்.கடவுள்)

என்பது, ஏழடியான் வந்தது; பிறவும் அன்ன. ஆயிரம் அடியான் வருவனவும் உளவேற் கண்டுகொள்க.

ஆசிரியப் பாட்டி னெல்லை யென்னாது 'அளவு' என்றதனான், அதனியற்றாகிய வஞ்சிப்பாவிற்கும் இவ்வாறே கொள்ளப்படும். இனி, வெண்பா நெறித்தாகிய கலியளவை அதனுள் வேறுபடுதலின் அதற்கு வேறு விதந்து கூறுதுமென்பது. (157)

## நச்சினார்க்கினியர்

**157. ஆசிரியப் பாட்டின்...............றடியே.**

*இது, நிறுத்த முறையே ஆசிரியத்திற்கு அளவியல் கூறுகின்றது.*

(இ-ள்) ஆசிரியப்பாவின் பெருக்கத்துக்கு எல்லை ஆயிரமாகும். சுருக்கத்திற்கெல்லை மூன்றடியாகும் எ-று.

(எ-டு) "நீல மேனி வாலிழை பாகத்
தொருவ னிருதா ணிழற்கீழ்
மூவகை யுலகு முகிழ்த்தன முறையே." (ஐங்குறு.வாழ்த்து)

இது சுருக்கத்திற்கெல்லை. கூத்தராற்றுப்படை. தலையளவிற் கெல்லை மதுரைக்காஞ்சியும், பட்டினப்பாலையும். ஒழிந்த பாட்டேழும்,[1] பரிபாடலுங் கலியும், ஒழிந்த தொகையாறும் இடையளவிற் கெல்லை. பாட்டினெல்லையென்னாது அளவென்றதனான் அதனியற்றாகிய வஞ்சிக்கும் இவ்வாறே கொள்க.

"செங்கண்மேதி கரும்புழக்கி,
யங்கணீலத் தலரருந்திப்
பொழிற்காஞ்சி நிழற்றுயிலுஞ்
செழுநீர் நல்வயற் கழனி யூரன்
புகழ்த லானாப் பெருவண் மையனே."

---

1. திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு

இது சிற்றெல்லை.

பட்டினப்பாலை யிடையளவிற் கெல்லை. மதுரைக்காஞ்சி தலையளவிற்கெல்லை. (157)

**சிவலிங்கனார்**

**ஆசிரியப்.............................அடியே.**

(இ-ள்) ஆசிரியப்பாவுக்குப் பேரெல்லை ஆயிரமடி, சிற்றெல்லை மூன்றடி எ-று.

**வெண்பா அடிவரையறை**

**460. நெடுவெண் பாட்டே[1] முந்நான் கடித்தே[2]**
**குறுவெண் பாட்டிற் களவேழ் சீரே. (151)**

**இலக்குவனார்**

470. The long *veṇbā* is of twelve lines and the short *veṇbā* is of seven feet.

**பி.இ.நூ.**

**யா.வி. 32**

ஈரடி வெண்பாச் சிறுமை.

**யா.கா. 14**

வெள்ளைக் கிரண்டடி இழிபு.

**மு.வீ.யா.ஒ. 19**

வெள்ளைக் கிரண்டடி.

**இ.வி. 746**

ஈரடி வெண்பாச் சிறுமை.

**இளம்பூரணர்**

**460. நெடுவெண் பாட்டே.......................சீரே.**

*என்-னின், வெண்பாவிற்கு அடிவரையறை உணர்த்துதல் நுதலிற்று.*

---

1. பாட்டு - நச். பாடம்

2. முந்நா லடித்தே - பேரா. நச். பாடம்

(இ-ள்) நெடுவெண்பாட்டிற்கு எல்லை பன்னிரண்டடி; குறுவெண் பாட்டிற்கு அடி அளவடியுஞ் சிந்தடியுமாகிய இரண்டடியும் என்றவாறு.

எனவே, இடையுள்ள அடிகளெல்லாம் உரிய. உதாரண மேற் காட்டப்பட்டது. (151)

## பேராசிரியர்

**470. நெடுவெண் பாட்டே..................சீரே.**

*இது, முறையானே வெண்பாவின் அடியளவு கூறுகின்றது.*

(இ-ள்) வெண்பாவிற்கு இரண்டும் பன்னிரண்டும் இழிபும் ஏற்றமுமாம் என்றவாறு. மற்றிவற்றையும்,

"ஆசிரியப் பாட்டி னளவிற் கெல்லை" (469)

என்றாற்போலக் கூறாது, குறுவெண்பாட்டும் நெடுவெண்பாட்டுமெனப் பெயர் கொடுத்ததனாற் பயந்ததென்னையெனின், குறுமையும் நெடுமையும் அளவியலொடும் படுத்துக் கொள்ளப்படுதலின் அளவியல் வெண்பாட்டும் உளவென்பதூஉம், அதுவே சிறப்புடைய தென்றற்கும் அங்ஙனங் கூறினானென்பது.

இனி, அவற்றைத் தத்தம் வகையாற் சுருக்கப்பெருக்கம் உணருங் கால் 'உய்த்துக் கொண்டுணர்தல்' (666) என்பதனான் உணரப்படும்; என்னை? நெடுவெண்பாட்டிற்கு உயர்ந்த அளவை பன்னிரண்டடி யெனவே அதன் பாகமாய ஆறு அளவியல் வெண்பாவிற்கு உயர்ந்த எல்லையெனவும், நெடுவெண்பாட்டிற்கு இழிந்தவெல்லை ஏழடியெனவும், அளவியல் வெண்பாவிற்கு இழிந்த வெல்லை நான்கடியெனவும் கொள்ள வைத்தமையினென்பது. இங்ஙனம் அளவியல் வெண்பாச் சிறப்புடைத்தாத னோக்கிப் பதினெண்கீழ்க்கணக் கினுள்ளும் முத்தொள்ளாயிரத்துள்ளும் ஆறடியி னேறாமற் செய்யுள் செய்தார் பிறசான்றோருமெனக் கொள்க; இக் கருத்தினானே,

"அம்மை தானே யடிநிமிர் பின்று" (547)

எனக் கூறிய நெடுவெண்பாட்டு நேர்ந்திலன் ஆசிரியன் அதற்கென்பது. அஃதேல், அவ் வளவியல் வெண்பாவுள்ளும் ஆறடியானும் ஐந்தடி யானும் வருதல் சிறுவரவினவாலெனின், அங்ஙனமே செப்பிக்கூறிய[1] மரபிற்றாகிய வெண்பாவினைப் பரந்துபடக் கூறல் இயல்பன்றாகலின் அவற்றுள்ளுஞ் சுருங்கிய நான்கடியே சிறந்த தென்று அதனையேபற்றிப் பெரும்பான்மையுஞ் செய்யுள் செய்தாராவரென்பது. அஃதேல், குறள்வெண்பா அதனினுஞ் சிறந்ததாம் பிறவெனின், அற்றன்று; செப்பிக்கூறுங்கால் தெரியக்கூறலே வேண்டுமாகலின் அளவியல்

1. செப்பிக்கூறல் - செப்பலோசையிற் கூறுதல்

வெண்பாவே பயின்றவெண்பது. நெடுவெண்பாட்டுப்போலச் சிறப்பின்றாங் குறுவெண்பாட்டுமெனின்,

"சிறப்புடைப் பொருளைப் பிற்படக் கிளத்தல்"

என்பதனான், அவ் விரண்டனுள்ளும் அதனைப் பிற்கூறியது அச் சிறப்பு நோக்கியன்றோ வென்பது;

(உ-ம்)"அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று" (குறள்.259)

"அறிந்தானை யேத்தி யறிவாங் கறிந்து
செறிந்தார்க்குச் செவ்வ னுரைப்பச் - சிறந்தார்
செறிந்தமை யாராய்ந்து கொண்டு" (யா.வி.ப.226)

என இவை குறுவெண்பாட்டு.

"துகடீர் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க
வகடுற யார்மாட்டு நில்லாது செல்வஞ்
சகடக்கால் போல வரும்." (நாலடி.2)

"நாண்ஞாயி லுற்ற செருவிற்கு வீழ்ந்தவர்
வாண்மாய் குருதி களிறுழக்கத் - தாண்மாய்ந்து
முன்பக லெல்லாங் குழம்பாகிப் - பின்பகற்
றுப்புத் துகளிற் கெழூஉம் புனனாடன்
றப்பியா ரட்ட களத்து" (களவழி.1)

எனவும்,

"நானாற் றிசையும் பிணம்பிறங்க யானை
யடுக்குபு வேற்றிக் கிடந்த விடித்துரறி
யங்கண் விசும்பி னுருமெறிந் தெங்கும்
பெருமலைத் தூறெறிந் தற்றே யெரிமணிப்பூ
ணேந்தெழின் மார்பத் தியறிண்டேர்ச் செம்பியன்றெவ்
வேந்தரை யட்ட களத்து. (களவழி.6)

எனவும், இவை அளவியல் வெண்பாட்டு.

"பன்மாடக் கூடன் மதுரை நெடுந்தெருவி
லென்னோடு நின்றா ரிருவ ரவருள்ளும்
பொன்னோடை நன்றென்றா ளல்லளே - பொன்னோடைக்
கியானைநன் றென்றாளு மந்நிலையள் - யானை
யெருத்தத் திருந்த விலங்கிலைவேற் றென்னன்
றிருத்தார்நன் றென்றேன் றியேன்" (யா.வி.ப.237)

என்பதும் அது. நெடுவெண்பாட்டு வந்தவழிக் கண்டுகொள்க. (158)

## நச்சினார்க்கினியர்

**158. நெடுவெண் பாட்டு......................சீரே.**

*இது, முறையே வெண்பாவின் அடியளவை கூறுகின்றது.*

(இ-ள்) நெடுவெண்பாப் பேரெல்லை பன்னீரடியையுடைத்து; குறுவெண்பாச் சிற்றெல்லை யீரடியை யுடைத்து எ-று.

இதனை வெண்பாட்டளவிற் கெல்லையென்னாது குறுவெண் பாட்டு நெடுவெண்பாட்டெனப் பெயர் கொடுத்துக் குறுமையும் நெடுமையும் அளவியலோடு படுத்துக் கொள்ளப்படுதலின் அளவியல் வெண்பாட்டு முளவென்பதூஉம், அது சிறப்புடைத்தென்பதூஉம் பெறுதும். எனவே, நெடுவெண்பாவின் பன்னீரடியிற் பாகமாகிய ஆறடியே அளவியல் வெண்பாவுக்குப் பேரெல்லையாகவும், அதன் பாகமாகிய மூன்றடியே குறுவெண்பாவிற்குப் பேரெல்லையாகவும் கோடும். அங்ஙனம் கொள்ளவே நெடுவெண்பாவிற் கிழிந்தவெல்லை ஏழடியாகவும், அளவியல் வெண்பாவுக்கு இழிந்தவெல்லை நான்கடி யாக்வுங் கொள்ளப்படும். இங்ஙனம் அளவியல் வெண்பாச் சிறப்புடைமை நோக்கி ஆசிரியர், "அம்மை தானே யடிநிமிர் வின்றே" (செய்.236) என்று நெடுவெண்பா நேர்ந்திலர். அடிநிமிர் வின்றென்றது ஆறடியின் மிகாமையை.

உரையிற்கோடலென்பதனாற் செப்பிக் கூறுஞ் செய்யுட்கு நான்கடியே மிக்க சிறப்புடைத்தெனக் கொள்க. "சிறப்புடைப் பொருளைப் பிற்படக் கிளத்தல்" என்பதனாற் குறுவெண்பாவுஞ் சிறப்புடைமை பெறுதும். இக் கருத்தானே கீழ்க்கணக்கில் நான்கடியும் ஈரடியுமே மிக வந்தவாறும் முத்தொள்ளாயிரத்து நான்கடியே மிக வந்த வாறுங் காண்க.

(எ-டு) 'யாதானு நாடாமால்' **(குறள்.399)**

'இருதேவர் பார்ப்பாரிடை' **(ஆசாரக்.3)**

'துகடீர் பெருஞ்செல்வம்' **(நாலடி.செல்வ.)**

"இனிதுண்பா னென்பா னுயிர்கொல்லா துண்பான்
முனிதக்கா னென்பான் முகனொழிந்து வாழ்வான்
றனிய னெனப்படுவான் செய்தநன் றில்லா
னினிய னெனப்படுவான் யார்யார்க்கே யானு
முனியா வொழுக்கத் தவன்." **(நான்மணி.60)**

"ஆறெயின் மூன்று மழித்தா னடியேத்தி
யாரிடத்துத் தானறிந்த மாத்திரையா னாசாரம்
யாரு மறிவ தறனாக மற்றவற்றை
யாசாரக் கோவை யெனத்தொகுத்தான் றீராத்

திருவாயி லாய திறல்வண் கயத்தூர்ப்
பெருவாயின் முள்ளியென் பான்” (ஆசாரக்.காப்பு)

என இவை முறையே வந்தன. ஒழிந்த நெடுவெண்பாட்டு வந்துழிக் காண்க. (158)

## சிவலிங்கனார்

**நெடுவெண்.....................சீரே.**

(இ-ள்) நெடுவெண்பாட்டுக்குப் பேரெல்லை பன்னிரண்டடி; குறுவெண்பாட்டுக்குச் சிற்றெண் எழுசீரமைந்த இரண்டடி, எ-று.

**461. அங்கதப் பாட்டள வவற்றோ டொக்கும். (152)**

## இலக்குவனார்

471. The verse of satire is of the same limit.

## இளம்பூரணர்

**461. அங்கதப் பாட்டள[1] ............................... டொக்கும்.**

*என்-னின், அங்கதப்பாட்டிற்கு அளவுணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) அங்கதப் பாட்டாகிய வெண்பாவிற்கு எல்லை சிறுமை இரண்டடி, பெருமை பன்னிரண்டடி என்றவாறு.

உதாரணம் சில காட்டப்பட்டன; ஏனைய வந்தவழிக் காண்க. (152)

## பேராசிரியர்

**471. அங்கதப் பாட்டவற்.......................டொக்கும்.**

அங்கதப் பாட்டிற்கும் வெண்பாவே உறுப்பாகலான் ஈண்டு வைத்தான். இதுவும் மேற்கூறிய இரண்டெல்லையும் பெறுமென்றவாறு.

“இருடீர் மணிவிளக்கத் தேழிலார் கோவே
குருடேயு மன்றுநின் குற்ற - மருடீர்ந்த
பாட்டு முரையும் பயிலா தனவிரண்
டோட்டைச் செவியு முள” (ப.1146)

என்பது, நான்கடியான் வந்த அங்கதம்; பிறவும் அன்ன.

இது, மந்திரத்தின் வேறுபட்டு அடிவரைத்தாயினமையின் இதுவும் வெண்பாட்டுப் போன்று அமைந்துவரல் வேண்டுமென்றற்கும், இது வேறு

1. அங்கதப்பாட்டு - வசைப்பாட்டு

பாட்டெனப்படாமையின் அடி வரையின்றுகொ லென்னும் ஐயந் தீர்த்தற்கும் இதற்கே ஈண்டு அளவை கூறி, அதனொடும்,

"கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுள்" (430)

என்று ஓதப்பட்ட கைக்கிளைச் செய்யுள் முத்தொள்ளாயிரத்துட் போலப் பலவாயினும் அவற்றுக்கு அளவையும் வெண்பாவின் அளவேயென்று அடக்கினானென்பது. நூற்பாவாக அடிவரைப்படுவன உளவாயின வற்றுக்கும் இஃதொக்குமென்பது மேற்கூறுதும். (159)

## நச்சினார்க்கினியர்

**159. அங்கதப் பாட்டன......................டொக்கும்.**

*இது, வசைப்பாட்டெல்லை கூறுகின்றது.*

(இ-ள்) வசைப்பாட்டி னெல்லை முற்கூறியவைபோல ஈரடிச் சிறுமையும் பன்னீரடிப் பெருமையுமாய் வரும் எ-று.

(எ-டு) "இருடீர் மணிவிளக்கத் தேழிலார்"

இது நான்கடியான் வந்தது. பிறவுமன்ன. (159)

## சிவலிங்கனார்

**அங்கதம்................................டொக்கும்.**

(இ-ள்) அங்கதப்பாட்டிற்கும் (வெண்பாயாப்பில் வருவது) பேரெல்லை பன்னிரண்டடி; சிற்றெல்லை ஈரடி எ-று.

**அடிவரையறை யில்லாதன**

**462. கலிவெண் பாட்டே கைக்கிளைச் செய்யுள்**
**செவியறி[1] வாயுறை புறநிலை என்றிவை**
**தொகைநிலை[2] மரபின் அடியில என்ப. (153)**

## இலக்குவனார்

472. *Kalivenbāttu, kaikkiḷai* verse *seviyaṟi, vayuṟai* and *puṟanilai* these have no limit of lines - they say.

## இளம்பூரணர்

**462. கலிவெண் பாட்டே......................என்ப.**

*என்-னின், அடியளவு வரையறையில்லாத செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.*

---

1. புறநிலை வாயுறை செவியறிவு எனப் பாடம் கொள்வர் நச்.
2. தொகுநிலை - பேரா. நச். பாடம்

(இ-ள்) கலிவெண்பாட்டும், கைக்கிளைப் பொருளைப்பற்றிய பாவும், செவியுறை வாழ்த்து, வாயுறை வாழ்த்து, புறநிலைவாழ்த்து என்ற பொருண்மைக்கண் வரும் வெண்பாக்களும் அளவு வரையறுக்கப்படா; பொருள் முடியுங்காறும் வேண்டிய அடி வரப்பெறும் என்றவாறு. (153)

**செய்யுளியல் பகுதி-3 இளம்பூரணர் உரை**
**முற்றிற்று.**

## பேராசிரியர்

**472. கலிவெண் பாட்டே......................வென்ப.**

*இஃது, எய்தாத தெய்துவித்தது, அளவை கூறாதவற்றுக்கு அளவை கூறினமையின்.*

(இ-ள்) இவை ஐந்தும் பெருமைக்கு எல்லை இத்துணையெனத் தொகுத்துக் கூறுந் தன்மையுடைய அளவாய் வரும் அடியையுடையவல்ல என்றவாறு.

கலிவெண்பாட்டென்பது, ஒருபொருணுதலுதலால் திரிபின்றி நடப்பதன்றிப் பன்னிரண்டடியின் இகந்து வந்து,

"தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்து" (466)

வாராது ஒன்றேயாகி வருவதெனக் கொள்க.

கைக்கிளைச் செய்யுளென்பது கைக்கிளைப் பொருட்கு உரித்தாய் வரும் மருட்பாவென்றவாறு. அஃதேல், ஈண்டோதிய கலிவெண்பாட்டு மொழிந்த கைக்கிளைப் பொருண்மேல் வாராவோவெனின், வருமென்பது,

"நாடக வழக்கினு முலகியல் வழக்கினும்" (53)

என்புழிக் கொண்டாமென்பது. எனவே, வெண்பாட்டல்லாதன கலிப்பாட்டுகள் கைக்கிளைப் பொருண்மேல் வந்தவழியும் அவற்றுக்கு அளவை மேற்கூறியவாற்றானே அடங்குமென்பதாயிற்று. செவியறி வாயுறை புறநிலையென்பன மேல்,

"கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ" (422)

என, ஒழிந்த பாவான் வருமெனப்பட்ட பொருண்மேல் வருஞ் செய்யுள் ஆண்டோதியவற்றிற்கு ஈண்டு அளவை கூறானோவெனின், அஃது ஆசிரியமும் வெண்பாவுமாகி வேறு வருதலின் முற்கூறிய வகையானே அடங்குமென்பது. மற்றுக் கொச்சகவொருபோகாகியுந் தொடர்நிலைச் செய்யுட்கண் வருமால் அவையடக்கெனின், அஃது,

"யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடைய" (461)

கொச்சக வொருபோகென் றொழிக.

"தொகுநிலை யளவி னடியில" (472)

என்பது, விரவுறுப்புடைய வெண்கலியும் கொச்சகக்கலியும் உறழ்கலியு மென்றிவற்றிற்குமேல் அம்போதரங்கம் பெற்ற அளவினை முதலாக நாட்டிக்கொண்ட 'தொகுநிலை யளவு' எனப்பட்ட அடிமேல் அடியிகந்தோடா வென்றவாறு. 'தொகுநிலையளவு' என்பது, தலையளவு இடையளவு கடையள வெனப்பட்ட அம்போதரங்கம் மூன்றற்கும் பெருகிய வெல்லையாகி அளவின் விரியாது அவற்றுக்குச் சுருங்கிய வெல்லையாகி அறுபதும், முப்பதும், பதினைந்து மெனத் தொக்குநிற்கும் அளவினவாகிய அடிமே லேறா வென்றவாறு. தொகுமளவென்னாது 'தொகுநிலை' என்றான் மூன்று தொகையினும் முப்பஃதாகிய இடைநிலைத் தொகையே கோடற்கென்பது. 'இன்'னென்னும் ஐந்தாமுருபு நீக்கத்தின்கண் வந்தமையின் முப்பஃதடியின் இகந்துவரும் அடி இலவென்றவாறு. இனி, அம் முப்பஃதாகிய தொகுநிலை இவ் வைந்தற்கும் நீண்ட வடிக்கு எல்லையாதலின், தொகுநிலை யென்னாது 'அளவு' என்றானென்பது, 'நீண்டதனை அளவுடைத்து' என்பவாகலின். மற்றிங்ஙனம் இவை முப்பஃதடியின் மேல் வாராவென்று பெருக்கத்திற் கெல்லை கூறவே, சுருக்கத்திற்கெல்லை வரையறையிலவென்றானாம்; ஆகவே, இரண்டடியானும் வருமென்றானாம் பிறவெனின், அற்றன்று; 'ஒருபொருணுதலிவருங் கலிவெண்பாட்டாயிற்' பன்னீரடி இகவாதென்பது.

"திரிபின்றி வருவது கலிவெண் பாட்டு" (465)

என்றவழிப் போதுமாகலின், ஈண்டு ஓதிய கலிவெண்பாட்டுப் பதின்மூன்றடியிற் சுருங்காதென்பது பெற்றாம். இது கைக்கிளைப் பொருண்மேல் வந்ததாயினும் ஒக்கும்.

ஒழிந்த நான்கும் மருட்பாவாதலான்,

"வெண்பாவாகி யாசிரிய வியலான் முடியவும் பெறும்" (431)

என்றானாகலானும்,

"வெண்பா வியலினு மாசிரிய வியலினும்
பண்புற முடியும்" (473)

என வருகின்ற சூத்திரத்தானும், அவ் விரண்டு பாவின் கூட்டம் இரண்ட டியால் வாராவாகலானும், அவையும் நான்கடியிற் சுருங்காவென்பது உய்த்துக்கொண்டுணரவைத்தான் என்பது; என்னை? கைக்கிளைப் படலத்துள்,

"போற்றி வெண்பா வாகி மற்றத
னிறுதி யைஞ்சீ ராசிரி யம்மே"

என்றாராகலின் மற்று மூன்றடியிற் சுருங்காது ஆசிரியமாதலானும் இரண்டடியிற் சுருங்காது வெண்பாவாதலானும் இவ் வைந்தடியிற் சுருங்காவென்று கொள்க. இது,

"பண்புற முடியும் பாவின" (473)

என மேற்சொல்லுதும். அவற்றுக்குச் செய்யுள்:

"நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தா
மஞ்சிய தாங்கே யணங்காகு மென்னுஞ்சொ
லின்றீங் கிளிவியாய் வாய்மன்ற நின்கேள்
புதுவது பன்னாளும் பாராட்ட யானு
மிதுவொன் றுடைத்தென வெண்ணி யதுதேர
மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுட்
பாயல்கொண் டென்றோட் கனவுவா ராய்கோற்
றொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்
கடிமனை காத்தோம்ப வல்லுவள் கொல்லோ
விடுமருப் பியானை யிலங்குதேர்க் கோடு
நெடுமலை வெஞ்சுரம் போகி நடுநின்று
செய்பொருண் முற்று மளவென்றா ராயிழாய்
தாமிடை கொண்ட ததுவாயிற் றம்மின்றி
யாமுயிர் வாழு மதுகை யிலேமாயிற்
றொய்யி றுறந்தா ரவரெனத் தம்வயி
னொய்யார் நுவலும் பழிநிற்பத் தம்மொடு
போயின்று சொல்லென் னுயிர்" (கலி.24)

என்பது, பதினேழடியான் வந்த கலிவெண்பாட்டு.

"சுடர்த்தொடீஇ கேளாய் தெருவினா மாடு
மணற்சிற்றில் காலிற் சிதையா வடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யுஞ் சிறுபட்டி மேலோர்நா
ளன்னையும் யானு மிருந்தேமா வில்லிரே
யுண்ணுநீர் வேட்டே னெனவந்தாற் கன்னை
யடர்பொற் சிரகத்தால் வாங்கிச் சுடரிழா
யுண்ணுநீ ரூட்டிவா வென்றா ளெனயானுந்
தன்னை யறியாது சென்றேன்மற் றென்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்
டன்னா யிவனொருவன் செய்ததுகா ணென்றேனா
வன்னை யலறிப் படர்தரத் தன்னையா
னுண்ணுநீர் விக்கினா னென்றேனா வன்னையுந்
தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்
கடைக்கணாற் கொல்வான்போ னோக்கி நகைக்கூட்டஞ்
செய்தானக் கள்வன் மகன்" (கலி.51)

என்பது ஒருபொருணுதலிப் பதினாறடியான் வந்தது.

"திருந்திழாய் கேளாய்நம் மூர்க்கெல்லாஞ் சாலும்
பெருநகை யல்க னிகழ்ந்த தொருநிலையே

மன்பதை யெல்லா மடிந்த விருங்கங்கு
லந்துகிற் போர்வை யணிபெறத் தைஇநம்
மின்சாயன் மார்பன் குறிநின்றேன் யானாகத்
தீரத் தறைந்த தலையுந்தன் கம்பலுங்
காரக் குறைந்து கறைப்பட்டு வந்துநஞ்
சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானைத்
தோழிநீ போற்றுதி யென்றி யவனாங்கே
பாராக் குழறாப் பணியாப் பொழுதன்றி
யாரிவ ணின்றீ ரெனக்கூறிப் பையென
வைகாண் முதுபகட்டிற் பக்கத்திற் போகாது
தையா றம்பலந் தின்றியோ வென்றுதன்
பக்கழித்துக் கொண்டீ யெனத்தரலும் யாதொன்றும்
வாய்வாளே னிற்பக் கடிதகன்று கைமாறிக்
கைப்படுக்கப் பட்டாய் சிறுமிநீ மற்றியா
னேனைப் பிசாசரு ளென்னை நலிதரி
னிவ்வூர்ப் பலிநீ பெறாஅமற் கொள்வே
னெனப்பலவுந் தாங்காது வாய்பாடி நிற்ப
முதுபார்ப்பா னஞ்சின னாத லறிந்தியா னெஞ்சா
தொருகை மணற்கொண்டு மேற்றூவக் கண்டே
கடிதரற்றிப் பூச றொடங்கின னாங்கே
யொடுங்கா வயத்திற் கொடுங்கேழ்க் கடுங்க
ணிரும்புலி கொண்மார் நிறுத்த வலையுளோ
ரேதில் குறுநரி பட்டற்றாற் காதலன்
காட்சி யழுங்க நம்மூர்க் கெலாஅ
மாகுல மாகி விளைந்ததை யென்றுந்தன்
வாழ்க்கை யதுவாகக் கொண்ட முதுபார்ப்பான்
வீழ்க்கைப் பெருங்கருங் கூத்து" **(கலி.65)**

என்பது, இருபத்தொன்பதடியான் வந்த கலிவெண்பாட்டு. ஒழிந்தனவும் அன்ன. நூற்றைம்பது கலியுள்ளுங் கைக்கிளைபற்றி இவ்வாறு வருங் கலிவெண்பாட்டுக் காணாமாயினமையிற் காட்டாமாயினாம். இலக்கணமுண்மையின் இலக்கியம் பெற்றவழிக் கண்டுகொள்க.

"கனவினிற் காண்கொடாக் கண்ணுங் கலந்த
நனவினுண் முன்விலக்கு நாணு - மின்வங்கம்
பொங்கோதம் போழும் புகாஅர்ப் பெருமானார்
செங்கோல் வடுப்படுப்பச் சென்று." **(முத்தொள்.59)**

இது, கைக்கிளைபற்றி வந்த கலிவெண்பாட்டென்னாமோவெனின், என்னாமன்றே; அது பாடாண்டிணைப் புறப்பொருளாகலானும் ஒருபொருணுதலுதல் ஐந்திணைக்கண்ணதேயாகலானும் பன்னிரண்டடியின் இகந்ததன்றாகலானும் வெண்பாவேயாமென்பது. இப் பொருட்பகுதி யுணராதாரும், இது மரபென்பதறியாதாரும், நூற்றைம்பது கலியுள்ளும்

இவை கோப்புண்டனவென்பது நினையாதாரும் இவற்றுள் ஒரு பொருணுதலியவை ஒழிந்தனவெல்லாம் வெண்பாவென்று அடிவரை கூறாதொழிப. அங்ஙனம் மரபழியக் கூறின் ஒரு சாத்தனை நாட்டி அவனைக் காமுற்று இவன் இன்னவாறாயினானென ஆசிரியத்தானும் வஞ்சியானும் பொருள்வேற்றுமையுடைய ஒருசார்க் கொச்சகமல்லாத கலிப்பாவினானுஞ் செய்யுள் செய்தலும், இனி அதனிலையாகிய ஆண்பாற் கைக்கிளை ஆசிரியத்தானும் வஞ்சியானும் வருதலும், பிறவும் இன்னோரன்னவெல்லாம் புலனெறிவழக்கினுட் காட்டல் வேண்டுமென மறுக்க வென்றார்க்கு வரைவுகடாதற்கண்ணுந் தலைவனை அன்பில னாகச் சொல்லுவன பாடாண்டிணைக் கைக்கிளையாகாவோ வெனின், அவை சுட்டியொருவர்ப் பெயர்(54)கொள்ளாமையின் ஆகாவென்பது. அஃதேல்,

"விடியல்வெங் கதிர்காயும் வேயம லகலறை" **(கலி.45)**

என்னுங் குறிஞ்சிப்பாட்டினுள்,

"கால்பொர நுடங்கல கறங்கிசை யருவிநின்
மால்வரை மலிசுனை மலரேய்க்கு மென்பதோ
புல்லாரப் புணர்ச்சியாற் புலம்பிய வென்றோழி
பல்லிதழ் மலருண்கண் பசப்பநீ சிதைத்ததை"

எனவும்,

"நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும்" **(கலி.99)**

என்னும் மருதப்பாட்டினுள்,

"அறனிழ லெனக்கொண்டா யாய்க்குடை யக்குடைப்
புறநிழற்கீழ்ப் பட்டாளோ விவளிவட் காண்டிகா
பிறைநுதல் பசப்பூரப் பெருவிதுப் புற்றாளை"

எனவும், இவை சுட்டியொருவர்ப் பெயர்கொள்ளாக் கைக்கிளை வந்தனவாலெனின், அற்றன்று; தலைமக னன்பின்மையே மெய்யாயி னன்றே அன்னதாவது; இவை அன்னவன்றி வரைவுகடாவலும் ஊடலுங் காரணமாக அன்பிலனென்று இல்லது சொல்லினமையின் அவை ஒருதலை யன்பாகா வென்பது. மற்று,

"என்னை புற்கையுண்டும் பெருந்தோ ளன்னே
உமணர் வெரூஉந் துறையன் னன்னே" **(புறம்..84)**

என்னும் புறநானூற்றுப் பாட்டும் பெண்பாற் கைக்கிளையாதலின் அதனை ஆசிரியத்தான் வாராதென்ற தென்னை யெனின்,

"ஒத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின" (430)

என்புழி, சிறுபான்மை தலைவிகூற்றாகியே வருவன அமையுமென்று போதந்தாமாகலின் அதுவே பெருவிதியாகாதென்பது.

இனிக் கைக்கிளை வருமாறு:

"திருநுதல் வேரரும்புந் தேங்கோதை வாடு
மிருநிலஞ் சேவடியுந் தோயு - மரிபரந்த
போகித முண்கணு மிமைக்கு
மாகு மற்றிவ ளகலிடத் தணங்கே." (பு.வெ.மா.11:3)

இது, நெஞ்சிற்கு உரைத்தது எனத் தலைமகன் சொல்லினது; நற்காம மன்றாமாகலின். இக் கருத்தினானே இதனைப் புறத்திணையுட் கொண்டாருங் கைக்கிளைப் படலத்து,

"நெஞ்சிற் குரைத்தலுங் கேட்போ ரின்றி
யந்தர மருங்கிற் கூறலு மல்லது
சொல்லுங் கேட்டலு மில்லை யாக
வகத்திணை மருங்கி னைவகை யானு
மிகத்த லென்ப விவ்வயி னான"

என்றாரெனக் கொள்க.

பாடாண் கைக்கிளைக்கும் ஈண்டே அளவுகூறுகவெனின், கலிவெண்பாட்டினைக் கைக்கிளையென்னாமாயினன்றே அதுகடா வாவது. மருட்பாவிற்குக் கைக்கிளைப் பகுதி வரைந்தோதல் வேண்டுவ தின்மையின் அதற்கும் இதுவே அளவாமென்பது. ஒழிந்த மருட்பா மூன்றற்கும் உதாரணம் மேற்காட்டுதும். இக்காலத்தார் 'ஏறிய மடற்றிறம்' (51) என்னும் பெருந்திணைப் பொருண்மேலும், 'காமஞ் சாலா விளமையோள்' (50) ஒழிந்த மகளிரொடுங் கூட்டியுரைக்குங் கைக் கிளைப் பொருண்மேலும், கலிவெண்பாட்டெனப் பெயர் கொடுத்துச் செய்யுள் செய்பவால், அவை அவ்வாறு செய்தற்கும் அவை முப்பதிற் றடியின் இகந்து எத்துணையடியினும் ஏற்குமென்றற்கும் என்னை ஓத்தெனின், அவ்வாறு வருமென்பது இந் நூலுட் பெற்றிலமாயினும் இருபதின்சீர்க் கழிநெடிலடியானும் இதுபொழுது செய்யுள் செய்யுமாறு போலக் காட்டலான் அமையும். அவை புலனெறி வழக்கிற்குச் சிறந்தில வாகலிற் சிறுபான்மை யென்றொழிக. (160)

**செய்யுளியல் பகுதி-3 பேராசிரியர் உரை முற்றிற்று.**

## நச்சினார்க்கினியர்

**160. கலிவெண் பாட்டே..............................வென்ப.**

*இது, 'ஒருபொரு ளுதலிய' (செய்.154) என்னுஞ் சூத்திரத்திற் சீர்வகைக் கலிவெண்பாவிற்கும், நால்வகை மருட்பாவிற்கும் அடிவரையறையின்மை கூறுகின்றது.*

(இ-ள்) கலிவெண்பாட்டே கைக்கிளைச் செய்யுள் புறநிலை வாயுறை செவியறிவு என்றிவை - கலிவெண்பாட்டு, கைக்கிளைச்

செய்யுள், புறநிலைவாழ்த்துப் பொருள்மேல் வரும் செய்யுள், வாயுறை வாழ்த்துப் பொருள்மேல் வரும் செய்யுள், செவியறிவுறூஉப் பொருள் மேல் வரும் செய்யுள் என்று இவ் வைந்தும்; தொகுநிலை அளவின் அடியில என்ப - பெருமைக்கு எல்லை இத்துணையெனத் தொகுத்துக் கூறும் தன்மையை உடைய அளவால் வரும் அடியையுடைய அல்லவென்று கூறுவர் புலவர் எ-று.

(எ-டு)"சுடர்த்தொடீஇ கேளாய் தெருவினா மாடும்" (கலி.51)

இது, ஒருபொருணுதலிப் பதினாறடியான் வந்தது.

"திருந்திழாய் கேளாய்" (கலி.61)

என்பது இருபத்தொன்பதடியான் வந்தது.

இதனைக் கைக்கிளையோ டெண்ணுதலிற் கைக்கிளைப் பொருளொடுங் கலிவெண்பாட்டு வருதல் கொள்க. அது கலித்தொகைக் கணின்றமையிற் காட்டாமாயினாம். ஒழிந்த வுறுப்போடு கூடிய கலிவெண்பாட்டுகள் பெற்ற அடிவரையறையும் அவ் வுதாரணங்களுட் காண்க. இனி,

"கனவினிற் காண்கொடாக் கண்ணுங் கலந்த
நனவினுண் முன்விலங்கு நாணு - மினவங்கம்
பொங்கோதம் போழும் புகாஅர்ப் பெருமானார்
செங்கோல் வடுப்படுப்பச் சென்று." (முத்தொள்.90)

இது புறப்புறக் கைக்கிளை.

இதனைக் கைக்கிளைப் பொருண்மேல் வந்த கலிவெண்பாட் டெனின் இது சுட்டி யொருவர்ப் பெயர் கொண்ட பாடாண்டிணைப் புறப்பொருளாகலானுங் கலிவெண்பாட்டு அப் பொருண்மேல் வருதல் சிறுபான்மை யாதலானும் இது பன்னீரடியி னிகவாது வருதலானும் வெண்பாவேயாம். இவ்வாறு புறப்பொருளான் வந்து இரண்டுறுப்பாயும் ஓருறுப்பாயும் பாவும் பொருளும் வேறுபட்டு வெள்ளடியி னிகந்து வருங் கலிவெண்பாவாகிய உலாச் செய்யுள் அடிவரையின்றி வருமாறும் பெருந்திணைப் பொருண்மேல் வரும் மடற்செய்யுளும் ஓருறுப்பாய் அடியிகந்து வருமாறும் இக்காலத்துக் கூறுகின்றவற்றுட் காண்க. அது திருவுலாப்புறத்துள்ளும் "வாமான வீசன் வரும்"(ஆதியுலா) என முடித்து மேல் வேறோ ருறுப்பாயவாறும் ஒழிந்த உலாக்களுள் வஞ்சியுரிச்சீர் புகுந்தவாறும் அடிவரையறையின்மையுமாம். அகப்புறமும் புறப்புறமுமாய மருட்பாவாய்க் கைக்கிளை அடிவரையறையின்றி வந்தன வந்துழிக் காண்க. காமஞ்சாலா இளமையோள்வயின் வந்த கைக்கிளையுங் காட்சி முதலிய கைக்கிளையும் ஆசிரியத்தினும் வஞ்சியினும் வாரா. எனவே யொழிந்த பாவினுள் எல்லாக் கைக்கிளையும் வருமாயிற்று.

"என்னை, புற்கை யுண்டும் பெருந்தோ ளன்னே
யாமே, புறஞ்சிறை யிருந்தும் பொன்னன் னம்மே

போரெதிர்ந் தென்னை போர்க்களம் புகினே
கல்லென் பேரூர் விழவுடை யாங்க
ணேமுற்றுக் கழிந்த மள்ளர்க்
குமணர் வெரூஉந் துறையன் னன்னே." (புறம்.84)

இது, சுட்டி யொருவர்ப் பெயர் கொள்ளாத பாடாண்டிணைக் கைக்கிளை.

"விடியல் வெங்கதிர்" (கலி.45)

என்னுங் குறிஞ்சிப்பாட்டினுள்,

"கால்பொர நுடங்கலிற் கறங்கிசை யருவிநின்
மால்வரை மலிசுனை மலரேய்க்கு மென்பதோ
புல்லாராப் புணர்ச்சியாற் புலம்பிய வென்றோழி
பல்லிதழ் மலருண்கண் பசப்பநீ சிதைத்ததை"

என்பதூஉம்,

"நறவினை வரைந்தார்க்கும்" (கலி.99)

என்னும் மருதப்பாட்டினுள்,

"அறநிழ லெனக்கொண்டாய் நின்குடை யக்குடை
புறநிழற் பட்டாளோ விவளிவட் காண்டிகா
பிறைநுதல் பசப்பூரப் பெருதுவிறுப் புற்றாளை"

என்பதூஉம் சுட்டி யொருவர்ப் பெயர் கொள்ளாத கைக்கிளையா மெனின் இவை தலைவன் அன்பின்மை மெய்யாயினன்றே கைக்கிளை யாவது; அவ் வரைவு கடாவலும் ஊடலுங் காரணமாக அன்பில னென்றலின் ஒருதலைக் காமமன்று. ஒழிந்த அடிவரையின்றி வருமாறு மேற்கொள்க. (160)

**செய்யுளியல் பகுதி-3 நச்சினார்க்கினியர் உரை முற்றிற்று.**

## சிவலிங்கனார்

**கலிவெண்..........................என்ப.**

(இ-ள்) கலிவெண்பா, கைக்கிளைப் பொருளில் வரும். வெண்பா, செவியறிவுரைப்பாட்டு, வாயுறைவாழ்த்துப்பாட்டு, புறநிலைவாழ்த்துப் பாட்டு என்ற இவை அடிவரையறையில, எ-று.

**செய்யுளியல் பகுதி-3 சிவலிங்கனார் எளிய உரை முற்றிற்று.**

# தொல்காப்பியம் உரைவளம்
## பொருளதிகாரம் செய்யுளியல் பகுதி-3
## முற்றும்.

# சூத்திர முதற்குறிப்பு அகராதி

**(எண் - பக்க எண்)**

## சொல்லகராதி

(எண் - சூத்திர எண்)

# பயன்படுத்தப்பெற்ற நூல்கள்

1. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - இளம்பூரணர் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1953

2. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - பேராசிரியர் இரண்டாம் பாகம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1935

3. தொல் - பொருள் - செய்யுளியல், நச்சினார்க்கினியர் உரை - மேற்படி கழக வெளியீடு, 1965

4. தொல்காப்பியம் பொருளதிகாரம் (இரண்டாம் பாகம்) பின்னான் கியல்களும் பேராசிரியரும், பிரமஸ்ரீ சி. கணேசையர் பதிப்பு, திருமகள் அழுத்தகம், சுன்னாகம், 1943

5. இறையனாரகப்பொருள் - மேற்படி கழக வெளியீடு, 1953

6. நம்பி அகப்பொருள் - மேற்படி கழக வெளியீடு, 1966

7. இலக்கண விளக்கம் - மேற்படி கழக வெளியீடு, 1973

8. முத்துவீரியம் - மேற்படி கழக வெளியீடு, 1972

9. தொன்னூல் விளக்கம், தமிழ்ப் பதிப்பகம், அடையாறு, சென்னை, 1978

10. Tolkappiyam With Critical Studies - Prof. Ilakkuvanar, Kural Neri Publishing House, Madurai - 6, 1963

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

## சென்னை – 600 113

### அண்மை வெளியீடுகள்

| | ரூ.காசு |
|---|---|
| யாப்பருங்கல விருத்தி | 170.00 |
| இராசேந்திரன் (நாடகம்) | 55.00 |
| முல்லை | 25.00 |
| திராவிட மொழியின் மூவிடப்பெயர் | 40.00 |
| தமிழ்நாட்டு வரலாற்றின் இலக்கிய ஆதாரங்கள் கி.மு. 200 - கி.பி. 1300 | 100.00 |
| வெள்ளுடை வேந்தர் தியாகராயரின் வாழ்வும் பணியும் | 65.00 |
| தமிழ் நாடகமேடை முன்னோடிகள் | 40.00 |
| தமிழ்வள்ளல் பாண்டித்துரையார் | 25.00 |
| தேவநேயப் பாவாணரின் மொழியியல் - வரலாற்றுக் கொள்கை | 35.00 |
| தமிழ்விடு தூது | 20.00 |
| கபிலர் | 70.00 |
| கன்னடத்தில் காரைக்காலம்மையார் வரலாறு | 20.00 |
| நாட்டிய நன்னூல் | 25.00 |
| சங்க இலக்கியத்தில் கலையும் கலைக்கோட்பாடும் | 65.00 |
| கதிர்வேற் பிள்ளை - தமிழ்ச் சொல்லகராதி, மூன்று பாகங்கள் | 600.00 |
| எண்பத்து மூன்றில் தமிழ், பகுதி -3 | 30.00 |
| காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் - ஓர் ஆய்வு | 60.00 |
| திருக்குற்றாலநாத சுவாமி கோவில் வரலாறும் பண்பாடும் | 60.00 |
| உத்தர ராம சரிதம் | 30.00 |
| பம்மல் சம்பந்த முதலியாரின் உரைநடை நூல்கள் தொகுதி -1 | 50.00 |
| பம்மல் சம்பந்த முதலியாரின் உரைநடை நூல்கள் தொகுதி -2 | 40.00 |
| சதாசிவப் பண்டாரத்தார் ஆய்வுக் கட்டுரைகள் | 40.00 |
| சங்கத் தமிழர் வாழ்வியல் | 75.00 |
| வேதகிரியார் சூடாமணி நிகண்டு | 65.00 |
| தமிழக மேடைநாடகப் பெண்கலைஞர்கள் குறிப்பேடு | 25.00 |
| A Grammar of Contemporary Literary Tamil | 80.00 |
| Cilappatikaram | 100.00 |
| காதம்பரி மூலமும் வசனமும் | 125.00 |
| Tamil Culture and Civilization | 60.00 |
| Tolkappiyam and Astadhyayi | 110.00 |
| தமிழக மகளிர் தொடக்ககாலம் முதல் ஆறாம் நூற்றாண்டு வரை | 50.00 |
| தொல்காப்பியம் உரைவளம் - பொருள் - செய்யுளியல் பகுதி -1 | 50.00 |
| தடிவீர சுவாமி கதை, வன்னியராயன் கதை | 55.00 |
| சடத்தலம் | 40.00 |
| காத்தவராய நாடகம் | 30.00 |
| மதங்க சூளாமணி | 40.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 32.00 |
| தமிழில் நவீன நாடகம் | 70.00 |
| இலக்கியத்தில் சோதிடம் | 65.00 |
| சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும் | 80.00 |